உ

கணபதி துணை

# நல்லுரைக் கோவை

[முதற்பாகம்]

Nalluraikkovai

1515

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி

**டாக்டர் உ. வே. சாமிநாதையர்**

எழுதியது.

ஸ்ரீ

கார்டியன் அச்சுக்கூடம்
சென்னை

 1937 [விலை 12 அணா

# பொருளடக்கம்



# முகவுரை

அவ்வப்பொழுது பத்திரிகைகளில் நான் எழுதி வந்த வரலாறுகளையும், நூதனமாக எழுதியவற்றையும் தொகுத்து, "நான் கண்டதும் கேட்டதும்", "புதியதும் பழையதும்" என்னும் இரண்டு புத்தகங்களாகச் சில மாதங்களுக்குமுன் வெளியிட்டேன். அவற்றைப் படித்த தமிழன்பர்கள் பலர், "இப்படியே நீங்கள் எழுதிய பிறவற்றையும் ஞாபகத்திலுள்ளவற்றையும் சேர்த்து வெளியிடவேண்டும்" என்றுகூறி ஊக்கம் அளித்தார்கள். சில அன்பர்கள் அவற்றிற் சிலவற்றை ஆங்கிலத்திலும், ஹிந்தியிலும் மொழிபெயர்த்துப் பத்திரிகைகளில் வெளியிட்டனர். என்னுடைய பழைய ஞாபகங்கள் எனக்கு இன்பந் தருவதுபோலவே பிறருக்கும் இன்பந் தருவனவாகவுள்ளன வென்பதை யறிந்து இறைவன் திருவருளை வாழ்த்துகின்றேன்.

இதுவரை எழுதிவந்த வரலாறுகளில் மேலே குறிப்பிட்ட இரண்டு புத்தகங்களிலும் சேர்க்கப்படாதவற்றையும், அவ்வப்போது எழுதிய கட்டுரைகளையும், செய்த பிரசங்கங்களையும் தொகுத்து "நல்லுரைக் கோவை" என்னும்

பெயரோடு இப்போது வெளியிடத் தொடங்கினேன். அங்ஙனம் தொடங்கியவற்றில் இது முதற்பாகம். இதனுள் எட்டு விஷயங்கள் அடங்கியுள்ளன. "தருமம் தலைகாக்கும்", அரியிலூர், பூண்டி அரங்கநாத முதலியார், "அப்படிச் சொல்லலாமா?" என்பவை கலைமகளிலும், வன்றொண்டரென்பது இரங்கூன் தனவணிகன் பொங்கல் மலரிலும், ஆடல் பாடலென்பது ஆடல்பாட லென்னும் பத்திரிகையின் முதல் ஆண்டு மலரிலும், பொன்காத்த கிழவியென்பது ஆனந்தவிகடன் தீபாவளிமலரிலும் வெளிவந்தவை. பண்டைக் காலத்துப் பள்ளிக்கூடங்களென்பது புரசபாக்கம் ஸர். எம். ஸி. டி. முத்தைய செட்டியாரவர்கள் உயர்தரப் பள்ளிக்கூடத்திற் செய்த பிரசங்கம்.

இப்புத்தகத்தைப் பதிப்பிப்பதற்கு ஊக்கமுண்டாக்கிய அன்பர்களுக்கும், பத்திரிகாசிரியர்களுக்கும், இதன் பதிப்பிற் பலவகையான உதவி செய்தவர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

இந்நூலின் பிறபாகங்கள் தொடர்ந்து வெளிவரும்.

'தியாகராஜ விலாசம்'
திருவேட்டீசுவரன்பேட்டை
சென்னை, 12-2-37

இங்ஙனம்,
**வே. சாமிநாதையர்.**

உ

கணபதி துணை

# நல்லுரைக்கோவை

## முதற்பாகம்

### 1. 'தருமம் தலைகாக்கும்'

#### 1

கொள்ளிடத்தின் வடகரையில் ஆங்கரை என்பதோர் ஊர் உண்டு. அது திருச்சிராப் பள்ளி ஜில்லா லாலுகுடி தாலூகாவில், லாலு குடிக்கு வடமேற்கே இரண்டுமைல் தூரத்தில் பல ஊர்களுக்குச் செல்லும் சாலைக்கு இடையே அமைந்துள்ளது. அங்கே உள்ள அக்கிரகாரம் இருநூறுக்கு மேற்பட்ட அந்தணர்களின் வீடு களை உடையது. அவர்களிற் பெரும்பாலோர் ஸ்மார்த்தப் பிராமணர்களுள் மழநாட்டுப் பிரகசரணமென்னும் வகுப்பைச் சார்ந்தவர் கள். அவர்கள் யாவரும் சிவபக்தியுடைய வர்கள்; தங்கள் தங்களால் இயன்ற அளவு விருந்தினர்களை உபசரித்து உண்பிக்கும் வழக்

கம் உடையவர்களாக இருந்தனர். பழைய காலத்தில் இவ்வழக்கம் எல்லாச் சாதியினரிடத்துமே இருந்து வந்தது.

ஏறக்குறைய நூற்றைம்பது வருஷங்களுக்குமுன் மேற்கூறிய ஆங்கரையில் சுப்பையரென்ற செல்வர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு இரண்டாயிரம் ஏகரா நன்செய்கள் இருந்தன. அவை ஏழு கிராமங்களில் இருந்தன வென்பர். அவருடைய குடும்பம் பரம்பரையாகச் செல்வமுள்ளதாக விளங்கிய குடும்பம். அவர் தெய்வபக்தியும், ஏழைகளிடத்தில் அன்பும், தருமசிந்தனையும் வாய்ந்தவர்.

நாள்தோறும் காலையில் ஸ்நானம் செய்துவிட்டு அவர் பூஜை முதலியவற்றை முடித்துக் கொள்வார்; பிறகு போஜனம் செய்வதற்குமுன் வெளியே வந்து தம் வீட்டுத்திண்ணையில் யாரேனும் அதிதிகள் வந்துள்ளார்களா வென்று கவனிப்பார். திரிசிரபுரம், ஸ்ரீரங்கம், திருவானைக்கா முதலிய இடங்களுக்குப் பாதசாரிகளாகச் செல்பவர்களும் அவ்வூர்களிலிருந்து தங்கள் தங்கள் கிராமங்களுக்குச் செல்பவர்களுமாகிய வழிப்போக்கர்கள் அவருடைய வீட்டுக்கு வந்து திண்ணையில் தங்கியிருப்பார்கள். அவர்களைச் சுப்பையர் உள்ளே அழைத்துப் பசியாற அன்னமிட்டு உபசரிப்பது வழக்கம். அவர்

அன்னமிடுவதை யறிந்து பல பிரயாணிகள் அவர் வீட்டுக்கு வருவார்கள். அவருடைய வீடானது ஒரே சமயத்திற் பலர் இருந்து சாப்பிடும்படி விசாலமாக அமைந்திருந்தது. எல்லா வகையினருக்கும் அவரவர்களுக்கு ஏற்ற முறையில் அவர் உணவளிப்பார். பசியென்று எந்தநேரத்தில் யார் வரினும் அவர்கள் பசியை நீக்கும்வரையில் அவரது ஞாபகம் வேறொன்றி லும் செல்லாது.

தம்முடைய வீட்டிற்கு இரவும் பகலும் இங்ஙனம் வந்துபோவாரை உபசரித்து அன்ன மிடுவதையே தம்முடைய வாழ்க்கையின் பய னாக அவர் எண்ணினர். பசிப்பிணி மருத்துவ ராகி வாழ்ந்துவந்த அவருடைய புகழ் எங்கும் பரவியது. அவரை யாவரும் * அன்னதானம் ஐயரென்றும், அன்னதானம் சுப்பைய ரென்றும் வழங்கலாயினர்.

சுப்பையர் குடும்பம் மிகவும் பெரியது. அவருடைய சகோதரர்கள், அவர்களுடைய மனைவிமார், பிள்ளைகள், பெண்கள், மருமக்கள், பேரர்கள், பேத்திகள் முதலியோர் ஒரே குடும்ப மாக வாழ்ந்து வந்தனர். அன்னதானம் செய் யும்பொருட்டு அவர் தனியே சமையற்காரர்களை

* இவருடைய பரம்பரையினருள்ளும், இவருற வினர் பரம்பரையினருள்ளும் அன்னதான மென்ற பெயரையுடையவர்கள் இப்போதும் சிலர் உண்டு.

வைத்துக் கொள்ளவில்லை. அவர் வீட்டிலுள்ள பெண்பாலாரே சமையல் செய்வதும் வந்தோரை உபசரித்து அன்னமிடுவதுமாகிய வேலைகளைச் செய்துவந்தனர். சிறுபிள்ளைகள்முதற் பெரியவர்கள்வரையில் யாவரும் இலைகளைப் போட்டும், பரிமாறியும், பிற வேலைகளைப் புரிந்தும் தம்முடைய ஆற்றலுக்கு ஏற்றபடி உரிய காரியங்களைக் கவனிப்பார்கள். அதிதிகளுக்கு உபயோகப்படும்பொருட்டு அப்பளம், வடகம், வற்றல், ஊறுகாய்கள் முதலியவற்றை அவ்வப்போது செய்துவைக்கும் வேலையில் அவ்வீட்டுப் பெண்பாலார் ஈடுபட்டிருப்பார்கள். அவருடைய வீடு ஒரு சிறந்த அன்ன சத்திரமாகவே இருந்தது; குடும்பத்தினர் யாவரும் தர்மத்திற்காக அன்புடன் உழைக்கும் பணியாளர்களாக இருந்தனர்.

"இப்படி இருந்தால் எப்படிப் பணம் சேரும்? எப்பொழுதும் இந்தமாதிரியே நடத்தி வருவது சாத்தியமா?" என்று யாரேனும் சிலர் சுப்பையரைக் கேட்பார்கள். அவர், "பரம்பரையாக நடந்துவரும் இந்தத் தர்மத்தைக் காட்டிலும் மேற்பட்ட லாபம் வேறொன்று எனக்கு இல்லை. பசித்து வந்தவர்களுக்கு அன்னமிடுவதே சிவாராதனமென்று எண்ணுகிறேன். தெய்வம் எவ்வளவு காலம் இதை நடத்தும்படி கிருபை பண்ணுகிறதோ அவ்வளவு காலம் நடத்தியே வருவேன். நான்

செய்வது கெட்ட காரியமன்று என்ற திருப்தியே எனக்குப் போதும்'' என்பார்.

இங்ஙனம் அவர் இருந்துவரும் காலத்தில் ஒருசமயம் மழையின்மையாலும் ஆறுகளில் ஜலம் போதிய அளவு வாராமையாலும் நிலங்களில் விளைச்சல் குறைந்தது. ஆயினும் அவர் அன்னதானத்தைக் குறைக்கவில்லை. இப்படி ஒருவர் அன்ன மிடுகிறாரென்ற செய்தியை அறிந்த பல ஏழை ஜனங்கள் அங்கங்கே உண்டான விளைச்சற் குறைவினால் ஆதரவு பெறாமல் சுப்பையர் வீட்டிற்கு வந்து உண்டு அவரை வாழ்த்திச் சென்றார்கள். இதனால் அக்காலத்தில் வழக்கத்திற்குமேல் அவர் அன்னதானம் செய்ய நேர்ந்தது. ஆயினும் அவர் மனங் கலங்கவில்லை. நாயன்மார்களுடைய வரலாற்றை உணர்ந்திருந்த பரமசிவ பக்தராகிய அவர் இறைவன் சோதனைக்கு உட்பட்டு அந் நாயன்மார்கள் பின்பு நன்மை பெற்றதையறிந்தவராதலின், தம்முடைய நிலங்கள் விளைவு குன்றியது முதலியனவும் அத்தகைய சோதனையே என்றெண்ணினார். தருமம் தலைகாக்குமென்ற துணிவினால், எப்பொழுதும் செய்து வரும் சிறப்புக்குக் குறைவில்லாமல் அன்னதானத்தை நடத்திவந்தார். பொருள் முட்டுப்பாடு உண்டானமையால் தம் குடும்பத்துப் பெண்பாலாரின் ஆபரணங்களை விற்றும் அடகு வைத்தும் பொருள்பெற்று அன்னதானத்திற்

குப் பயன்படுத்தி வந்தார். அதனாற் குடும்பத்தினருக்குச் சிறிதேனும் வருத்தம் உண்டாகவில்லை; அப்பெண்களோ அந்த நகைகள் ஒரு நல்ல காரியத்துக்குப் பயன்பட்டது கருதி மகிழ்ந்தார்கள். அந்தக் குடும்பத்திலுள்ள யாவரும் ஆடம்பரமின்றி யிருந்தார்கள்.

பொருள் முட்டுப்பாடு அவ்வருஷத்தில் நேர்ந்தமையால் அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய 'கிஸ்தி'யை அவராற் செலுத்த முடியவில்லை. பெருந்தொகையொன்றை வரிப் பணமாக அவர் செலுத்த வேண்டியிருந்தது. அவ்வூர்க் கணக்குப்பிள்ளை மணியகாரர் ஆகிய கிராமாதிகாரிகள் இருவரும் வரிவசூல் செய்ய முயன்றார்கள். சுப்பையர் தம்முடைய நிலைமையை விளக்கினர். அவர்கள் சுப்பையருடைய உண்மை நிலையையும் பரோபகார சிந்தையையும் நன்கு அறிந்தவர்களாதலால் அவர் கூறுவது மெய்யென்றே எண்ணினர். ஆயினும் மேலதிகாரிகளுக்கு எவ்விதம் பதில் சொல்வது? அதனால் சுப்பையரைநோக்கி, "நாங்கள் என்ன செய்வோம்! உடனே வரியை வசூல் செய்ய வேண்டுமென்று எங்களுக்கு உத்தரவு வந்திருக்கிறதே!" என்றார்கள். சுப்பையர், "என்னால் வஞ்சனையில்லை யென்பது உங்களுக்கே தெரியும். நான் வரியை இப்போது செலுத்த முடியாத நிலையில் இருப்பதாக மேலதிகாரிகளுக்கே தெரிவியுங்கள். அவர்கள் இஷ்டம்போலச்

செய்துகொள்ளட்டும். அவர்கள் நிலத்தை ஏலம் போடக்கூடும். தெய்வம் எப்படி வழிவிடு கிறதோ அப்படியே நடக்கும்; அதுவே எனக்குத் திருப்தி" என்றார்.

சிலர் அவரிடம் வந்து, "இந்தக் கஷ்ட காலத்திற் கூட அன்னதானத்தை ஏன் வைத்துக்கொள்ள வேண்டும்? சிலகாலம் நிறுத்தி வைத்தால் வரியையும் கொடுத்துவிடலாம்; உங்களுக்கும் பணம் சேருமே" என்றார்கள். அவர், "இந்தக்காலத்தில் அன்னம் போடா விட்டால் இவ்வளவு நாள் போட்டும் பயன் இல்லை; இப்போதுதான் அவசியம் இந்தத் தர்மத்தைச் செய்துவரவேண்டும். கஷ்டமென்பது எல்லோருக்கும் இருப்பதுதானே? பல ஏழைகள் பசியோடு வரும்போது நாம் சும்மா இருப்பதைவிட இறந்துவிடலாம். இப்பொழுது கடன்பட்டாவது இந்தத் தர்மத்தைச் செய்து வந்தால் நன்றாக விளையும் காலத்தில் உண்டாகும் லாபத்தில் ஈடு செய்துகொள்ளலாம். இப்பொழுது செய்யாமல் நிறுத்திவிட்டால் அந்த நஷ்டத்திற்கு ஈடு செய்யவே முடியாது" என்றார்.

கணக்குப் பிள்ளையும் மணியக்காரரும் நடந்ததைப் *பேஷ்காரிடம் தெரிவித்தனர். அவர் வந்து பார்த்தார்; அவருக்கும் ஒன்றும்

* பேஷ்கார்–ரெவினியூ இன்ஸ்பெக்டர்.

தோன்றவில்லை; தாசில்தாருக்குத் தெரிவித்தார். அவர் மிக்க முடுக்கோடு வந்து பயமுறுத்தினார்; சிலகடுமையான தொந்தரவுகளையும்செய்து பார்த்தார். சுப்பையர் தம்முடைய நிலைமையை எடுத்துச்சொன்னார். தாசில்தார், "இந்த அன்ன தானத்தை நிறுத்திவிட்டுப் பணத்தைக்கட்டும்" என்று சொல்லவே சுப்பையர், "தாங்கள் அதைமட்டும் சொல்லக்கூடாது. எங்கள் பரம்பரைத் தர்மம் இது. இதை நிறுத்தி விடுவதென்பது முடியாத காரியம். என்னுடைய மூச்சு உள்ள வரையில் இதை நிறுத்தமாட்டேன்; எனக்கு என்ன துன்பம் வந்தாலும் வரட்டும்" என்றார்.

தாசில்தார், "இதெல்லாம் வேஷம்! அன்னம் போடுகிறேனென்று ஊரை ஏமாற்றுகிற வழி" என்றார். சுப்பையர்பால் சில காரணங்களால் பொறாமை கொண்ட குமாஸ்தாக்கள் சிலர் தாசில்தாரிடம் அவரைப்பற்றி முன்னமே கோள் கூறியிருந்தனர். தாசில்தாரும் கோபியாதலின் சுப்பையருடைய குணத்தை அறிந்து கொள்ளவில்லை.

"உம்மால் பணம் கொடுக்க முடியாவிட்டால் உம்முடைய நிலத்தை ஏலம் போடுவேன்" என்றார் தாசில்தார்.

"அவ்விதம் செய்வது அவசியமென்று உங்களுக்குத் தோன்றினால், தெய்வத்தி

னுடைய சித்தமும் அதுவாக இருக்குமானால், நான் எப்படி மறுக்கமுடியும்?" என்று சுப்பையர் பணிவாகக் கூறினர்.

தாசில்தார் நிலத்தை ஏலம் போட்டார்; 'இந்தத் தர்ம தேவதையின் நிலத்தை ஏலம் எடுத்தால் நம் குடும்பமே நாசமாகிவிடும்' என்ற பயத்தால் அவ்வூரிலுள்ளோரேனும் அயலூரினரேனும் வந்து ஏலம் எடுக்கத் துணியவில்லை. தம் அதிகாரமொன்றையே பெரிதாக நினைத்த தாசில்தாருக்கோ கோபம் பொங்கியது; மீசை துடித்தது; கண்கள் சிவந்தன; "இந்த மனுஷன் பொல்லாதவனென்று தெரிகிறது. இவனுக்குப் பயந்தே ஒருவரும் ஏலம் எடுக்க முன்வரவில்லை. இருக்கட்டும். இவனுக்குத் தக்கபடி ஏற்பாடு செய்கிறேன்" என்று சொல்லித் தாசில்தார் போய்விட்டார். சுப்பையரைப் போலவே வேறு பலர் வரிசெலுத்தவில்லை. ஆயினும் அவர்கள் செலுத்தவேண்டிய தொகை சிறிதாதலின் எவ்வாறேனும் வசூல் செய்துவிடலாமென்ற தைரியம் தாசில்தாருக்கு இருந்தது. சுப்பையர் பெருந்தொகை செலுத்தவேண்டியவராக இருந்தமையால் அவர்மீது தாசில்தாருக்கு இருந்த கோபத்துக்கு அளவில்லை. உடனே, தாசில்தார் பலரிடமிருந்து வரிவசூல் செய்யப்படவில்லை யென்பதையும் அவர்களுள் பெருந்தொகை செலுத்தவேண்டிய சுப்பையர் அதற்குரிய முயற்சியொன்றும்

செய்யாமல் இருப்பதையும், அவருடைய நிலத்தை ஏலம் எடுக்க ஒருவரும் துணியாததை யும் ஜில்லா கலெக்டருக்கு எழுதித் தக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று தெரிவித்தார்.

'எல்லாம் பரமசிவத்தின் திருவுள்ளப்படி நடக்கும்' என்ற மனச்சாந்தியோடு சுப்பையர் அன்னதானத்தை வழக்கம்போல் குறைவின்றி நடத்தி வந்தார்.

தாசில்தாருடைய கடிதத்தைக் கண்ட கலெக்டர் லாலுகுடிக்கு வந்து 'முகாம்' போட் டார். அவர் ஒரு வெள்ளைக்காரர்; மதியூகி; எதையும் ஆலோசித்துச் செய்பவர்; தர்மவான்; நியாயத்துக்கு அஞ்சி ஒழுகுபவர்; தமிழ்ப் பயிற்சி உள்ளவர்; பிறர் தமிழ் பேசுவதைத் தெளிவாக அறிவதோடு தாமே தமிழிற் பேச வும் தெரிந்தவர். அவர் லாலுகுடிக்கு வந்து தாசில்தாரையும் வரச்செய்து அவரிடம் சுப்பை யரைப்பற்றி விசாரித்தார்.

தாசில்தார் தம்முடைய அதிகாரமொன் றும் சுப்பையரிடத்திற் பலிக்கவில்லையென்ற கோபத்தினால் அவரைப்பற்றி மிகவும் கடுமை யாகக் குறை கூறினர்; "அவன் பெரிய ஆஷாடபூதி. இவ்வளவு நிலம் வைத்திருக்கிற வனுக்குப் பணம் இல்லாமலா போகும்? ஏதோ சிலருக்குச் சோற்றைப் போட்டுவிட்டு அன்ன தானமென்று பேர் வைத்துக்கொண்டு

பணத்தை மறைவாகச் சேகரித்து வைத்திருக்கிறானென்றே நான் எண்ணுகிறேன். தன் வீட்டிலுள்ள நகைகளைக்கூட ஒளித்துவைத்திருப்பான். துரையவர்கள் சிறிதேனும் இரக்கம் காட்டாமல் அந்த மனுஷனைத் தக்கபடி சிக்ஷிக்கவேண்டும்; அப்போதுதான் மற்றவர்களும் பயப்படுவார்கள்" என்றார்.

தாசில்தாருடைய பேச்சில் கோபம் தலைதூக்கி நிற்பதைக் கலெக்டர் உணர்ந்தார்; அவருடைய வார்த்தைகளை அப்படியே நம்புவது அபாயமென்றெண்ணினார். ஆதலின், அந்தப் பக்கங்களில் இருந்த வேறு சிலரிடம் சுப்பையரைப்பற்றி அந்தரங்கமாக விசாரித்தார். அவ்வந்தண உபகாரியிடம் பொறாமைகொண்ட சிலரன்றி மற்றவர்களெல்லாம் அவரைப்பற்றி மிக உயர்வாகவே சொன்னார்கள்; அவர் செய்யும் அன்னதானத்தைப்பற்றி உள்ளங் குளிர்ந்து பாராட்டினார்கள். கலெக்டர்துரை எல்லாவற்றையும் கேட்டார்.

## 2

ஒருநாள் இரவு சுப்பையர் வழக்கம் போலத் தம்முடைய வீட்டுத் திண்ணையிலே படுத்திருந்தார். பகலிலும் இரவிலும் யாவருக்கும் அன்னமிட்டபின்பு, அகாலத்தில் யாரேனும் பசியோடுவந்தால் அவர்களுக்கு உதவும் பொருட்டு உணவுவகைகளைத் தனியே வைத்

திருக்கச் செய்வது அவருடைய வழக்கம். சில சமயங்களில் மழை முதலியவற்ருல் துன்புற்று வழிநடைப் பிரயாணிகள் நள்ளிரவில் வருவார்கள். அவர்களுடைய பசியைப் போக்குவதற்கு அவ்வுணவு உதவும்.

சுப்பையர் படுத்துத் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது நெடுந்தூரத்திலிருந்து, "சாமீ! சாமீ!" என்று ஒரு சத்தம் கேட்டது. அதனுல் சுப்பையருடைய தூக்கம் கலைந்தது. அவர் விழித்தெழுந்து சத்தம்கேட்கும் வழியே சென்ருர். அக்கிரகாரத்தின் கோடியிலிருந்து யாரோ ஒருவன், "சாமீ! சாமீ!" என்று, கத்திக் கொண்டிருந்தான்.

"யாரப்பா அது?" என்று கேட்டார் சுப்பையர்.

"சாமீ! நான் பக்கத்திலுள்ள கிராமத்துப் பறையன். வேறு ஊருக்குப் போய்த் திரும்பி வருகிறேன். பசி தாங்கமுடியவில்லை. இவ்வளவு தூரம் நடந்து வந்தேன்; மேலே அடியெடுத்து வைக்க முடியவில்லை" என்ருன்.

"அப்படியானல், சற்று நேரம் இங்கே இரு; இதோ வருகிறேன்" என்று சொல்லிச் சுப்பையர் தம் வீட்டுக்கு வந்தார். வந்து வெளிக்கதவைத் திறக்கச்செய்து சமையலறையிற் புகுந்தார். அங்கிருந்த கறி, குழம்பு, ரஸம், மோர் முதலியவற்றைத் தனித்தனியே

தொன்னைகளிலும் கொட்டாங்கச்சிகளிலும் எடுத்து, அன்னத்தை ஒரு பெரிய மரக்காலில் போட்டு அதன்மேல் கறி முதலியவற்றை வைத்து மேலே இலையொன்றால் மூடினார். அப்படியே அதை எடுத்துக்கொண்டு தெருவின் கோடிக்கு வந்து, "இந்தா, அப்பா! இந்த மரக்காலில் சாதம், குழம்பு, கறி, ரஸம் எல்லாம் வைத்திருக்கிறேன். அதோ இருக்கிறதே, அந்த *வாய்க்காலுக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு உன் ஊருக்குப் போ. முடியுமானால் மரக்காலை நாளைக்குக் கொண்டுவந்து கொடு; முடியாவிட்டால் நீயே வைத்துக்கொள்" என்று சொல்லி அந்த மரக்காலை அவன் பார்க்கும்படி கீழே வைத்தார்.

பறையன் அதை எடுத்துக் கொண்டு, "சாமீ! உங்களைத் தெய்வம் குறைவில்லாமல் காப்பாற்றும்; தருமம் தலைகாக்கும்" என்று வாழ்த்திவிட்டுச் சென்றான். அவனுடைய பேச்சில் ஒருவிதமான நாக்குழறல் இருந்தது; "பாவம்! பசியினால் பேசக்கூட முடியவில்லை! நாக்குக் குழறுகிறது!" என்று சுப்பையர் எண்ணி இரங்கினார்; அவனது பசியைத் தீர்க்க நேர்ந்தது குறித்து மகிழ்ந்து வீடுவந்து சேர்ந்தார்.

லாலுகுடியில் 'முகாம்' செய்திருந்த கலெக்

* இது மல்லட்டாறென்று வழங்கும்.

டர் மேற்சொன்ன நிகழ்ச்சி நடைபெற்றதற்கு மறுநாள் தம்மிடம் வரவேண்டுமென்றும், தாம் விசாரணை செய்ய வேண்டுமென்றும் சுப்பைய ருக்கு உத்தரவொன்றை முன்னமே அனுப்பி யிருந்தார். விசாரணை நாளன்று சுப்பையர் உரியகாலத்தில் செல்லாமல் நேரம் கழித்துச் சென்றார்.

கலெக்டர் துரையின்முன் சேவகர்கள் அவரை நிறுத்தினார்கள். நீர்க்காவி ஏறிப் பழுப்பு நிறமா யிருந்த அவருடைய வஸ்திரம் இடையிடையே தையலையுடையதாயும், சில இடங்களில் முடியப்பட்டதாயும் இருந்தது; அவருடைய உடம்பில் விபூதி விளங்கியது; மார் பில் ருத்திராட்ச மாலை இருந்தது. அவர் நேரங் கழித்து வந்ததனால் அவரிடம் கோபங்கொண் டிருப்பவரைப்போலக் கலெக்டர் இருந்தார்; முகத்திற் கோபக் குறிப்பு வெளிப்பட்டது; "இவரா சுப்பையர்?" என்று கேட்டார் துரை.

அருகிலிருந்த தாசில்தார், "ஆமாம்!" என்றார்.

கலெக்டர், "இவ்வளவு ஏழையாக இருப்ப வரையா நீர் பெரிய பணக்காரரென்றும், வரிப் பணம் அதிகமாகத் தரவேண்டுமென்றும் எழுதி யிருக்கிறீர்?" என்று கேட்டார்.

தாசில்தார்: இதெல்லாம் வேஷம். இப்படி

வந்தால் துரையவர்கள் மனமிரங்கி வரியை வஜா செய்யக்கூடுமென்ற வஞ்சக எண்ணத்தோடு வந்திருக்கிறார்.

கலெக்டர் அவரைக் கையமர்த்திவிட்டுச் சுப்பையரைப் பார்த்து, "நீரா ஆங்கரைச் சுப்பையர்?" என்று கேட்டார்.

**சுப்பையர்:** ஆம்.

**கலெக்டர்:** நீர் ஏன் சரியான காலத்தில் வரவில்லை? சர்க்கார் உத்தரவை அலக்ஷியம் செய்யலாமா?

**சுப்பையர்:** துரையவர்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது. காலையில் எழுந்து ஸ்நானம் செய்து பூஜையை முடித்துக்கொண்டு, வருகிறவர்களுக்கு ஆகாரம் செய்விப்பது என் வழக்கம். இன்று பலர் வந்திருந்தார்கள். வழக்கப்படியே அவர்கள் யாவருக்கும் போஜனம் செய்வித்து நானும் ஆகாரம் செய்த பிறகு வந்தேன்.

**கலெக்டர்:** உம்முடைய வரிப்பணம் அதிகமாகப் பாக்கி இருக்கிறதே, தெரியுமா?

**சுப்பையர்:** தெரியும். என்மேல் வஞ்சகம் இல்லை; நிலம் சரியானபடி விளையாமையால் வரிப்பணத்தை என்னால் இப்பொழுது செலுத்த முடியவில்லை.

**கலெக்டர்:** அன்னதானத்தைமட்டும் எப்படிச் செய்கிறீர்?

சுப்பையர்: கிடைக்கும் நெல்லையெல்லாம் வைத்துக்கொண்டு செய்கிறேன். முன்பு, அன்னதானம் செய்ததுபோக மிஞ்சுவதில் வரியைச் செலுத்தி வந்தேன். இப்பொழுது அது முடியவில்லை. அன்னதானத்திற்கே போதாமையால் என்வீட்டு நகைகளை அடகு வைத்துக் கடன் வாங்கியிருக்கிறேன்; சிலவற்றை விற்கவும் செய்தேன்.

கலெக்டர்: இவ்வளவு கஷ்டப்பட்டு நீர் அந்த அன்னதானத்தை ஏன் செய்யவேண்டும்?

சுப்பையர்: அது பரம்பரையாக எங்கள் குடும்பத்தில் நடந்து வருகிறது.

கலெக்டர்: அன்னம் போடுவது பகலிலா? இரவிலா?

சுப்பையர்: இரண்டு வேளையும் போடுவதுண்டு. பாதசாரிகளாக வருகிறவர்கள் பசியோடு எப்போது வந்தாலும் போடுவது வழக்கம்.

கலெக்டர்: எந்தச் சாதியாருக்குப் போடுவீர்?

சுப்பையர்: பிராமணருக்கும் மற்றச் சாதியாருக்கும் அவரவர்களுக்கு ஏற்ற முறையில் போடுவதுண்டு. பசித்து வந்தவர்கள் யாரானாலும் அன்னமிடுவேன்.

கலெக்டர்: பறையருக்கும் போடுவதுண்டா?

சுப்பையர்: ஆகா, போடுவதுண்டு; எல்லோரும் சாப்பிட்டபிறகு போடுவோம்.

கலெக்டர்: இதுவரையில் அப்படி எத்தனை தடவை பறையர்களுக்குப் போட்டிருக்கிறீர்?

சுப்பையர்: எனக்கு நினைவில்லை; பலமுறை போட்டிருப்பதுண்டு.

கலெக்டர்: சமீபத்தில் எப்போது போட்டீர்?

சுப்பையர்: நேற்றுக்கூட ஒரு பறையன் பாதிராத்திரியில் பசிக்கிறதென்று வந்தான்; சாதம் கொடுத்தேன்.

கலெக்டர்: அப்படியா! என்ன என்ன கொடுத்தீர்? எல்லோரும் சாப்பிட்டு மிச்சமான சோற்றையா கொடுத்தீர்?

சுப்பையர்: அகாலத்தில் யாராவது வந்தால் உபயோகப்படுமென்று ரஸம், குழம்பு, மோர் முதலியவற்றிற் கொஞ்சம் கொஞ்சம் தனியே எடுத்து வைத்திருப்பது வழக்கம். ஆதலால் நேற்று வந்தவனுக்கு அன்னம், கறி, குழம்பு, ரஸம், மோர் எல்லாம் கொடுத்தேன்.

கலெக்டர்: இலை போட்டா சாப்பாடு போட்டீர்?

சுப்பையர்: இல்லை; அது வழக்கமில்லை. ஒரு மரக்காலில் அன்னத்தை வைத்து, அதன் மேல் தனித்தனியே தொன்னையிலும் கொட்

டாங்கச்சிகளிலும் கறி முதலியவற்றை வைத்துக் கொடுத்தேன்.

கலெக்டரோடு வந்திருந்த உத்தியோகஸ்தர்கள் யாவரும் இவ்வளவு விரிவாகக் கலெக்டர் விசாரணை செய்வதை நோக்கி வியப்புற்றூர்கள். இவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டே இருந்த துரை தாசில்தாரைப்பார்த்தார். அவர், "எல்லாம் பொய்" என்று சொல்லி விட்டு முணுமுணுத்துக்கொண்டே யிருந்தார்.

கலெக்டர்: உமக்கு அந்தப் பறையனைத் தெரியுமா ?

சுப்பையர்: இருட்டில் இன்னனென்று தெரியவில்லை.

கலெக்டர்: அவனிடம் கொடுத்த மரக்காலைக் கொண்டுவந்து காட்டுவீரா ?

சுப்பையர்: அதை அவன் இன்னும் திருப்பிக் கொடுக்கவில்லை.

கலெக்டர்: அப்படியானல் நீர் அவனுக்கு அன்னம் கொடுத்ததற்குச் சாக்ஷி வேறு என்ன இருக்கிறது ?

சுப்பையர்: சாக்ஷி எதற்கு? தெய்வத்துக்குத் தெரியும். அப்படி நான் செய்ததை வேறு யாரிடம் சொல்லிக்கொள்ள வேண்டும் ?

கலெக்டர்: அந்த மரக்காலை அவன் திருப்பிக் கொடாவிட்டால் என்ன செய்வீர் ?

சுப்பையர்: 'முடியுமானால் கொடு, இல்லா விட்டால் நீயே வைத்துக்கொள்' என்று நானே சொல்லிக் கொடுத்தேன்; அவன் கொடுக்கா விட்டால் எனக்கு ஒன்றும் நஷ்டமில்லை.

கலெக்டர், "அப்படியா!" என்று சொல்லிக்கொண்டே மேஜை முழுவதையும் தரை வரையில் மறைத்து மூடப்பட்டிருந்த துணியை மெல்லத் தூக்கினார். என்ன ஆச்சரியம்! அதன் கீழே ஒரு மரக்கால் காணப்பட்டது.

"நீர் கொடுத்த மரக்கால் இதுதானா பாரும்?" என்று சொல்லித் துரை அதை எடுத்து மேஜையின்மேல் வைத்தார்.

சுப்பையர் திடுக்கிட்டார்; தாம் கண்டதை அவர் நம்ப முடியவில்லை. கண்ணைத் துடைத்துத் துடைத்துப் பார்த்தார். தாம் முதல்நாள் பாதி ராத்திரியில் ஒரு பறையனிடம் கொடுத்த மரக்கால் அங்கே எப்படி வந்திருக்கலாமென்று யோசித்தார்; ஒன்றும் தெரியவில்லை. அங்கே இருந்த யாவரும் ஒரு நாடகத்தில் மிகவும் ரசமான காட்சி யொன்றில் ஈடுபட்டு மெய்ம் மறந்தவர்போல் ஆனார்கள்.

"என்ன, பேசாமல் இருக்கிறீர்? ராத்திரி நீர் செய்த அன்னதானத்துக்குச் சாக்ஷி யில்லை யென்று எண்ண வேண்டாம். பாதி ராத்திரியில் வந்த பறையன் நான்தான்! நீர் கொடுத்த மரக்கால் இதுதான்! இந்த

இரண்டு சாக்ஷியும் போதாவிட்டால், என்னுடன் அங்கேவந்த குதிரைக்காரன் வேறு இருக்கிறான். நீர் சொன்னதெல்லாம் உண்மையே. உம்முடைய வீட்டு அன்னத்தையும் கறி முதலியவற்றையும் நான் ருசி பார்த்தேன். உம்முடைய ஜன்மமே ஜன்மம்" என்றார் கலெக்டர்; அவருடைய கண்களில் நீர் ததும்பியது; உள்ளத்தில் உண்டான உருக்கம் அவர் தொண்டையை அடைத்தது. சிறிது நேரம் அவரால் பேச முடியவில்லை. பிறகு, "உமக்கு எந்தக் காலத்திலும் குறையே வராது. தெய்வம் உம்மைக் குறைவில்லாமல் காப்பாற்றும்; தருமம் தலை காக்கும். உமக்காகத்தான் மழை பெய்கிறது" என்றார்.

அந்த வார்த்தைகளின் தொனியில் முதல் நாள் இரவு பறையன், 'தெய்வம் உங்களைக் குறைவில்லாமல் காப்பாற்றும்;தருமம் தலைகாக்கும்' என்று சொன்ன வார்த்தைகளின் தொனி ஒலிப்பதை அப்போதுதான் சுப்பையர் உணர்ந்தார்; தமிழைப் புதிதாகக் கற்றுக் கொண்ட வேற்று நாட்டாராகிய துரையின் பேச்சானது, பசியினால் நாக்குழறிப் பேசுபவனது பேச்சைப்போல இராத்திரியில் தமக்குத் தோன்றிய தென்பதை அறிந்தார். அவருக்கு இன்னது சொல்வதென்று தோற்றவில்லை.

"அப்படியே அந்த நாற்காலியில் உட்காரும்! நீர் வரிப்பணத்தை மோசம் செய்ய

மாட்டீரென்பது எனக்கு நன்ருகத் தெரியும். நானும் உம்முடைய மரக்காலை மோசம் செய்யாமல் இதோ கொடுத்துவிட்டேன்; எடுத்துக் கொள்ளும். உம்முடைய தருமம் குறைவின்றி நடைபெற இந்த வரிப்பணம் உதவுமானல், அதைவிட இந்த ராஜாங்கத்துக்குச் சிறந்த லாபம் வேறு இல்லை. உம்மால் எப்போது முடியுமோ, அப்போது வரியைக் கட்டலாம். உம்மை ஒருவரும் நிர்ப்பந்தம் செய்யமாட்டார். நான் இந்த ஜில்லாவில் இருக்கும் வரையில் உமக்கு ஒருவிதமான துன்பமும் நேராது" என்ருர் கலெக்டர். பிறகு தாசில்தாரை நோக்கி, "உம்முடைய வார்த்தையை நான் நம்பியிருந்தால் பெரிய பாவம் செய்திருப்பேன். இனிமேல் தீர விசாரியாமல் இந்தமாதிரி ஒருவரைப்பற்றியும் நீர் எழுதக்கூடாது" என்று கண்டித்துக் கூறிஞர்.

மேஜைத் துணியாகிய திரையைத் துரை தூக்கியதும், அம் மேஜைக்கு அடியில் அவ்வத் தண்வள்ளலது அன்னதானத்தை அளந்த மரக்கால் இருந்ததும், அதனைத் துரை எடுத்து மேஜையின்மேல் வைத்து மனமுருகிப் பேசிக் கண்களில் நீர் ததும்ப வீற்றிருந்ததுமாகிய அக் காட்சிகளை நம்முடைய அகக்கண்ணுல் நோக்கும்போது நமக்கே மயிர் சிலிர்க்குமாயின், அங்கேயிருந்து கண்ணுல் பார்த்தவர்களுடைய

உள்ளமும் உடலும் எப்படி யிருந்திருக்குமென் பதைச் சொல்லவும் வேண்டுமா ?

[கும்பகோணம் கலாசாலைத் தமிழ்ப் பண்டிதராக இருந்த வித்துவான் ஸ்ரீ சி. தியாகராச செட்டியாரவர்கள், 1883-ஆம் ௵ திருவானைக்காவில், திருமஞ்சனக்காவேரிக் கரையில், ஆங்கரைச் சுப்பையருடைய பரம்பரையினர் சிலரைக் கண்டு பேசிக்கொண் டிருந்தனர். நானும் உடனிருந்தேன். அப்பொழுது செட்டியார், அவர்களைப் பாராட்டிவிட்டு இவ்வரலாற்றைக் கூறினர். ஷை பரம் பரையினரும் சொன்னார்கள். சுப்பையருடைய பெண் வழியிற்றோன்றிய மணக்கால் ம-ா-ா-ஸ்ரீ கந்தசாமி ஐய ரவர்களாலும் சமீபத்தில் சில விஷயங்கள் அறிந்து கொண்டேன்.]

## 2. வன்றொண்டர்

### தனவணிகர்கள்

தனவணிகர்கள் செல்வத்தாற் சிறப் புற்று விளங்குவதோடு அச் செல்வத்தைத் தரு மத்திற் செலவிடும் செயலாலும் உலகத்தாரால் மிகவும் பாராட்டப் பெறுகிறார்கள். சிவாலயத் திருப்பணிகளைப் பண்டைக் காலத்தில் மன்னர் கள் செய்தார்களென்று நூல் வாயிலாகவும் சாசனவாயிலாகவும் அறிகிறோம். இக் காலத் தில் அத் திருப்பணியில் ஈடில்லாப் புகழ் படைத் தவர்கள் தனவணிகர்களே. அவர்கள் வேத பாடசாலை, ஆகமபாடசாலை, தேவாரபாடசாலை, தமிழ்க்கலாசாலை, அன்ன சத்திரங்கள், யாத் திரை விடுதிகள், சைவ சமயாசாரியர் நால்வ ருடைய குருபூஜை மடங்கள், அறுபத்துமூவர் மடங்கள், பசுமடம், கற்பூரமடம், சாம்பிராணி

மடம், நந்தவனம் முதலிய பல தர்ம ஸ்தாபனங்களை நடத்தி வருகிறார்கள். அவர்களுடைய சிவபக்தியும் தர்ம சிந்தனையும் கல்லின்மேல் எழுத்துப்போல விளங்குகின்றன.

பொருட் செல்வத்தைப் படைத்து அதனாற் பெறும் அறப்பயனை அடைந்த அந்தக் கூட்டத்தாருள் மிக்க கல்விப்பொருளையும் அடைந்து சிறந்து விளங்குவாரும் உண்டு. அவர்களுள் தமிழறிவு பெற்ற அறிஞர்களைப்பற்றி எண்ணுகையில் என்னுடைய உள்ளத்தில் முதலில் வன்றொண்டச் செட்டியாரவர்களது ஞாபகந்தான் எழுகின்றது.

வன்றொண்டர் கண் இல்லாதவர்; * பிறவியிலேயே அக் குறைபாடுடையவரோ அன்றி அக்குறை பிறகு நேர்ந்ததோவென்பது தெரியவில்லை. முகக்கண் இல்லாவிடினும் அகக்கண்ணாகிய கல்வி யாற்றல் நிரம்பப்பெற்றவர் ஆவர். தமிழ் நாட்டுப் புலவர்களில் அந்தகக்கவி வீரராகவ முதலியாரைப்பற்றி, "தன்னெஞ்சமேடெனக் கற்றானெருமுத் தமிழையுமே" என்ற ஒரு செய்யுள் வழங்கி வருகின்றது. அதன் பொருளை வன்றொண்டச் செட்டியார் மூலம் நான் நன்றாக அறிந்துகொண்டேன்.

---

* ஐந்தாம் பிராயத்தில் வசூரி பூட்டியதால் அந்தகத் தன்மை யேற்பட்டதென்று சிலரால் இப்போது தெரிகிறது.

முன்னோர்கள்

அவருடைய இயற்பெயர் நாராயண செட்டியாரென்பது. அவர் தேவகோட்டையில் அண்ணாமலை செட்டியாரென்னும் கனவானுடைய அருந்தவப் புதல்வராகப் பிறந்தவர். அவருடைய முன்னோர்கள் *திருப்பெருந் துறையில் ஓர் அன்னசத்திரம் கட்டியுள்ளார்கள். அங்கே அது மேற்கு வீதியின் தெற்கு முனையில் கிழக்கு நோக்கி யிருக்கிறது. ஆனி மாதத்திலும் மார்கழி மாதத்திலும் அத்தலத்தில் நடைபெறும் உத்ஸவங்களில் வந்தவர்களுக் கெல்லாம் இரவும் பகலும் அன்னமிடுவதும் இராமேசுவர யாத்திரைக்காரர்களுக்கும் பிறருக்கும் ஸதாவிர்த்தி (அரிசி பருப்பு நெய் முதலிய உணவுப் பண்டங்கள்) கொடுத்தலும் வழக்கம்.

அந்தச் சத்திரத்தையன்றி உப்பு மடம், ஊறுகாய் மடம் என்னும் இரண்டு இடங்கள் அங்கே உண்டு. அவை இரண்டும் சிறு கூரை வீடுகள். †ஸ்ரீ ஆத்மநாத ஸ்வாமிக்கு நிவேதனமாகும் அன்னங்களிற் கோயிற் பணியாளருக்கு உரியவைபோக எஞ்சியவை பட்டை போட்டுக் கோயில் வாயிலிற் சுத்தான்னமாக விற்கப்படும். அரையணாவுக்கு வாங்கினால் இரண்டுபேர் திருப்தியாக உண்டு பசியாறலாம். அதை வாங்கிச் செல்பவர்களுக்கு உபயோகமாக உப்பு,

* இதனை ஆளுடையார் கோவிலென வழங்குவர்.
† திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள ஸ்வாமியின் திருநாமம்.

ஊறுகாய் முதலியவை அளிக்கும்பொருட்டு முற் கூறிய மடங்கள் ஏற்பட்டிருந்தன. அவை களும் நாராயண செட்டியாருடைய முன்னோர் களின் ஆதரவால் நடைபெற்று வந்தன. அத் தலத்து ஊருணியின் மேல் கரையில் அறுபத்து மூவர் மடமென்பதொன்றுண்டு. அதுவும் அவருடைய குடும்பத்தினரது விசாரணைக்கு உட்பட்டது. இன்னும் பல தர்மங்கள் அங்கே உண்டென்று கேள்வி.

## கல்விப்பயிற்சி

நாராயண செட்டியார் ஐந்து பிராயத் திற்கு மேற் கல்வி பயிலத் தொடங்கி நெடுங் கணக்கு, நீதி நூல்கள், கணக்கு முதலியவற் றைக் கற்றார். முற்பிறப்பிற் செய்த நல்வினைப் பயனால் இயல்பாகவே அவருக்குத் தமிழிற் பேரன்பு உண்டாயிற்று. தேவகோட்டை யிலும் அயலூர்களிலும் உள்ள கல்வியாளர் களிடம் தாம் படித்த நீதி நூல்களுக்குப் பொருள் தெரிந்து கொண்டு தமிழ்க் கருவி நூல் களையும் படிக்கத் தொடங்கினார். யார் யாருக்கு எந்த எந்த நூல் பழக்கமோ அவரவரிடம் சென்று சென்று அவ்வந்நூல்களைப் பாடங் கேட்டு வந்தார்.

அக் காலத்தில் கீழ்வேளூர்ச் சுப்பிரமணிய தேசிகரென்னும் பெரிய தமிழ் வித்துவா னொருவர் தேவகோட்டையிற் சிலரால் வருவிக் கப்பட்டு அங்கே பலருக்கு இலக்கண இலக்கிய

பாடங்களைக் கற்பித்து வந்தார். அந்தத்தேசி கரிடம் நாராயண் செட்டியார் முதலில் தாண்டவராய முதலியார் இயற்றிய இலக்கண வினா விடையையும் பின்பு நன்னூலையும் இலக்கண விளக்கத்தையும் படித்தனர். திருக்குறளைத் தெளிபொருள் விளக்கவுரை, பரிமேலழகருரை யென்பவற்றோடு பாடங் கேட்டனர்.

அரியக்குடி முதலிய இடங்களில் இருந்த வைஷ்ணவ வித்துவான்களிடம் அஷ்டப்பிரபந்தம், அழகர் கலம்பகம், அழகர் பிள்ளைத்தமிழ், திருவேங்கடக் கலம்பகம் முதலியவற்றைக் கேட்டனர். இங்ஙனமே வேறு சில வைஷ்ணவ நூல்களையும் சைவக் கருவிநூல்களையும் முறையே அவற்றை அறிந்தவர்களிடம் சென்று கற்றுத் தேர்ந்தனர். அவருக்குப் பாடஞ் சொல்பவர்கள் அவருடைய தமிழன்பின் மிகுதியையும் ஆழ்ந்து பயிலும் திறமையையும் கண்டு வியந்தனர். மற்றவர்கள் பலமுறை கேட்பதும் சரி; அவர் ஒரு முறை கேட்பதும் சரி. படித்தவற்றைச் சிக்கறத் தெளிந்து ஒழுங்காகச் சிந்தித்து வைப்பது அவர் இயல்பு. ஒரு நூலில் சிறு சந்தேகம் இருப்பினும் அதனை இகழாமல் தக்கார்பாற் கேட்டும் தாமே உழைத்து அறிந்தும் எவ்வாறேனும் அதனைத் தீர்த்துக் கொள்வார்; அது வரையில் அவருக்குத் திருப்தி பிறவாது. அவர் பாடங்கேட்ட நூல்கள் அவ்வளவும் அவருக்குச் சொந்தமாகி விட்டன.

அந்தக்காலத்தில் திருநெய்த்தானத்தில் இருந்த * வேங்கடராமையங்கா ரென்பவர் கம்ப ராமாயணத்தில் தேர்ச்சியுடையவராக இருந்தார். செட்டியார் அவரிடம் சென்று சில வைஷ்ணவப் பிரபந்தங்களையும் கம்ப ராமாயணத்திற் சில பகுதிகளையும் கேட்டுத் தெளிந்தார்; அவருடைய தந்தையாரிடத்திலும் சில வைஷ்ணவ நூல்களைக் கற்றனர்.

பிள்ளையவர்களிடம் பாடங்கேட்கத் தொடங்கியது

பல மாணுக்கர்களுக்குப் பாடஞ் சொல்லிக்கொண்டு தமிழ்த் தெய்வத்தின் திருப்பணியையே தம் வாழ்க்கை யின்பமாகக் கருதி வாழ்ந்துவந்த மகாவித்துவான் திரிசிரபுரம் ஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய கல்விப் பெருமையையும் பாடஞ் சொல்லும் ஆற்றலையும் நாராயண செட்டியார் கேள்வியுற்ருர். அவர்களுடைய பெருமையை அதிகமாக அறிய அறிய அவருக்கு அவர்களிடம் சென்று படிக்க வேண்டுமென்னும் அவா மேன்மேலும் பெருகலாயிற்று.

அப்பொழுது மகாமகம் வந்தது. அதற்காக நாராயண செட்டியார் கும்பகோணம் சென்ருர். பிள்ளையவர்களும் அங்கே போயிருந்தார்கள். அவர்களைச் சந்தித்து நெடு நாளாகத்

---

* இவர் கும்பகோணம் டவுன் ஹைஸ்கூலிற் பல வருஷங்கள் முதல் தமிழ்ப்பண்டிதராக இருந்தவர்.

தமக்கு இருந்த விருப்பத்தைச் செட்டியார் தெரிவித்தனர். தமிழ் படிக்க விரும்புபவர்களையே தம்முடைய உறுதிச் சுற்றமாக எண்ணியொழுகிய பிள்ளையவர்கள் அவரோடு பேசிவந்தபொழுது அவருடைய ஞாபக சக்தியையும் கல்வியிலுள்ள ஊக்கத்தையும் உணர்ந்து, "இவருக்குப் பாடம் சொல்வதைக் காட்டிலும் வேறு என்ன வேண்டுவது?" என்றெண்ணி அவருடைய விருப்பத்திற்கு உடன்பட்டார்கள். அதுமுதல் பிள்ளையவர்களுக்கும் அவருக்கும் நெருங்கிய பழக்கம் உண்டாயிற்று.

பிள்ளையவர்கள் திருவாவடுதுறை யாதீன வித்துவானாக நியமிக்கப்பட்ட காலத்தில் முதன் முதலாக அவர்களிடம் பாடங் கேட்டவர்களுள் நாராயண செட்டியாரும் ஒருவர். பாடங்கேட்குங் காலங்களில் பிள்ளையவர்கள் எங்கெங்கே தங்கினார்களோ அங்கங்கே சென்று உடனிருந்து பாடங்கேட்டு வந்தனர்; காஞ்சிப்புராணம், திருவானைக்காப் புராணம், பேரூர்ப்புராணம், திருத்தணிகைப் புராணம், விநாயகபுராணம், கந்தபுராணம், திருக்கோவையார் முதலிய பல நூல்களை அவர்கள்பாற் கேட்டனர்.

தாம் பாடங்கேட்க விரும்பும் நூல்களைக் கூலி கொடுத்து எழுதச் செய்வார்; பிள்ளையவர்களிடம் மற்றவர்கள் பாடங்கேட்குங் காலங்களில் உடனிருந்து கேட்டு வருவார்

மற்றக் காலங்களில் ஒருவரைப் படிக்கச் செய்து பாடங் கேட்பார். படிப்பவர் இல்லாத வேறுசில சமயங்களில் பிள்ளையவர்கள் வீட்டில் பிள்ளையவர்களே படித்துப் பாடஞ் சொல்லி வருவார்கள். அவருடன் எப்பொழுதும் ஒரு தனவைசியர் இருந்து பாடங்கேட்டும் படித்துக் காட்டிக்கொண்டும் வருவதுண்டு. வெளியூர்களுக்குச் செல்லுகையில் அவரையும் தவசிப் பிள்ளை யொருவரையும் உடனழைத்துவருவார்

பிள்ளையவர்களிடம் திருவாவடுதுறையில் அவர் பாடங் கேட்டபோது, உடன் கற்றவர்கள் பலர். அவர்களுள் சின்னப்பட்டம் நமச்சிவாய தேசிகரும், திருஞான சம்பந்தப் பிள்ளை யென்று தீக்ஷாநாமம்பெற்ற மதுரை இராமசாமிப் பிள்ளையும் முக்கியமானவர்கள்.

### மாணாக்கர்கள்

பாடம் சொல்லுதலிலும் அவர் வல்லவர் வீர. லெ. சின்னையா செட்டியார், இராமசாமி செட்டியார், காரைக்குடி சொக்கலிங்கையா முதலியவர்கள் அவரிடம் பாடங் கேட்டவர்கள். சேதுராமையரென்ற அந்தண மாணாக்கரொருவர் அவருடனிருந்து நூல்களைப் படித்துக் காட்டி உதவி செய்து வந்ததை நேரில் நான் பார்த்திருக்கிறேன்.

### பழக்கமுள்ள வித்துவான்கள்

அவருக்கு மிக்க பழக்கமுள்ள வித்துவான்கள் : சிங்கவனம் சுப்புபாரதியார், வேம்பத்

தூர்ப் பிச்சுவையர், கரவேட்டங்குடிச் சுப்பிரமணிய பாரதியார், மணமேற்குடிக் கிருஷ்ணையர் முதலியவர்கள்.

தனவணிகர்களில் திருவிடைமருதூர்த் திருப்பணி வயிரவன் செட்டியார், சத்திரம் அருணாசலஞ் செட்டியார், கோயிலூர்ச் சிதம்பரையா, வெளிமுத்தி வயிரவையா முதலியோர்கள் அவரிடம் நன்மதிப்பு வைத்துப் பாராட்டி வந்தார்கள்.

வேறு பலரிடம் பாடங் கேட்டல்

பிள்ளையவர்களிடம் பாடங் கேட்கும் காலத்தில் இடையிடையே அவர் தம் ஊருக்குச் சென்று வருவார். சில சமயங்களில் வேறு வித்துவான்களிடத்திற் சென்று அவர்கள் அறிந்த நூல்களைக் கேட்டு வருவார். திரிசிரபுரத்திலிருந்த கோவிந்தபிள்ளையென்பவர் கம்பராமாயணத்திற் சிறந்த தேர்ச்சி யுள்ளவரென்றறிந்து அவர்பாற் சென்று அந் நூலில் முக்கியமான சில பாகங்களைப் பாடங் கேட்டார். இராய வேலூரிலிருந்த இயற்றமிழாசிரியர் விசாகப் பெருமாளையரிடஞ் சென்று நன்னூற் காண்டிகையுரையையும் விருத்தியுரையையும் கேட்டார். காஞ்சீபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியாரிடமும் புரசபாக்கம் அஷ்டாவதானம் சபாபதி முதலியாரிடமும் பல நூல்களிலுள்ள சந்தேகங்களைக் கேட்டுத் தீர்த்துக் கொண்டார்.

யாழ்ப்பாணம் ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களிடம் அவருக்கு மிக்க அன்பு உண்டு. நாவலரவர்கள் சென்னையிலிருந்த காலத்திலும் சிதம்பரத்தில் இருந்த காலத்திலும் சென்று சைவ நூல்களையும் சித்தாந்த சாஸ்திரங்களையும் பாடங்கேட்டனர். அவர்கள் யாழ்ப்பாணத்துக்குச் சென்றபின்பு அங்கும் சென்று சிலகாலம் இருந்து அவர்களிடம் பாடங் கேட்டதுண்டு.

பிள்ளையவர்களுக்குச் செய்த உதவி

ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் அவருக்கு அளவற்ற அன்பு இருந்து வந்தது. அவர்கள் வறுமையால் துன்புறுவதை யறிந்து நகர வட்டகையிலுள்ள சில சிவஸ்தலங்களுக்குப் புராணம் இயற்றும்படி செய்வித்து அங்கங்கேயுள்ள தனவணிகச் செல்வர்கள் மூலமாகப் பொருளுதவி செய்வித்தார். கோயிலூர், கண்டதேவி, சூரைமாநகர், வீரவனமென்னும் நான்கு ஸ்தலங்களுக்குப் பிள்ளையவர்கள் புராணம் செய்ததற்குக் காரணமாக இருந்தவர் நாராயண செட்டியாரே. மற்றப் புராணங்களை அரங்கேற்றிய காலங்களிற் பிள்ளையவர்கள் பெறும் ஸம்மானப்பொருள் அரங்கேற்றம் முடிந்து ஊருக்குப் புறப்படும்போது அவ்விடத்திலுள்ள கடைகளில் வாங்கியிருந்த கடனைத்தீர்க்கும் பொருட்டும் மாணக்கர்கள் பொருட்டும் செலவாகிவிடும். இதனை யறிந்த செட்டியார் மேற்

கூறிய நான்கு புராணங்களும் அரங்கேற்றப் பட்ட காலத்தில் வேறுவிதமாக ஏற்பாடு செய்தனர். திருவாவடுதுறையிலிருந்து அரங்கேற்றப் போகும்போது உண்டாகும் செலவுகள் அம் மடத்தாரால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. அரங்கேற்றம் நடைபெற்ற காலங்களிலும் அது முடிந்து மீண்டுவருங் காலங்களிலும் நேரும் செலவுகளை நகரத்தாரே பொறுத்துக் கொண்டனர். இதனையன்றி ஒவ்வொரு புராணத்திற்கும் செய்யுளொன்றுக்கு ரூபா ஒன்றாகக் கணக்குப்பண்ணிக் கூடும் தொகைக்கு உண்டியல் கொடுத்து அத் தொகையை நாகபட்டினத்தைச் சார்ந்த வெளிப்பாளையத்திலுள்ள ஒரு கடையிற் பெற்றுக் கொள்ளும்படி செய்தனர்.

இவ்வாறு நகர வட்டகையிலுள்ள ஸ்தலங்களுக்குப் புராணங்கள் இயற்றி அரங்கேற்றிய காலத்திலேதான் பிள்ளையவர்கள் பெரிய தொகையைக் கண்ணாலே கண்டார்கள். அவர்கள் இந்த நன்றியை என்றும் பாராட்டி வந்தார்கள். நாராயண செட்டியாருடைய இயல்பை நினைந்து உருகி,

(வெண்பா)

"பாடுவதெங் கேயிந்தப் பாண்டிநாட் டெல்லவந்து
கூடுவதெங் கேயொருபாற் கோதையான்-நீடுபுகழ்ப்
பாரா யணனென்றிப் பார்முழுதுங் கொண்டாடும்
நாரா யணனிலையேல் நாம்"

என்ற செய்யுளைப் பாடியிருக்கிறார்கள்.

நியமங்கள்

செட்டியார் சிவபக்தி மிக்கவர். மிகவும் கடுமையான நியமங்களை மேற்கொண்டவர். ஒவ்வொரு நாளும் காலையில் ஸ்நானம் செய்து பின்பு விநாயகருக்கு ஆயிரத்தெட்டுக் குட்டுக்கள் குட்டிக்கொண்டு தோப்புக் கரணம் போட்டு முடித்துப் பஞ்சாட்சரத்தை ஆயிரத்தெட்டு முறை ஜபிப்பார். அகத்தியர் தேவாரத்திரட்டைப் பதம் பதமாக நிறுத்தி உச்சரித்து முழுவதும் பாராயணம் செய்த பிறகு தேவாரத்தில் பஞ்சபூத ஸ்தலங்களுக் குரிய பதிகங்களையும், வேறு சிலவற்றையும், திருவாசகத்திற் சில பதிகங்களையும் பாராயணம் செய்து விட்டுத் திருமுருகாற்றுப் படையை ஆறுமுறை ஓதுவார். இரவிலும் பஞ்சாட்சரத்தை 1008 முறை ஜபிப்பார். இவ்வாறு குறைவின்றிச் செய்து நிறைவேற் றிய பிறகே உண்பார். நியமம் பகலில் முடி யாவிடின் மாலையில் தொடர்ந்து செய்து விட்டுத்தான் சாப்பிடுவார். ஒருநாள் இரண்டு வேளையும் செய்யாவிடின் மறுநாள் நிறை வேற்றி விட்டே உண்பார்.

பிரயாணம் செய்கையில் நியமத்துக்குரிய காலம் வந்துவிட்டால் உடனே பிரயாணத்தை நிறுத்தி உரிய காலத்தில் அதனை முடித்துக் கொள்வார். மிகவும் பொறுமையாக ஓரிடத்

தில் நெடுநேரம் அமர்ந்திருந்து ஜபம் செய் வதில் அவருக்குச் சலிப்பு உண்டாவதில்லை. வண்டியில் வரும்போது மௌனமாக ஜபம் செய்து வருவார். நெடுநேரம் ஜபம் செய்து பசியோடு இருந்தாலும் ஜபம் செய்து முடிந்த பிறகு அவருக்கு ஒரு திருப்தி யுண்டாகும்; அப்பொழுது அதிக மகிழ்ச்சி யோடிருப்பார்.

### வன்றொண்டரென்ற பெயர் பெற்றது

அவர் திருவாவடுதுறைக்கு வந்திருந்த ஒரு சமயம் பல அன்பர்கள் அவருடைய ஒழுக்கச் சிறப்பையும், சிவபக்தி மிகுதியை யும், நியமங்களைத் தவறாமல் நிறைவேற்றும் உறுதியையும் எண்ணி வியந்து பாராட்டி, " இவருக்கு **வன்றொண்டர்** என்று பெய ரிட்டு வழங்க வேண்டும்'' என்று சொன் னார்கள். அதனைப் பிள்ளையவர்கள் கேட்டு அது மிகவும் பொருத்தமான தென்று சொல்லி,

(வெண்பா)

"சத்திவாழ் வாமத்துச் சங்கரன்பொற் றாட்கமலப்
பத்தியாற் றேவார பாராய—ணத்தினால்
வான்றோய் புகழ்மிகுத்த வன்றொண்ட னென்னும்பேர்
சான்றோய் நினக்குத் தகும்''

என்னும் செய்யுளையும், "வன்றொண்டனெனும் பேர் பெற்றாய்'' எனவரும் ஒரு விருத்தத்தை யும் கூற அன்று முதல் அப்பெயரே அவருக்கு

நிலைத்துவிட்டது. அக்காலத்திற்குப் பிறகு யாரேனும் நாராயண செட்டியா ரென்றழைத்தால் அவர் சற்று நாணமடைந்து, "இளமையில் வழங்கிய பேர் அது" என்பார்.

## ஞாபகசக்தி

பாடங் கேட்கும்பொழுது அழுத்தமாகக் கேட்பதும் கேட்டவற்றை மறவாமல் மனத்திற் பதித்திருப்பதும் அவர்பால் யாவருக்கும் மதிப்பை உண்டாக்கின. அவருடைய ஞாபக சக்தியை வியவாதவர்கள் இல்லை. பாடங் கேட்டுவருகையில் ஒரு முறை கேட்டதை மீட்டும் படித்துக் கேட்க விரும்பின் 'மறுத்து' என்று சொல்வது அவர் வழக்கம். படித்து வைத்தவற்றுள் இன்னபடலத்தில் இத்தனையாவது செய்யுளில் இன்ன சந்தேக மென்று குறிப்பிட்டுக் கேட்பார். குறிப்பொன்றும் கையில் இராது. பாடங் கேட்டு வருகையில், "இவ்வளவு செய்யுட்கள் ஆயின; போதும்" என்பார்.

ஒரு முறை மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் திருவாவடு துறையில் பெரியபுராணம் பாடஞ் சொல்லி வந்தார்கள். வன்றொண்டரும் வேறு சிலரும் கேட்டனர். ஒருவர் படித்துவந்தார். படித்துவந்த பகுதியில் ஒரு செய்யுளில் வன்றொண்டருக்குச் சந்தேகம் இருந்தது. அந்தப் பகுதி வருவதை அவர் எதிர்

பார்த்திருந்தார். படித்து வந்தவர் வழக்கம்போல வேகமாக அச்செய்யுளையும் படித்துக் கொண்டே சென்றார். மிகக் கவனமாக அதனை எதிர்பார்த் திருந்த செட்டியார், "இந்தச் செய்யுளுக்கு நன்றாகப் பொருள் விளங்கிற்றா?" என்று படித்தவரைக் கேட்டார். அவர் தெளிவாக அறிந்து கொள்ளவில்லையாதலின் விழித்தார். உடனே வன்றொண்டர், "ஊரிலிருந்து வருகை யிற் சந்தேகமிருந்த பாடல்களில் முக்கிய மானது இது. இது வரும் வருமென்று எதிர் பார்த்துக்கொண்டேயிருந்தேன். நீங்கள் சாதா ரணமாக இதைப் படித்துக்கொண்டே போய் விட்டீர்கள். இப்படிப் படித்துச் சென்றால் நாம் இதிலுள்ள சந்தேகத்தைத் தீர்த்துக்கொள் வது எப்படி? எல்லா ஐயங்களையும் தீர்க்கும் ஐயா அவர்கள் இங்கே இருக்கும்போது நாம் அவற்றைப் போக்கிக் கொள்ள வேண்டாமா? இவர்களைபோல ஐயங்களைப் பிரியத்துடன் போக்குபவர்கள் வேறு யார் இருக்கிறார்கள்? இவர்களிடம் படிப்பதற்குப் பிரயோசனந்தான் என்ன? நான் சொல்வதையெண்ணிக் கோபித் துக் கொள்ளக் கூடாது" என்று சொல்லி அச் செய்யுளை விளக்கும்படி பிள்ளையவர்களை வேண்டினர். அவர்கள் அங்ஙனமே நன்றாக விளக்கினார்கள். அச்செய்யுள் இன்னதென்று இப்பொழுது ஞாபகத்துக்கு வரவில்லை.

பிள்ளையவர்களிடம் நான் பாடங் கேட்டு வந்த காலத்தில் ஒருசமயம் கந்தபுராணத்தை அவர்கள் சொல்லி வந்தார்கள். அந் நூலில் கயமுகனுற்பத்திப் படலத்தில் "மாண்டகுமவ் வலியகலன்" எனத்தொடங்கும் 70-ஆம் செய்யுளுக்குரிய பொருள் பிள்ளையவர்களுக்கு விளங்காமையால் நெடுநேரம் யோசித்தார்கள்; தெளியவில்லை; அப்பால், "இந்நூலை வன்றெண்டர் என்பால் முன்பு பாடங்கேட்டிருக்கிறார். கேட்டவற்றை நன்றாகச் சிந்தித்து வைத்திருப்பவராதலின் அவரைக் கேட்டால் சொல்வார்" என்றார்கள். அவ்வாறே அவர் ஊரிலிருந்து வந்திருந்த ஒரு காலத்தில் பிள்ளையவர்கள், "கந்தபுராணம் கயமுகனுற்பத்திப் படலத்தில் ஒரு சந்தேகம்" என்று சொல்லத் தொடங்கும் போதே, "மாண்டகுமவ்வலியகலனென்னும் செய்யுளோ?" என்று அச் செய்யுள் முழுவதையும் சொல்லித் தாம் முன்பு கேட்டிருந்தபடி பொருளையும் கூறினர். இதனைக் கேட்ட எங்களுக்கு மிக்க வியப்பு உண்டாயிற்று. அவர் தாம் கற்றவற்றைப் போற்றிப் பாதுகாத்து வைத்திருக்கும் அருமையை யாவரும் பாராட்டினர்.

## பிச்சுவையர்

திருப்பெருந்துறைப் புராணத்தைப் பிள்ளையவர்கள் அரங்கேற்றிய காலத்தில் முதலி

விருந்து இறுதிவரையில் செட்டியார் உடனிருந்து கேட்டுவந்தார். திருப்பெருந்துறைக்குச் சென்ற தினத்தில் வேம்பத்தூர்ப்பிச்சுவையரும் சிலதனவணிகர்களும் வன்றொண்டருடன் அத்தலத்து விசாரணைக்கர்த்தரும் அப்புராணத்தை ஆக்குவித்தோருமாகிய ஸ்ரீ சுப்பிரமணியத் தம்பிரானவர்களைப்பார்க்கச்சென்றனர். செல்லும்பொழுதே பிச்சுவையர்,

(வெண்பா)

"இன்றொண்டர் சூழ எழிலார்நின் சேவைசெய
வன்றொண்ட ரோடுகன வான்கள்சிலர்—இன்றொண்டு
பித்தர்க்கே செய்சுப் பிரமணிய நின்னோலக்
கத்திலே வந்திருந்தார் கள்"

என்ற பாடலைச் சொல்லிக்கொண்டே வந்தார். உடனிருந்தவர்கள் அவர் விரைவிற் செய்யுளியற்றும் திறமையை வியந்து பாராட்டினர்.

அன்று மாணிக்கவாசகர் திருநாளாதலின் திருவாதவூரடிகள் ரிஷபங்கள் கட்டிய ரதத்தில் திருவுலா வந்தனர். அந்த ரிஷபங்களைப்பற்றி ஒரு செய்யுள் செய்யவேண்டுமென்று வன்றொண்டர் பிச்சுவையரிடம் கூறினார். உடனே அவர்,

"வீடுபெற்ற வாதவூர் வித்தகனார் தேரிழுக்கும்
மாடுபெற்ற பேறுபெற மாட்டுவரோ—நீடுலகில்
வித்தை யறியாமல் வீணாக வேயுழல்தே
கத்தைச் சுமந்தலுத்தோர் கள்"

என்ற வெண்பாவைப் பாடினார். கேட்ட செட்டியார் அவரை மிகவும் பாராட்டினார்.

## பிள்ளையவர்கள் அன்பு

புராண அரங்கேற்றம் பிற்பகலில் மூன்று மணிக்கு மேல் தொடங்கப்பெறும். வன்றொண்டர் நியமங்களை முடித்துக் கொண்டு ஆகாரம் செய்துவிட்டுப் புராணப் பிரசங்கத்தைக் கேட்க வந்து விடுவார். சில நாட்களில் நியமங்கள் முடிய நேரமாய் விடின் உண்ணுமலே வந்து விடுவார். ஒரு நாள் அவர் வரச் சிறிது நேரம் சென்றது. பிள்ளையவர்கள் அவர் வரும் வரையிற் புராணப் பிரசங்கத்தைத் தொடங்காமல் இருந்தார்கள். அதனுல் ஸ்ரீ சுப்பிரமணியத் தம்பிரானவர்களுடைய கோபத்துக்குப் பாத்திரராக நேர்ந்தது. அத் தம்பிரானுடைய கோபம் ஆறச் சில நாட்கள் சென்றன. இச் செயலால் பிள்ளையவர்களுக்கு வன்றொண்டரிடம் இருந்த அன்பு யாவருக்கும் வெளிப்பட்டது.

## சோதிடர் இரகுநாதையர்

அக்காலத்தில் ஆறுமுகநாவலரவர்களிடமிருந்து, 'இவர்களை ஆதரித்து அநுகூலம் செய்யவேண்டும்' என்று குறிப்பித்துள்ள கடிதம் பெற்று யாழ்ப்பாணத்திலிருந்து இரகுநாதையரென்ற சோதிடரொருவரும் வேறொருவரும் வந்தனர். வன்றொண்டர் அவர்களை ஆதரித்துத் தம்முடைய சத்திரத்திற் சில மாதங்கள் வைத்திருந்து உபசரித்தனுப்பினர்.

## சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

திருப்பெருந்துறைப்புராணம் அரங்கேற்றி வந்தகாலத்தில் பிள்ளையவர்களைச் சேக்கிழார் பிள்ளைத்தமிழ் இயற்றும்படி வேண்டிக் கொண்டவர் வன்றொண்டச் செட்டியாரே. புராணம் அரங்கேறிய பின்பு பிள்ளையவர்களைத் தேவகோட்டைக்கு அழைத்துச் சென்று அறுபத்துமூவர் குருபூஜை மான்மியமென்னும் நூலை இயற்றச் செய்து உபசரித்தனர். அவர் பிள்ளையவர்களிடம் வைத்திருந்த பெருமதிப்பினால் தனவணிகர் பலர் அக்கவிஞர்பிரானிடம் அன்பு பூண்டு அவர்களை ஆதரிக்கத் தொடங்கினர்.

## திருவாவடுதுறை மடத்துப் பழக்கம்

திருவாவடுதுறை மடத்திலுள்ள யாவருக்கும் வன்றொண்டரிடம் மதிப்பு இருந்தது. அவருக்குக் கோபம்வரும்படி யாரும்நடக்கமாட்டார். தவசிப் பிள்ளைகள் முதலியவர்கள் கூட அவரிடம் மிக்க மரியாதையோடு ஒழுகி உபசரித்து வந்தனர்.

பிள்ளையவர்கள் காலத்துக்குப் பிறகும் வன்றொண்டர் திருவாவடுதுறை மடத்திற்கு வந்து செல்வதுண்டு. அவர்கள் காலத்தில் எங்கெங்கே சென்று யார் யாருடன் பழக நேர்ந்ததோ அவ்வவ்விடங்களில் அவர்கள் காலத்துக்குப் பின்பும் சென்று அங்குள்ளவர்களோடு பழகி வந்தார். திருவாவடுதுறைக்கு வந்த

காலங்களில் நான் அவருடன் இருப்பேன். அவரிடம் சில நூல்களிலுள்ள சந்தேகங்களை நான் தீர்த்துக்கொண்ட துண்டு.

### நமச்சிவாய தேசிகர் சாதுரியப் பேச்சு

ஈசுவர வருஷத்தில் (1877) மதுரையில் மகாகும்பாபிஷேகம் நடைபெற்றது. அதற்குத் திருவாவடுதுறை ஆதீன கர்த்தராகிய மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரும் சின்னப்பட்டம் ஸ்ரீ நமச்சிவாய தேசிகரும் அடியார் குழாங்களோடு சென்றிருந்தனர். வன்றொண்டரும் போயிருந்தார். அங்கே நமச்சிவாய தேசிகரைத் தரிசிக்கும்பொருட்டுக் கையுறையாகக் கொண்டு சென்ற இரண்டு எலுமிச்சம் பழங்களை அவர் கொடுத்து வணங்கினர். அப்பொழுது அத்தேசிகர், "ஐயா, நீங்கள் கொடுத்தவை இரண்டு பழமானாலும் நாலு பழம்" என்று சாதுர்யமாகப் பேசினர். நாலு பழமென்பதற்கு (மரத்தில்) தொங்கும் பழமென்றும், நான்கு பழமென்றும் இரண்டு பொருள் தொனித்தன. அதைக் கேட்ட செட்டியார், "சாமி, சாமி, நன்றாக இருக்கிறது!" என்று வியந்தார். உடனே தேசிகர், "நான் குறையப் படித்தாலும் கூடப்படித்தவனல்லவா?" என்று மீண்டும் கூறினர். கூடப் படித்தவனென்பதற்கு, அதிகமாகப் படித்தவனென்றும், உடனிருந்து படித்தவனென்றும் இரண்டு

பொருள்கள் தோன்றின. நமச்சிவாய தேசிகர் வன்றொண்டரோடு பிள்ளையவர்களிடம் பாடங் கேட்டவர். அவருடைய சிலேடை வார்த்தைகளைக் கேட்டு வன்றொண்டர் இன்பத்தை யடைந்து அவருடைய அறிவுநுணுக்கத்தைப் பாராட்டினர்.

### தியாகராச செட்டியார் கடிதம்

எனக்குக் கும்பகோணம் காலேஜில் வேலையானபிறகு, தாம் விலகியதையும் எனக்கு அவ்வேலையைச் செய்வித்திருப்பதையும் தெரிவித்து, பிள்ளையவர்கள் மாணாக்கரும் வன்றொண்டருடைய நண்பருமாகிய ஸ்ரீ தியாகராச செட்டியார் அவருக்கு ஒரு கடிதம் எழுதினர்; அதன் தலைப்பில் ஒரு வெண்பாவை அமைத்திருந்தனர். அது,

"முத்திக்கு வித்தாய மூவருள் தேவாரப்
பத்திக்கு வித்தாய பான்மையான்-தித்திக்கும்
பாவலர்சொல் சீர்த்*தேவைப் பாலுதித்த வன்றொ
நாவலவன் காண்க நயந்து" [ண்ட

என்பது. அக்கடிதத்தைப் பெற்ற அவர் தம்முடைய சந்தோஷத்தை அறிவித்து ஒரு விடை எழுதினர். அவர்மீது பலர் பல சமயங்களில் இயற்றிய செய்யுட்கள் பலவுண்டு.

### மாணாக்கர்களின் திறமை

தமிழ்ச்சுவையை அறிவதிற் பேராற்றலுடைய அவருக்குச் செய்யுளியற்றும் சக்தி

* தேவகோட்டை

அமையவில்லை; இதைப்பற்றிய பேச்சுவந்தால் அவர், "இக்காலத்தில் என்னைப் போலவே, கண்ணில்லாதவராகிய மாம்பழக் கவி நன்றாகப் பாடுகிறாரென்று கேள்வி; நான் மட்டும் செய்யுள் செய்யும் ஆற்றலைப் பெறவில்லை. அதனாலே குற்றமில்லை. என் ஆசிரியர் பாடுவதில் ஒப்புயர்வற்றவர். என்னுடைய மாணாக்கர்களுள் சின்னையா செட்டியார் முதலியோர் மிக நன்றாகப் பாடுகிறார்கள். நான் இளமையில் வெளிப்பாளையத்திலுள்ள விநாயகர்மீது இரண்டு வெண்பாக்கள் இயற்றியிருக்கின்றேன். பழம் பாடல்களை அறிந்து சிந்திப்பதிலும் ஜபம் முதலியன செய்வதிலும் என்னுடைய காலம் சரியாய் விடுகின்றது" என்று கூறுவார்.

அவருடைய மாணாக்கராகிய சின்னையா செட்டியார் பலபிரபந்தங்களையும் புராணங்களையும் இயற்றியவர்; காரைக்குடிச் சொக்கலிங்கையாவும் பற்பல பிரபந்தங்களையும் வேறு நூல்களையும் இயற்றியவர்; இவ்விருவரும் இயற்றிய தனிப் பாடல்கள் அளவிறந்தன. வன்றொண்டருடைய மாணாக்கர் யாவரும் அவரைப் போலவே தெளிவாகப் பாடஞ் சொல்வார்கள்.

## இயல்புகள்

வன்றொண்டர் எந்த ஊருக்குச் சென்றாலும் அங்குள்ள அபிஷிக்தரொருவர் வீட்டிலே தங்குவார். தவசிப்பிள்ளை ஒருவன் எப்போதும்

உடனிருப்பான். அவருடைய வாழ்க்கையில்சிவ பக்தியும் தமிழன்பும் புலப்பட்டனவே யொழி யப் பொருளைப் பற்றிய நினைவு அவருக்கு எந்தக் காலத்தும் இருந்ததாகத் தெரியவில்லை. சில ரொக்கக் கடைகள் அவருக்கு உண் டென்பர். அவற்றைப்பற்றி அவர் பேசியதை நாங்கள் ஒருபோதும் கேட்டதில்லை.

அவருடைய தேகம் மெலிந்திருக்கும். அவ ருக்குச் சிறிது வயிற்றுவலி உண்டு. அது சில சமயங்களில் வருத்தும்; அப்போது வயிற்றைப் பிடித்துக்கொண்டே ஜபம் செய்வார். நாங்கள் பார்த்து வருந்துவோம். அவருக்குக் கலியாண மாகி யிருந்தது. ஒரு பெண் குழந்தை மட்டும் உண்டென்று கேள்வி.

எந்தக் காரியத்தையும் அருகிலிருந்து கவ னித்துத் திருத்தமாகச் செய்விப்பதில் அவ ருக்கு ஊக்கம் அதிகம். திருப்பெருந்துறைக்கு வந்த காலங்களில் ஊறுகாய் மடத்திலும் உப்பு மடத்திலும் சென்று அங்குள்ளவர்கள் குறை வின்றித் தம் பணியைச் செய்து வரும்படி வற் புறுத்திக் கவனித்து வருவார். பேசும் பொழுது அழுத்தந் திருத்தமாகப் பேசுவார். வல்லின றக ரத்தைச் சற்று வன்மையாகவே உச்சரிப்பார்.

நூற்பதிப்பு

திருத்தமில்லாத நூல்களை நன்றாக ஆராய்ந்து திருத்தமுற வெளியிடவேண்டு மென்பது அவருடைய அவா. திருவாப்பனூர்ப்

புராணத்தையும் சிங்கைச் சிலேடை வெண் பாவையும் அவர் ஆராய்ந்து பதிப்பித்தார். பாண்டிநாட்டுத் தேவாரம் பெற்ற பதினன்கு தலங்களின் புராணங்களையும் பதிப்பிக்க எண்ணிப் பன்முறை படிப்பித்து ஆராய்ந்து வந்தார். திருத்தணிகைப் புராணத்தை மதுரை இராமசாமிப்பிள்ளை பதிப்பிக்க வெண்ணிப் பரிசோதித்து வருகையில் அவர் உடனிருந்தார். கடினமான பாடல்களுக்கு அவர் உரை சொல் வதைக் கேட்ட இராமசாமிப் பிள்ளை, "இவருடைய பக்தி விசேஷம் நன்ருகப் புலப்படுகிறது. அதனுல்தான் மிகக் கடினமான பகுதிகளெல்லாம் இவருக்கு எளிதில் விளங்குகின்றன" என்று பாராட்டுவார். அக்காலத்தில் இராமசாமிப்பிள்ளை தாம் எழுதிவைத்திருந்த குறிப்புரையோடு அப்புராணத்தை என் விருப்பப்படி யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம்பிள்ளையவர்களிடம் கொடுத்து விட்டார். அந்தக் குறிப்புரை தாமோதரம்பிள்ளை அந்நூலைப் பதிப்பிக்க மிக்க உதவியாக இருந்தது. என்ன காரணத்தாலோ குறிப்புரையை அவர் பதிப்பிக்கவில்லை.

வன்றொண்டர் தாம் பயின்ற நூல்களில் தாமே உழைத்து ஆராய்ந்து அறிந்துவைத்த செய்திகள் பல. அவற்றைப் பிறருக்கும் அறிவிக்க வேண்டுமென்னும் கருத்து அவருக்கு மிகுதியாக உண்டு.

## இறுதிக்காலம்

சிவ பக்திச் செல்வராகிய அவர் சித்திர பானுஞு ஆனிமீ பதினேராந் தேதி (28—6—1882) புதன்கிழமையன்று மதுரையில் ஏழுகடற்றெருவிலுள்ள ஓரந்தணர் மனையின் திண்ணையிலிருந்து சிவபிரான் திருவடி நிழலையடைந்தார். அவர் தம்முடைய இறுதிக் காலத்தை ஆறுமாதத்திற்குமுன்னரே அறிந்து தம் மாணுக்கர்களிடம் தெரிவித்திருந்தனரென்றும் தம்முடைய மரணகாலம் நெருங்குவதை யறிந்து பூலோக சிவலோகமென்று புகழப்படும் மதுரையை யடைந்தனரென்றும் நித்த நியமங்களை முடித்துக்கொண்டு வையைமணலைப் பரப்பி அதன் மேல் தருப்பையை விரிக்கச் செய்து அதிற் படுத்துச் சிவத்தியானத்தோடே பூதவுடம்பை நீத்தனரென்றும் பின்வரும் செய்யுட்கள் அறிவிக்கின்றன:

(அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்)

(1) "இத்தகை யதவை யுள்ளவா றுணர்ந்தோர்
எந்தைநின் றிருவடி நீங்கா
மெய்த்திரு வடைந்தார் நாயினுங் கடையேன்
மேவிடா துலைந்தன னந்தோ
உய்த்துணர் வுடையோய் முன்னநீ யாங்கோண்
டுற்றதோ ரிவ்வுட லுலகில்
வைத்திட லாறு திங்களுக் காகும்
மற்றதன் மேலிது தரியா."

(2) "ஆதலி னதன்முன் வேண்டிய வெல்லாம்
அறைகுதிர் தருதுமென் றறையா

தோதிலை யறுபான் மூன்றுமெய் யடியார்க்
குறுகுரு பூசைக ளென்றும்
ஏதமொன் றின்றி நடைபெறு வதனுக்
கியைவன புணர்வித்தா யெந்தாய்
பாதகன் யாவு முணர்ந்துநின் னடையாப்
பதிதனுய்ச் சேய்மையிற் கிடந்தேன்.''

(3) "அந்தந்தோ விவ்வா றெம்பொருட் டிரங்கி
அருளவு மவற்றையு மறந்து
நொந்தந்தோ வுலவா னென்றலை விதியின்
நோன்மையிங் கீர்த்திது நுகைத்தேன்
பந்தந்தோய் கில்லா முனிவரர் போற்றும்
பசுபதிக் கினியவெம் மடிகேள்
அந்தந்தோ வந்தோ நீமுன முரைத்த
மதியமு மாறுவந் தடுத்த.''

(4) "இந்நிலத் துள்ளார் பின்னருந் தேறி
இயற்றுவ நன்மையே யியற்றி
மெய்ந்நெறி நின்றே நின்னடி யடைவான்
விழைந்துநீ யான்றவ ரெவர்க்கும்
புன்னெறி யடையா ரடைசிவ புரிக்கே
போகுது நாமெனப் புகன்று
முன்னுறு கருத்தான் வாவியங் களிற்று
முகத்தன்மாட் டனுக்கைபெற் றேகி.''

(5) "மந்தரங் கயிலை பருப்பதங் காசி
மற்றுள பெரும்பதி யெல்லாம்
அந்தர நாட னென்றும்வீற் றிருக்கும்
ஆலவாய்க் கோப்பிலென் றருளி
எந்தம ராகு மடியவ ரோடும்
ஏகியப் பதியிடைச் சோம
சுந்தர னேடு கயற்கணி பாதந்
தொழுதுல குய்ந்திடத் துதித்து.''

(6) "........................................
சித்திர பானு வருடத்தி லானித்
திங்களிற் சோடச தினத்தில்.''

(7) "புந்தியோன் வாரந் துவாதசி திதியும்
புனிதமா மனுசநன் ஞளும்
வந்துறு கடக லக்கின மாகும்
மங்கலங் கூடுறு பொழுதிற்
பந்தம தகற்றி வீடருள் சுவண
பங்கய வாவிநன் னீரில்
தந்திர விதியா சாரந்தி லொன்றும்
தாழ்வுரு தன்பொடு மூழ்கி."

(8) "பூதியு மணிந்து கண்டிகை பூண்டு
புனிதவைந் தக்கரம் புகன்று
கோதிலா மயத்தாற் றிருமெழுக் கிட்டுக்
குளிர்புனல் வையைவா லுகத்தை
மீதுறப் பரப்பி யதன்மிசைத் தருப்பை
வெள்ளிய தூசதன் மேலும்
தீதற விரித்த சுத்ததா னத்திற்
றிசைவடக் குறவிருந் தெந்தாய்."

(9) "ஆட்டுவா னுடிக் காட்டுதல் போல
அண்ணனீ யுண்ணெகிழ்ந் துருகி
நீட்டுறு வேணிப் பகவன தடியே
நினைந்துநற் சமாதியி லிருந்து
தோட்டலர் நெருங்கி யெழிலுறத் திகழ்ந்த
தூய்தாம் விமானமீ திவர்ந்து
பாட்டரு வளிதே னுகர்பொழி லுடுத்த
பதிசிவ புரியினை யடைந்தாய்."

* *இவை வன்றொண்டருடைய மாணுக்கர் ஒருவராற் பாடப்பட்டவை.*

*வன்றொண்டருடைய தீவிர சிவபக்தியினுல் வாய்ப்பதற்கரிய நிகழ்ச்சி இங்ஙனம் நிகழ்ந்தது. பட்டினத்துப் பிள்ளையார் இறைவனை,*

* *யாழ்ப்பாணம் 'சைவ உதயபானு' என்னும் பத்திரிகையில் வெளிவந்தவை.*

"நல்லா யெனக்கு மனுவொன்று
தந்தருண் ஞானமிலாப்
பொல்லா வெனைக்கொன்று
போடும் பொழுதியல் பூசைசெபம்
சொல்லார்நற் கோயி லியமம்
பலவகைத் தோத்திரமும்
எல்லா முடிந்தபின் கொல்லுகண்
டாய்கச்சி யேகம்பனே"

என்று வேண்டிய வேண்டுகோள் அவருடைய மரபில் வந்த வன்றொண்டர் திறத்திலும் நிறைவேறியதைக் குறித்து மாணுக்கர்களும் அன்பர்களும் நினைந்து பாராட்டி உருகினார்கள்.

அன்பின் திறத்திலும், தமிழறிவின்திறத்திலும் பட்டினத்து அடிகளையும், அந்தகக்கவி வீரராகவ முதலியாரையும் நினைப்பூட்டும் வன்றொண்டருடைய வரலாறு தனவணிகர்களுடைய பெருமையைக் குறிப்பதாகும்.

---

## 3. * அரியிலூர்

எனது இளமைப் பருவத்தில் என் தந்தையாராகிய வேங்கட சுப்பையரவர்கள் அரியிலூரில் சம்ஸ்தான சங்கீத வித்துவாளுக இருந்தார்கள். இந்தச் சம்ஸ்தானத்து ஜமீன்தாரால் இலந்தங்குழி என்னும் ஓரூரில் பத்துக் காணி நிலத்தைச் சர்வமானியமாகப் பெற்று

* அரியிலூர்ப் போர்டு ஹைஸ்கூலில் ஆசிரிய மாணவர் சங்கத்தின் வருஷாரம்பப் பிரசங்கமாக 19-7-33-இற் செய்யப்பட்டது இது.

வாழ்ந்து வந்தார்கள் அவர்களிடத்தில் சங்கீதம் கற்றவர்கள் பலர்.

என்னுடைய 7-ஆம் பிராய முதல் 11-ஆம் பிராயம் வரையில் இவ்வூரில் இருக்கும் பேறு எனக்குக் கிடைத்தது. அக்காலத்துப் பழக்கத்தாலும் கேள்வியாலும் பிற்காலத்து நூலாராய்ச்சியாலும் இந்தச் சம்ஸ்தான சம்பந்தமாக நான் தெரிந்து கொண்டவற்றில் எனக்கு ஞாபகம் உள்ளவற்றைத் தெரிவிக்கிறேன்:

அரியிலூரென்னும் பெயர் அரியிலெனவும் வழங்கும். சங்கப் புலவர்களுள் ஒருவராகிய அரிசில்கிழாரென்பவருடைய ஊராகிய அரிசிலென்பது இவ்வூர் என்று சிலர் கூறுவதுண்டு. இங்கே மிகப் பிரசித்தமான பழைய திருமால் கோயிலொன்று இருக்கிறது. அரிக்கு இல்லாக (இருப்பிடமாக) இத்தலம் இருத்தலால் அரியிலெனப் பெயர் பெற்றதென்பர்.

## விஷ்ணுவாலயம்

இங்கே உள்ள விஷ்ணுவாலயம் பெரியது. இதன்கண் எழுந்தருளியுள்ள பிரதானமான பெருமாளின் திருநாமம் வேங்கடேசப் பெருமாளென்பது. கோயிலில் இளைய பெருமாள், பிராட்டியார், ஆஞ்சநேயர் என்பவர்களோடு ஸ்ரீ கோதண்டராமஸ்வாமி மூலவராகவும் உத்ஸவராகவும் எழுந்தருளியிருக்கும் சந்நிதி ஒன்றுண்டு. வனவாசத்தில் அவர்கள் இருந்த

திருக்கோலமாக அவ் விக்கிரகங்கள் அமைந்துள்ளன.

கோயிலின் மகாமண்டபத்தில் தசாவதார மூர்த்திகளும் மிகப் பெரிய திருவுருவத்தோடு தூண்களில் எழுந்தருளி யிருக்கின்றனர். அதனால் அம் மண்டபம் தசாவதார மண்டபமென வழங்கும். அந்த மூர்த்திகளைப்போல அவ்வளவு பெரிய மூர்த்திகளை வேறிடங்களிற் காணுதல் அரிது. சிற்ப வேலைப்பாடுகள் மிகச் சிறப்புடையனவாக அம் மண்டபத்தில் அமைந்திருக்கின்றன. பத்து மூர்த்திகளுள் உக்ரநரசிம்ம மூர்த்தி மிக அதிகமாக அன்பர்களால் வழிபடப்பட்டு வருகின்றார்.

கீழைப் பழுவூர்

இவ்வூருக்குத் தெற்கே கீழைப் பழுவூர் என்னும் தேவாரம் பெற்ற ஒரு சிவ ஸ்தலம் இருக்கிறது. அதில் உள்ள தலவிருட்சம் ஆல். பழு என்னும் சொல்லுக்கு ஆலென்பது பொருள். ஆலமரத்தைத் தல விருட்சமாக உடையதாதலின் பழுவூரென்னும் பெயரும் ஆலந்துறை என்னும் பெயரும் அதற்கு உண்டாயின. அங்கே ஒரு சிவ தீர்த்தம் உண்டு. அத்தலத்தில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமான் திருநாமம் ஆலந்துறையீசர் எனத் தமிழிலும் வடமூலேசர் என வடமொழியிலும் வழங்கும். அம்பிகையின் திருநாமம் அருந்தவநாயகியென்பது. சிவபிரானை மணந்துகொள்ளும்

பொருட்டு அம்பிகை தவஞ்செய்தமையால் அத் திருநாமம் உண்டாயிற்றென்பது அத்தலபுராண வரலாறு. அன்றியும் பரசுராமருக்குண்டான மாதுருஹத்திதோஷம் அத்தலத்துக்கு வந்து தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பூசித்ததனல் நீங்கியதென்பர். தீர்த்தவிசேடமுடையதாதலின் துறையென்னும் பகுதி அத்தலப் பெயரோடு சேர்ந்திருக்கிறது. பரசுராமருடைய திருவுருவம், வட மூலேசருடைய மூலஸ்தானத்தின் முன் புள்ள நிலேயின் மேலேயுள்ள கல் உத்தரத்திற் சயனித்த கோலமாக அமைக்கப்பெற்றுள்ளது. பரசுராமர் தாம் வழிபட்டகாலத்தில் மலேநாட்டு அந்தணர்களேக் கொண்டு பூசையியற்றச் செய் தனர்; பிற்காலத்தும் மலேநாட்டந்தணர் பூசை யியற்றி வந்தனர். இது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் தேவாரத்தில்,

"மண்ணின்மிசை யாடிமலை யாளர்தொழு தேத்திப்
பண்ணிெைலி கோண்டுபயில் கின்றபழு வூரே"

"அந்தணர்க ளானமலை யாளரவ் ரேத்தும்
பந்தமலி கின்றபழு வூரரனை"

என்று கூறப்படுகின்றது. இக்காலத்தில் இவ் வழக்கம் காணப்பட வில்லே. அங்கே உள்ள சிலாசாசனங்களால் பழுவேட்டரைய ரென்ற பட்டம் பெற்றவர்களும் சோழ அரசனுடைய அதிகாரிகளுமாகிய சிலர் அங்கே இருந்தார்க ளென்று அறியலாம்.

## சிவாலயம்

அரியிலூரிலிருந்த ஒரு சிவபக்தர் தினந் தோறும் கீழைப் பழுவூர் சென்று சிவ தரிசனம் செய்துவிட்டு வந்த பின்பே உண்பது நியமம். இவ்விரண்டு ஊர்களுக்கும் இடையில் உள்ள மருதயாற்றில் ஒருநாள் அதிக வெள்ளம்வந்தது. பழுவூர் செல்ல வந்த அன்பர் அவ்வாற்றின் வெள்ளத்தால் தடைப்பட்டுக் கரையில் நின்று ஆராமை மீதூரப் புலம்பி நைந்தார். உணவு கொள்ளாதிருந்தமையாலும் ஆற்றாமையாலும் சோர்ந்து விழுந்தனர். உறக்கம் உண்டா யிற்று. அப்பொழுது அவருடைய கனவில் சிவ பெருமான் ஒரு முதிய அந்தணத் திருக்கோலங் கொண்டு எழுந்தருளி, "இனி நீ தினந்தோ றும் பழுவூர் வந்து அலையவேண்டாம். அரியி லூரிலேயே இன்ன இடத்தில் ஆலயம் அமைத்து அங்கே எம்மையும் அம்பிகையை யும் பிரதிஷ்டை செய்வித்து வழிபட்டு வருக. அங்கே நாம் சாந்நித்தியமாக இருந்து மகிழ் வோம்" என அருளிச்செய்து மறைந்தனர். பின்பு உணர்வு வரப்பெற்ற அவ்வன்பர் சிவ பெருமானது திருவருளை வியந்து அவர் இட்ட கட்டளைப்படியே இவ்வூரில் சிவாலயம் அமைத்தனர். பழுவூர்த் தலத்திலுள்ள மூர்த்தி களின் திருநாமங்களே அரியிலூரில் உள்ள மூர்த்திகளுக்கும் இடப்பட்டு வழங்குவன வாயின.

வேறு கோயில்கள்

துர்க்காதேவியின் பல பேதங்களுள் ஒரு தெய்வமாகிய ஒப்பிலாதவள் என்னும் தேவிக்கு ஒரு கோயில் இங்கே உண்டு. அது மிகவும் பிரசித்தி பெற்றது. அரியிலூர் ஜமீன்தார்களுக்கு அத்தேவி குலதெய்வமாயிருத்தலன்றி, அவர்களுடைய படையாளர்களாகிய மழவர்களுக்கு வழிபடு தெய்வமாகவும் இருந்ததாகத் தெரிகிறது.

குறிஞ்சான் குளம் என்னும் ஒருதடாகத்தின் கரையில் வாயு மூலையில் அரசு நட்ட பிள்ளையார் கோயில் என்னும் ஓராலயம் இருக்கிறது. ஒரு காலத்தில் அரியிலூர் ஜமீன்தாரொருவர் மீது பகையரசனொருவன் படையெடுத்து வந்தான். அவனுடைய படை அளவிற் பெரியதாக இருந்தது. இந்த ஜமீன்தாருடைய படை அதனை எதிர்க்கும் ஆற்றலுடையதாகத் தோற்றவில்லை. அதனால் அவர் மிகவும் வருந்தினர். தோல்வியுற்றால் தம்முடைய சம்ஸ்தானத்தை இழக்க நேரிடுமே என்ற கவலை அவருக்குஉண்டாயிற்று. அப்போது எப்படியாயினும் பின் வாங்காமல் எதிர்த்துப் போர் செய்வதையன்றி வேறு வழியில்லை யென்றெண்ணினர். தெய்வபலத்தையன்றி மனிதபலத்தால் தமக்குவெற்றி கிடைப்பது அரிது என்பதை அவர் உணர்ந்தார். ஆதலின் திருவருளே துணையெனத் துணிந்து தம் படையுடன் சென்றார். செல்லு

கையில் அக்கோயிலிலுள்ள விநாயகரை உள்ளம் உருகி வணங்கித் தம்மைக் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்தித்தார். விநாயகர் திருவருளால், வந்த பகையரசரது படை ஜமீன் தார் படைக்கு எதிர்நிற்கும் வலியின்றிப் புறங் கொடுத்து ஓடிப் போயிற்று. ஜமீன்தார் வெற்றி பெற்றார். தாம் வெற்றி பெற்றதற்குக் காரணம் விநாயகர் திருவருளே என்பதை அவர் நன்றாக அறிந்தனர். தம் அரசை அழி யாதபடி மீண்டும் நிறுவுவித்த அருளுடையவ ராகையால் அம்மூர்த்திக்கு 'அரசுநட்ட பிள்ளை யார்' என்ற திருநாமம் சூட்டி அவரை வழிபட்டுப் பலவகைச் சிறப்புக்களைச் செய்தனர். அரசு நட் டானேரி என்ற ஏரி ஒன்றையும் அருகில் வெட் டுவித்தார். இக்காலத்தும் நிமித்தம் பார்ப்ப தற்கு அக்கோயிலுக்குப் பலர் செல்லுவர்.

இவ்வாலயங்களையன்றி விசுவநாதஸ்வாமி கோயில், சஞ்சீவிராயன் கோயில், காளிங்க நர்த்தனர் கோயில் முதலிய பல கோயில்கள் உண்டு. மிகவும் தூயராகவும் செல்வராகவும் சம்ஸ்தானத்து அதிகாரியாகவும் இருந்து விளங்கிய மீனாட்சி தீட்சிதரென்பவரால் கட்டப் பெற்ற பெரிய மண்டபமொன்று இவ்வூரி லுள்ள குறிஞ்சான் குளத்தின் தென்கரையில் உள்ளது. அதற்கு மீனாட்சி மண்டபமென்பது பெயர். அதனுள் விநாயகர் கோயிலும் சிவ விஷ்ணு ஆலயங்களும் உண்டு. என்னுடைய

இளம்பிராயத்தில், அங்கே பூசைகள் செவ்வனே நடைபெற்று வந்ததைப் பார்த்திருக்கிறேன்.

ஜமீன்தார்கள்

அரியிலூர் ஸம்ஸ்தானம் பல நூற்றாண்டுகளாகச் சிறப்புற்று வந்ததாகும். இந்தச் சம்ஸ்தானத்து ஜமீன்தார்கள் பலரைப்பற்றிய பழந்தமிழ்ப் பாடல்களும் வடமொழிச் சுலோகங்களும் தெலுங்குப் பத்தியங்களும் கீர்த்தனங்களும் பல உண்டு. இவர்களின் குடிப்பெயர் குன்றை ஒப்பிலாத மழவராயர் என்பது.

அரியிலூருக்குக் குன்றை என்பது ஒரு பெயர். இதனைச் சூழ்ந்துள்ள நாடு குன்றவள நாடு என்னும் பெயர்பெறும். அதுவே குன்றையென மருவி வழங்குகின்றது. மலைத்தொடர் இங்கே ஆரம்பமாகின்றதாதலின் அப்பெயர் இந் நாட்டிற்கு உண்டாயிற்றென்று தோற்றுகின்றது. இதனருகிலுள்ளனவாகிய பெரிய திருக்குன்றம், குன்றம் என்னும் ஊர்களின் பெயர்கள் இக்கருத்தை வலியுறுத்தும்.

முற்கூறிய ஒப்பில்லாதவளென்னும் துர்க்கையைக் குலதெய்வமாக உடையவர்களாதலின் 'ஒப்பிலாத' என்னும் தொடர் இந்த ஜமீன்தார்களின் பெயர்களோடு சேர்த்து வழங்கப்படுகின்றது.

மழவராயர்

மழவராயரென்பதற்கு மழவர்களுக்குத்

தலைவரென்பது பொருள். மழவர்களென்ப வர்கள் சிறந்த வீரர்களுக்குள் ஒரு பகுதியார். சங்க நூல்களிலும் பழைய சாசனங்களிலும் அவர்களைப் பற்றிய செய்திகளும் அவர்களது வீரத்தின் சிறப்பும் காணப்படுகின்றன. அத ஞல் அவர்கள் தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு வாழ்ந்து வரும் பழங்குடிகளென்று தெரியவரு கின்றது. இப்பொழுது அவர்கள் வன்னிய வகுப்பினரைச் சார்ந்தவர்களாக இங்கே இருக் கின்றார்கள்.

மழநாடு

மழவர்கள் இருந்து வாழ்ந்த காரணம் பற்றி இப்பக்கத்திலுள்ள பிரதேசம் மழநாடு என்னும் பெயர் பெற்றது. அப்பெயர் மழவர் நாடு என்பதன் திரிபே ஆகும். "பெருஞ் சரண்மா மறையோரும்" என்று காளமேகத் தாற் சிறப்பிக்கப்பெற்ற அந்தண வகுப்பி னருள் ஒரு வகையாரிற் பலர் இந்நாட்டிலிருந்த லால் 'மழநாட்டுப் பிரக சரணத்தார்' என வழங்கப் பெறுவர். பாடல் பெற்ற சிவஸ்தல மாகிய திருமழபாடி என்பதன் பெயர் மழவர் பாடி என்பதன் சிதைவென்பர்; மழவர்கள் பாசறை அமைத்திருந்த இடமாதலின் அஃது அப்பெயர் பெற்றது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் புராணத்தில் கூறப்படும் கொல்லி மழவனென்பவன் இம்மழநாட்டின் ஒரு பகு தியை ஆண்டவனுவன்.

இம் மழநாடு மேல்மழநாடு கீழ்மழநாடு என இரண்டாகப் பிரிக்கப் பட்டிருந்தது. "மேல்மழ நாடெனும் நீர்நாடு" என்று பெரிய புராணத்திலே ஆனாயநாயனார் புராணத்தில் மேல்மழநாடு சொல்லப் படுகிறது. அரியிலூர் சம்ஸ்தானம் கீழ்மழநாட்டைச் சார்ந்தது.

குன்றவளநாட்டுக்கு உரியவர்களும் ஒப்பிலாதவளென்னும் தெய்வத்தை வழிபடுபவர்களும் மழவர்களுக்குத் தலைவர்களுமாயினமையின் இவ்வரியிலூர் ஜமீன்தார்கள் 'குன்றை ஒப்பிலாத மழவராயர்' என்னும் குடிப்பெயரைப் பெற்றார்கள்.

## 5 தரவு

அவர்களிற் பலர் சிவவிஷ்ணு ஆலயங்களை வேற்றுமை யின்றிப் பாதுகாத்து வந்தனர். பலவகை மதத்தினரும் அவர்களுடைய ஆட்சியின்கீழ்க் குறைபாடின்றி வாழ்ந்திருந்தனர். ஸம்ஸ்கிருதம், தெலுங்கு, தமிழ், சங்கீதம் என்பவற்றிற் சிறந்த வித்துவான்கள் பலர் ஆதரிக்கப் பெற்றார்கள்; பல ஜமீன்தார்கள் தாங்களே தமிழ் முதலியவற்றில் வல்லவர்களாக இருந்தார்கள். பல வித்துவான்கள் அவர்களுடைய பெருவண்மையையும் புலவர்களை அவர்கள் போற்றும் இயல்பையும் அறிந்து வந்து பாராட்டிப் பரிசுபெற்றுச் செல்வதுண்டு.

## கிருஷ்ணைய ஒப்பிலாத மழவராயர்

சில நூற்றாண்டுகளுக்கு முன்பு அரியிலூரில்

கிருஷ்ணைய ஒப்பிலாத மழவராயரென்று ஒரு ஜமீன்தார் இருந்தார். அவர் வித்து வான்களை ஆதரித்துப் போற்றுவதில் தமிழ் நாடு முழுதும் பெயர் பெற்றிருந்தார். சங்கீதத் தில் சிறந்த பயிற்சி அவருக்கு உண்டு. பல் சங்கீத வித்துவான்களை வருவித்து வைத் துக்கொண்டு அவரவர்களுடைய ஆற்றலை அறிந்து ஏற்றவாறு பரிசு அளிப்பவர். தமக் குச் சங்கீதம் தெரியும் என்ற தருக்கினால் வித்து வான்களை இகழ்ச்சி செய்யும் தன்மை அவர் பால் மருந்துக்கும் இல்லை. அவருடைய புக ழைப் பாடுவதில் புலவர்களுக்கு ஓர் ஊக்கம் இருந்தது.

அந்தகக்கவி வீரராகவ முதலியார்

இந்நாட்டிலுள்ள பல ஜமீன்தார்களிடத் தும் யாழ்ப்பாணத்தை ஆண்டுவந்த பரராச சேகரனென்ற அரசனிடத்தும் சென்று தமது கவி ஆற்றலைக் காட்டி மட்டற்ற புகழைப் படைத்த அந்தக்கவி வீரராகவ முதலியா ரென்னும் புலவர்சிகாமணி ஒரு சமயம் அரியி லூருக்குவந்தார். நாடெலாம் கவிகளாலும் புக ழாலும் அடிப்படுத்திய கவிஞரை மழவராயர் உபசரித்துப் போற்றுவதற்குத் தடையென்ன ? அக் கவிஞருடைய கவி வெள்ளத்தில் மூழ்கிப் பேரானந்தம் அடைந்த மழவராயர் கணக்கற்ற பரிசில்களை அவருக்கு வழங்கினர் ; தக்க விடுதி யொன்றில் இருக்கச்செய்து வேண்டிய சௌ

கரியங்களை யெல்லாம் அமைத்துக் கொடுத்து ராஜோபசாரம் செய்வித்தார்.

அவர் தம்பால் வந்த வித்துவான்கள் பலருக்குக் குறிப்பிட்ட ஒருவேளையில் அன்றன்று படியளந்து வருவார். தம்மைக் காணவந்தவர்களை அலைக்கழியாமல் உடனுடன் வேண்டியவற்றை விசாரித்து அவர்கள் குறையை நீக்கி அனுப்புவார். அவர் படியளக்கும் சிறப்பை அறிந்த அந்தகக்கவி வீரராகவ முதலியார் அச்செயலைப் பாராட்டி,

[கட்டளைக் கலித்துறை]

*"சேயசெங் குன்றை வருமோப்பி லாதிக்குச் செங்கமலத்
தாயசெங் கண்ண னிணையோப்ப னோதண் டுழாயணிந்த
மாய னளக்கும் படிமூன்று க்ருஷ்ணைய மாமழவ
ராய னளக்கும் படியொரு நாளைக் கிலக்கமுண்டே"

என்ற பாடலைப் பாடினர்.

## குமார ஒப்பிலாத மழவராயர்

கிருஷ்ணைய ஒப்பிலாத மழவராயருக்கு ஒரு குமாரர் இருந்தார். அவர் பெயர் குமார ஒப்பிலாத மழவராயர் என்று வழங்கி வந்தது. அவரும் சங்கீதத்தில் மிக்க பயிற்சியை உடையவராக இருந்தனர். தம் தந்தையாருடைய

*இதன் பொருள்:—செம்மையாகிய குன்றை நகரில் உள்ள ஒப்பிலாத மழவராயருக்குச் செந்தாமரைக் கண்ணையுடைய திருமால் ஒப்பாவாரோ! திருத்துழாயை அணிந்த அந்த மாயன் அளக்கும் படி (உலகம்) மூன்றே; இந்தக் கிருஷ்ணைய மழவராயர் அளக்கும் படியோ ஒரு நாளைக்கு லக்ஷம் உண்டு. படி-உலகம், தான்யப்படி.

சபைக்கு வரும் சங்கீத வித்துவான்களுடைய இசையைக் காதாரக் கேட்டுக் கேட்டு அனுப வித்ததனாலேயே தமக்குச் சங்கீத ஞானம் உண்டாயிற்றென்பது அவர் நம்பிக்கை. ஆத லின் வித்துவான்களிடத்தில் அவருக்கிருந்த பக்தி அளவற்றதாக இருந்தது.

ஒரு நாள் மாலை நேரம்; வெண்ணிலவு பால்போலக் காய்ந்தது; தென்றல் வீசியது; இளவேனிற் காலம். மாலை மதியமும் வீசு தென்றலும் வீங்கிளவேனிலும் கலந்த அந்தக் குளிர்ந்த பொழுதில் குமார மழவராயர் "ஈசன் எந்தை இணையடி நீழலை" நினைந்து ஆனந்த மாகப் பாடிக்கொண்டு இருந்தார்.

அந்தகக்கவி வீரராகவர் குமார மழவ ராயரை அச்சமயத்திற் பார்க்க வந்தார்; அடையா நெடுங்கதவையுடைய அரண்மனையில் தடையின்றிப் புகுந்தார். குமார மழவராயர் மேல்மாடத்தில் பாடிக்கொண்டு மகிழ்ந்திருத் தலை யறிந்தார். "ஒருவரும் என்வரவை அறி விக்க வேண்டாம்" என்று சொல்லிவிட்டு மெல்ல மேலே சென்று மறைவிலிருந்து அவ ருடைய கானத்தைக் கேட்டு அனுபவித்துக் கொண்டிருந்தார்.

இசைப்பாட்டு நின்றது. கவிஞர் பெரு மான் அம் மழவராயரிடம் வந்தார். வருகையி லேயே அவர் உள்ளத்தெழுந்த பேரானந்தம் பின்வரும் பாடலாக வெளிப்பட்டது;

கட்டளைக் கலித்துறை]

*"வாமொழோப்பி லாதவன் சேயொப்பி லாத மழவந்திரை
ஆழிக் கடல்விட்டு நீபாடுங் காலத் தரிசெலுங்கால்
நீழற் கவுத்துவ நீத்துச்சேல் வானந்த நீண்மணிதான்
காமொழப் பினுநின் னிசைகேட்குங் காற்கரைந் தேகு
[மென்றே."

"என்ன! நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்? முன்னமே தெரிவிக்கக் கூடாதா?" என்றார் குமார மழவராயர்.

கவிஞர்:—உங்களுடைய இசையமுதத்தைப் பருகுவதற்குச் சமயம் நேர்ந்த பொழுது அதனைக் கைவிடக் கூடாதென்று எண்ணி மறைந்திருந்தேன். குற்றமாயிற் பொறுக்கவேண்டும்.

குமார:—குற்றமா! தங்களை ஆதனங் கொடுத்து இருத்தி மரியாதை செய்யாமல் இருந்த பிழையைத் தாங்களல்லவா பொறுக்க வேண்டும்?

கவிஞர், "இந்தச் செய்யுளைக் கேட்டருள வேண்டும்" என்று 'வாமொழாப்பிலாத' என்ற செய்யுளைச் சொன்னார்.

சங்கீதத்தினால் கல் உருகுமென்பது

*இதன் பொருள்:—கிருஷ்ணைய ஒப்பிலாத மழவராயருடைய குமாரனாகிய ஒப்பிலாத மழவராய, நீ பாடுங் காலத்தில் தம்முடைய பாற்கடலை விட்டுவிட்டுத் திருமால் வரும்போது தம்முடைய மார்பிலுள்ள நீண்ட கௌஸ்துப மணியானது உன்னுடைய சங்கீதத்தைக் கேட்டால் வயிரமுடையதாக இருந்தாலும் கரைந்து விடுமென்று கருதி, அதனை எடுத்து வைத்துவிட்டு வருவார்.

மிகவும் அரிய செய்தி. அகத்தியருக்கும் இரா வணனுக்கும் ஒரு முறை விவாதம் நேர்ந்த பொழுது அகத்தியர் வீணையிசையால் பொதியின் மலையைக் குழையச் செய்தனர்; இராவணன் அங்ஙனம் செய்ய இயலாமையின் தோல்வி யுற்று இலங்கைக்குப் போய்விட்டான். இச் செய்தி, 'இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து' என்ற தொல்காப்பியப்பாயிர உரையில் வரும் தொடராலும், தஞ்சை வாணன் கோவையாலும், பிறவற்றாலும் அறி யப்படுகிறது. கல் இசைக்கு உருகும் என் புதை நினைந்து 'கௌஸ்துபமணி உன்னுடைய இசைக்கு உருகிவிடும்' என்று திருமால் எண் ணினரெனக் கற்பித்த பகுதி கவிஞருடைய அரிய நூலுணர்வைக் காட்டுகிறது.

பாட்டைக் கேட்ட மழவராயர் அளவற்ற மகிழ்ச்சி கொண்டார்; "அந்தப்பாட்டு எல்லா விதத்திலும் சிறப்புடையது. ஆயினும் என்னைப் பற்றி இருப்பதுதான் ஒரு குறை" என்று தம்முடைய பணிவைப் புலப்படுத்தினர்; பரிசில் பல வழங்கினர்.

பக்கிரிக்கு யானை கொடுத்தவர்

வடநாட்டில் நவாப் ஒருவர் ஆண்டுவந் தார். துறவு பூண்ட பக்கிரி ஒருவர் அவரிடம் இருந்தார். அவருக்கு நவாப் யானையொன்று கொடுத்திருந்தனர். அதன்மேல் அவர் சில சமயம் ஏறி வருவதுண்டு. ஒரு சமயம் அந்தப்

பக்கிரியை நவாப் அவமதித்து யானையையும் கைப்பற்றிக் கொண்டார். அது பொருமற் பக்கிரி, "நான் உன்னை விட்டு நீங்கி விடுகி றேன்" என்றார்.

நவாப்:—இந்த இடத்தை விட்டால் உமக் குப் போக்கேது? உம்மை யார் மதிப்பார்கள்? என்னுடைய தயையினலல்லவோ நீர் இங்கே இருந்து வந்தீர்?

பக்கிரி:—உம்மை எண்ணித்தாே ஆண்ட வர் என்னைப் படைத்தார்? உலக முழுவதும் எனக்கு உதவி செய்யும். நம்முடைய பாஷையே தெரியாத இடங்களிற்கூட நான் போய் யானைப்பரிசும் நன்மதிப்பும் பெறு வேன். அல்லாவின் அருள் இருக்கும் பொழுது எனக்கு என்ன குறை?

நவாப்:—இந்தப் பயமுறுத்த லெல்லாம் இங்கே வேண்டாம். காரியத்தில் உம்முடைய அல்லாவின் அருளைக் காட்டும். போம்.

பக்கிரி:—"பேதையே, பார்; தென்னட்டுக் குப் போய் யானையை வாங்கிவந்து இன்னும் சில நாட்களுள் உனக்குக் காட்டுகிறேன்" என்று சபதஞ்சொல்லிப் புறப்பட்டார். 'துற விக்கு வேந்தன் துரும்பு' அல்லவா?

பக்கிரி பல பாஷைகளிற் பயிற்சி பெற் றவர். அவர் பல அரசர்களிடமும் பல ஜமீன் தார்களிடமும் சென்று தமக்கு யானை

வேண்டுமென்று கேட்டார். "யாரும் இவருக்கு யானை கொடுக்கக்கூடாது" என்று நவாப் உத்தரவு அனுப்பி யிருந்தமையால் அவர்களெல்லாம் அஞ்சிப் பக்கிரியிடம் தாம் கொடுக்க முடியாத காரணத்தைக் கூறி வருந்தி மறுத்து விட்டார்கள்.

நாடெல்லாம் சுற்றிவந்த பக்கிரி இந்த அரியிலூர் வந்து சேர்ந்தார். அப்பொழுது இங்கே இருந்த ஜமீன்தாரிடம் சென்று தமக்கு யானை ஒன்று வேண்டுமென்று கேட்டார்; நவாபினுடைய கடுமையான செயல்களையும் எடுத்துக் கூறினார். எந்த மதத்தினராயினும் ஞானமுடையவர்களாக இருப்பவர்களை மதிக்க வேண்டுமென்ற கொள்கையையுடைய ஜமீன்தார் பக்கிரிக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்தார்; யானை யொன்றையும் வழங்கினார்; அதனைக் காப்பாற்றுவதற்கும் பிறசெலவுகளுக்குமாகத் தக்க பொருளை உதவி ஒரு பாகனையும் அனுப்பினார். பக்கிரி, "அல்லா உங்களுக்கு வெற்றியையும் புகழையும் உண்டாக்குவார்" என்று மனமார ஜமீன்தாரை வாழ்த்தி விட்டு யானையுடனும் பரிசில்களுடனும் நவாபின் முன்போய் நின்றார்.

நவாபுக்கு ஒரு பக்கம் வியப்பும் மற்றொரு பக்கம் சினமும் உண்டாயின. "நம்முடைய உத்தரவை மீறி எந்த மனுஷன் யானை கொடுத்தான்?" என்று கர்ஜித்தார்; "பார்க்கிறேன்

அவனுடைய ஆண்மையை" என்று மீசையை முறுக்கினர்; படையாளரை அழைத்து அரியிலூரின்மேற் படையெடுக்கக் கட்டளை யிட்டார்.

நவாபின் படைகள் அரியிலூருக்குப் புறத்தே வந்து தங்கின. பக்கிரிக்கு யானை கொடுத்த குற்றத்திற்காக நவாப் யுத்தம் செய்யப் படையை அனுப்பியுள்ளா ரென்பது ஜமீன்தாருக்குத் தெரிந்தது. "அல்லா வெற்றியும் புகழும்தருவார்" என்று பக்கிரிவாழ்த்தியது அவருடைய ஞாபகத்துக்கு வந்து ஊக்கத்தை உண்டாக்கியது. தாம் செய்தது ஒரு நல்ல காரியமென்றும், நல்ல காரியத்திற்கு இடையூறு வாராமற் கடவுள் காப்பாரென்றும் அவர் எண்ணி, அரியிலூரிலுள்ள தம் வழிபடு கடவுளாகிய ஸ்ரீகோதண்டராமஸ்வாமி கோயிலுக்கு வந்து அவரை வணங்கினர். அவருடைய உண்மை யன்பை மெச்சிய பெருமாள் ஒருவர் மீது ஆவேச ரூபமாக வந்து, "நீ படைகளோடு சென்று யுத்தம் செய். வெற்றி உண்டாகும்" என்று கட்டளை யிட்டார். ஜமீன்தார் கடவுளின் கருணைத்திறத்தை எண்ணி உருகி மகிழ்ந்து போர் புரியச் சென்றனர். போரில் நவாபின் படை தோல்வியடைந்து ஓடிற்று. அப்பொழுதுதான் தம் படை பெரிதானாலும் அல்லாவின் அருள் எல்லாவற்றிலும் பெரிதென்னும் எண்ணம் நவாபுக்கு வந்தது. பக்கிரியின்

பாதங்களில் விழுந்து தாம் செய்த குற்றத்தைப் பொறுக்கும்படி வேண்டினர்.

பக்கிரிக்கு யானை வழங்கி அதனால் நிகழ்ந்த போரிலும் வெற்றியுற்றதனால் 'பக்கிரிக்கு யானை கொடுத்தவர்' என்னும் பட்டம் ஜமீன் தாருக்கு உண்டாயிற்று. அது முதல் அவர் சந்ததியாருடைய பட்டங்களில் ஒன்றாக அது வழங்கி வருகிறது. அந்தப் பட்டப்பெயர் பல செய்யுட்களிலும் கீர்த்தனங்களிலும் காணப் படும்.

## பனைமரம் பிடுங்கிய வீரன்

இந்தச் சம்ஸ்தானத்து ஜமீன்தார்கள் பலவகையிற் புகழ் பெற்று வருதலை அறிந்த பிற நாட்டிலுள்ள அரசர்களும் சிற்றரசர் களும் இவர்கள்பாற் பொறாமை கொண் டார்கள். ஒரு முறை ஆந்திர தேசத்து ஜமீன் தாரொருவருடைய அதிகாரியாகிய ஜயப்ப நாயக்கரென்பவர் இந்த ஜமீன்தார்மீது படை யெடுத்து வந்தனர். பெரிய படையுடன் வந்து இவ்வூருக்குத் தெற்கே பாசறை அமைத்துத் தங்கினர். உடன் வந்த வேலையாட்களைக் கொண்டு அவ்விடத்தில் ஒரு குளம் வெட்டுவித் தார். அதுவே ஜயப்ப நாயக்கன் குளம் என்று இக்காலத்து வழங்கப்படுகின்றது. தம்முடைய ஆற்றலையும்படையின்மிகுதியையும் காட்டுவதற் கும், தம்பெயர் என்றும் வழங்குவதற்கும் பகை

யரசருடைய நாடுகளில் இங்ஙனம் செய்வது பண்டை அரசர் வழக்கம்.

மறுநாள் ஜமீன்தார் தம்முடைய படை வீரர்களைப் போர்புரிய அனுப்பினர். கடும்போர் மூண்டது. இரண்டு பக்கங்களிலும் படைவீரர்கள் மிகுதியாக இருந்தனர். யுத்தம் நடந்து வருகையில் மழவராயர் படையில் இருந்த ஒரு குதிரை வீரனுக்கு மிக்க தாகம் உண்டாயிற்று. அருகில் எங்கும் நீர்நிலை இல்லை. ஆகவே, அவன் நீரைத் தேடித் தாகம் தீர்த்துக்கொள்ள எண்ணித் தன் குதிரையைத் திருப்பி ஒரு பக்கமாக ஓட்டினன். அக்குதிரை என்ன காரணத்தாலோ அதிக மருட்சியை யடைந்து வேகமாக ஓடத்தொடங்கிற்று; மழவீரனுடைய கைக்கு அடங்காமல் வாயுவேகமாகப் பறந்தது. அந்த வேகத்தால் தாகம் அதிகமாகிய வீரன் அதனை நிறுத்த எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. அவனுடைய நா உலர்ந்து விட்டது; இளைப்பு அதிகரித்தது. குதிரையோ இன்னதிசையில் தான் செல்வதென்பதின்றிக் கண்ட இடங்களிலெல்லாம் ஓடிற்று. இந்த நிலையில், ஏதாவதொரு மரத்தினருகே வந்தால் அந்த மரத்தைப் பிடித்துக் கொண்டாவது குதிரையை நிறுத்தலாமென எண்ணினன் வீரன். வழியில் ஒருசிறியபனைமரம்நின்றது. அதனருகில்குதிரை வந்ததும் அதனை வேகமாகத் தழுவிக்கொண்டான். அது வேரற்றுக் காய்ந்து அடி நைந்து

போயிருந்ததாதலின் அவன் கையோடு வந்து விட்டது. குதிரையின் ஓட்டம் நின்றபாடில்லை.

இளைப்பு மிகுதியால் வீரன், "ஐயோ அப்பா! ஐயோ அப்பா!" என்று கூவிக் கொண்டே வந்தான்; தன் கையில் இருந்த பனைமரத்தை விடவுமில்லை.

குதிரை மீண்டும் யுத்தகளத்தை நோக்கி வந்தது. ஐயப்ப நாயக்கருடைய படையினர் அந்த மழவ வீரன் வருவதைக் கவனித்தனர். தலைதெறிக்கும் வேகத்தோடு வரும் குதிரையின் மேல் ஏறிக்கொண்டு கையில் ஒரு பனைமரத் தோடு வரும் அவனைக்கண்டு அவர்கள் மருண் டனர். அம்மழவர் களைப்பினால் சொல்லிய சொற்கள் அவர்கள் காதில் 'ஐயப்பா, ஐயப்பா' என்று விழுந்தன. தம்முடைய தலைவனைத் தாக்குவதற்கு அவன் வருவதாக அவர்கள் எண்ணினர். "அப்பா! மரத்தைப் பிடுங்கும் வீரனாகவல்லவா இவன் இருக்கிறான்! இவன் ஒருவனே இப்படி இருந்தால் மற்றவர்கள் எப்படி இருப்பார்களோ! இவனுக்குப் பின்னே இன்னும் எத்தனை வீரர்கள் என்ன என்ன ஆயுதங்களுடன் வருவார்களோ! மரத் தைப் பிடுங்கிப் போர் புரிவதைப் புராணங் களிற் கேட்டிருக்கிறோம்; பார்த்ததில்லை. இனிமேல் நம்முடைய ஆற்றல் பயன்படாது" என்று எண்ணிச் சிலர் பயந்து ஓட ஆரம்பித் தனர்; அவர்களைக் கண்டு ஐயப்ப நாயக்கரும்

எஞ்சிய படைகளும் அச்சம் கொண்டு ஓடிப் போயினர். பின்பு குதிரை காலோய்ந்து நின்றது.

இந்தக் குதிரையின் செயலை நினைக்கும் பொழுது, "உருவக் குதிரை மழவர்" என்ற அகநானூற்றுச் செய்யுளின் அடி ஞாபகத்திற்கு வருகின்றது.

## வித்துவான்கள்

அரியிலூர் ஸம்ஸ்தானத்தில் வடமொழி, தென்மொழி, தெலுங்கு என்னும் மூன்றிலும் வல்ல பல வித்துவான்களும் சங்கீத வித்துவான்களும் பரத சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றவர்களும் ஜமீன்தார்களுடைய ஆதரவு பெற்று வாழ்ந்து வந்தார்கள். புலவர்களுடைய பெருமையை அறிந்து அவர்கள் மனத்தில் திருப்தியை உண்டாக்குதலையே பெரும்பயனாக எண்ணி ஜமீன்தார்கள் வேண்டிய உதவியை அளித்து வந்தனர். பல ஜாதியினராகிய வித்துவான்கள் தங்கள் தங்களுக்கு உதவிய ஜமீன்தார்களைப் பாராட்டிப் பாடிய பாடல்களும் பிரபந்தங்களும் பல; வேறுவகை நூல்களும் சில உண்டு.

தமிழ், வடமொழி, சங்கீதம் முதலியன நம்முடைய நாட்டில் ஒழுங்காக வளர்ச்சியுற்று வந்ததற்கு முக்கிய காரணம் அரசர்களும் மடாதிபதிகளும் ஜமீன்தார்களும் பிரபுக்களும்

வித்துவான்களை ஆதரித்துப் பாதுகாத்து வந்த மையே. செல்வம் பெற்றதனற்பயன் புலவர் பாடும் புகழுடையவராதலென்பதே அவர்களுடைய கொள்கையாக இருந்தது. கோப்பெருஞ்சோழனோடு உயிர் நீத்த பிசிராந்தையாரைப்போலவே பிற்காலத்தும் சீனக்கனென்னும் பிரபுவோடு ஈமம் புக்க பொய்யாமொழிப் புலவரும் இருந்தனர். அரசியல் விஷயங்களிலும் உயர்ந்த தலைமையை அளித்துக் கபிலரை வழிபட்டு வந்த பாரியைப்போல ஒட்டக்கூத்தரை வழிபட்ட குலோத்துங்கனும் இருந்தான். இங்ஙனம் வழிவழிவந்த புலமையும் வண்மையும் தமிழ்நாட்டில் அறிவென்னும் விளக்கை அவியாமல் இருக்கச் செய்தன. சம்ஸ்தானங்கள் முதலியவை கலைகளை வளர்த்தற்குரிய இடங்களாக இருந்தன.

அரியிலூர் ஜமீனில் சண்பகமன்னார் என்னும் குடிப்பெயரையுடைய ஒரு பரம்பரையினர் ஆஸ்தான வித்துவான்களாக இருந்து வந்தனர். அவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களில் தென்கலையார். சண்பகாரணியம் எனப்படும் இராஜமன்னார் கோயிலிலிருந்து அவர்கள் வந்தவர்களாதலின் அவர்களுக்கு அந்தக் குடிப்பெயர் அமைந்தது; மன்னாரென்பது அந்த ஸ்தலத்திலுள்ள பெருமாளின் திருநாமம். இளமையிலேயே செய்யுள் செய்யும் ஆற்றல் அந்தப் பரம்பரையினருக்கு இருந்து வந்த

மையின், அவர்களுக்குப் பாலஸரஸ்வதி, பால கவி என்னும் பட்டங்கள் அளிக்கப்பட்டு வழங்கி வந்தன. அவர்களிற் பலர் அத்வைதத்தில் மிக்க தேர்ச்சி பெற்றவர்கள்; சமரச நோக்கமுடைய வர்கள். அவர்களுள் ஒருவர் பழூரில் தேவி தவஞ்செய்து இறைவனை மணம்செய்து கொண் டதை நாடகமாகப் பாடியிருக்கின்றனர். அது 'திருக்கல்யாண நாடகம்' என வழங்கப்படும்; வேறொருவர் 'சிவராத்திரி நாடகம்' என ஒருநூல் மிகச்செவ்விதாக இயற்றி யிருக்கிறார்; அது பிரமோத்தர காண்டத்திலுள்ள கதையை அமைத்துப் பாடப்பெற்றது.

சண்பக மன்னர்

சண்பக மன்னரென்னும் பொதுப்பெய ரையே சிறப்புப்பெயராகப்பெற்ற ஒரு பெரி யார் அக்குடும்பத்திற் பிரசித்திபெற்று விளங் கினர். அவருடைய இயற்பெயர் ஸ்ரீநிவா சையங்கா ரென்பது. சண்பகமன்ன ரென்று வழங்கப்படுவாரே யன்றி அவருடைய இயற் பெயர் இன்னதென்றறிந்தவர் சிலரே.

அவர் தமிழ், வடமொழி, தெலுங்கு மூன்று மொழிகளிலும் வல்லவர். சங்கீதத்திலும் பயிற்சி மிக்கவர். அத்வைத சாஸ்திரத்தில் நல்ல ஆராய்ச்சியும், தெளிந்த ஞானமும், அவற் றிற்கு ஏற்ற அனுபவமும் உடையவர். இல் லறத்தில் இருந்தனரேனும் மனத்துறவை யுடையவராகித் தாமரையிலைத் தண்ணீர்போல்

இருந்து தமது கடமைகளைச் செய்துவந்தார்.

"எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தை பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே"

என்பது உண்மையன்றோ? அவர் அரியிலூரில் பெருமாள்கோயிலின் புறத்தேயுள்ள தெற்கு வடக்குத் தெருவில் மேல்சிறகின் வடகோடியிலிருந்த மடத்தில் இருந்து பாடஞ்சொல்லிக் கொண்டு சாந்தநிலையில் வாழ்ந்து வந்தார்.

அவரிடத்தில் வேதாந்த சாஸ்திர பாடங் கேட்டவர் பலர். அவருடைய சிஷ்யர்களாகிய துறவிகள் பலர் பக்கத்தே உள்ள சிறு கிராமங்களில் மடங்கள் கட்டிக்கொண்டு அமைதியாக வாழ்ந்துவந்ததன்றி அங்கங்கே உள்ளவர்களுக்கு வேதாந்த சாஸ்திரங்களைப் பாடஞ் சொல்லிக்கொண்டும் வந்தனர். அத்வைத சாஸ்திர உணர்வு அரியிலூரிலும் அயலிடங்களிலும் சண்பகமன்னரால் பரவியது. அவரிடம் பாடங் கேட்டவர்களுள் பலர் ஆலயத்திருப்பணிகள், தடாகப் பிரதிஷ்டைகள், அன்ன சத்திரம் முதலிய தருமங்கள் செய்தனர். அவர்களுள் ஆறுமுகப் பரதேசி என்னும் ஒருவர் ஐயம்பேட்டைக்கு அருகிலுள்ள பசுபதி கோயிலில் இருந்துவந்தனர். அவர் தம்முடைய கல்வி வன்மையாலும் சிறந்த ஒழுக்கத்தினாலும் எல்லாராலும் மதிக்கப்பட்டுப் பலதர்மங்களைச் செய்தனர்; அக்காலத்தில் தஞ்சையிலிருந்த கலெக்டருடைய நட்பைப் பெற்றுப் பசுபதி

கோயிலில் ஒருதடாகம் வெட்டி மடம் ஒன்றை யும் கட்டுவித்தார்.

தஞ்சை ஸம்ஸ்தானத்தி லிருந்த பெரிய உத்தியோகஸ்தர் ஒருவர் அவரைத் தம்மிடம் வருவித்து ஞானவாசிட்டமென்னும் நூலைப் பாடஞ் சொல்லும்படி கேட்டுக்கொண்டார். அங்ஙனம் சண்பகமன்னர் பாடஞ் சொல்லிவரு கையில் உத்தியோகஸ்தர் சிலசமயங்களிற் பரா முகமாக இருந்து வந்தார். தொடர்ந்து சில நாழிகை பொறுமையாக இருந்து கேட்ப தில்லை. இடையிடையே அந்தப்புரத்துக்குச் செல்வதும் பின்பு வந்து கேட்பதுமாக இருந் தார். இங்ஙனம் அவ்வுத்தியோகஸ்தருடைய மனம் அவ்வேதாந்த சாஸ்திரத்தில் பதியா மைக்குக் காரணம் என்னவென்று சண்பக மன்னர் ஆராய்ந்தார். ஒரு தாசியிடம் அவ் வுத்தியோகஸ்தர் பழகிவருவதே அவருடைய மன வேறுபாட்டுக்குக் காரண மென்றறிந் தார்; இனி அங்கே இருப்பது தகாதென்ற உறுதி பூண்டார். ஒரு நாள் இரண்டுவெண் பாக்களை இயற்றி ஒருவரிடம் கொடுத்து உத்தி யோகஸ்தரிடம் அளிக்கும்படி சொல்லிவிட்டு ஊர்வந்து சேர்ந்தார். அவ்விரண்டு பாட்டுக் களுள் ஒன்று வருமாறு:—

பொருள்போம் புகழ்போம் புலத்தன்மை சேரும்
அருள்போம் அழகுபோம் அல்லால்—தெருள்போகும்
கல்லாத நெஞ்சக் கயவர்பாற் சேர்ப்பிக்கும்
பொல்லாத மாதர் புணர்ப்பு.

சண்பகமன்னர் தெய்வங்கள் மீதும் தம்மை ஆதரித்துவந்த ஜமீன்தார்மீதும் பல செய்யுட்களையும் தனிக் கீர்த்தனங்களையும் வடமொழியிலும் தமிழிலும் பாடியிருக்கின்றனர். ஜமீன்தார் நவராத்திரி விழாவைக் கொண்டாடுவதைச் சிறப்பித்து 'நவராத்திரி நாடகம்' என்ற ஒரு நூலும் இயற்றியுள்ளார். திருக்குடந்தை ஸ்ரீ சார்ங்கபாணிப் பெருமாள்மீது ஒரு நொண்டி நாடகம் இயற்றினர். அவருடைய புலமையும் ஞானமும் இன்றளவும் அந்தப் பக்கத்தில் உள்ளவர்களாற் கொண்டாடப்பட்டு வருகின்றன. அவர் காலத்திற்குப்பின் அவருடைய சிஷ்யர்களால் அவருக்குக் குருபூஜை மிகவும் சிறப்பாகச் செய்யப்பெற்று வந்தது. அவருடைய பேரராகிய சடகோபையங்கார் காலம் வரையில் அக்குருபூஜை நடந்து வந்தது.

## ஐயாவையங்கார்

சண்பகமன்னருக்கு இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். அவர்களுள் மூத்தவர் ஐயாவையங்காரென்பவர். அவர் தம் தந்தையாரைப்போலவே திறமையும் பெருமையும் உடையவராக இருந்தார்; அவரினும் அதிகமான உள்ளத்துறவை யுடையவர். அவர் இயற்றிய பாடல்களும் கீர்த்தனங்களும் பல உண்டு. அரண்மனை வித்துவானக அவர் இருந்துவருகையில் துறவுணர்ச்சி மிக்க அவரது மனம் அவ்வாழ்க்கையில் அதிருப்தியுற்றது. இடைவிடா

மல் இறைவனுக்குத் திருப்பணி செய்தலை மேற்கொண்டு மனமொழி மெய்களால் அவனை வழிபட்டு வாழ்நாள் முழுவதையும் கழிக்க வேண்டு மென்னும் பேராவல் அவர்பால் வளர்ந்தது. தம் குடும்பத்தைப் பரம்பரையாக ஆதரித்துவந்த ஜமீன்தாரிடத்தில் வேதனம் பெற்றால் 'செஞ்சோற்றுக்கடன்' கழிப்பதற்காக அவரது சமயமறிந்து சென்று உவப்பித்தலும் விசேஷ காலங்களில் யாரேனும் வந்தால் சென்று பிரசங்கம்செய்து கௌரவித்தலும் ஆகிய பலகடமைகளைச் செய்து வரவேண்டு மென்று எண்ணினர். அவற்றைச் செய்து வந்தமையால் அப்பியாசங்களுக்கு இடையூறு நேர்ந்தது. ஆதலின் சம்ஸ்தானத்தொடர்பை விட்டுவிட்டுச் சாந்தமாக இருத்தலையே அவர் மனம் நாடிநின்றது.

சரியான காலங்களில் அவர் அரண்மனைக்கு வருவதில் ஊக்கங் காட்டாமலிருந்த காரணம்பற்றி அவர் காலத்திலிருந்த ஜமீன்தார் ஒருமுறை அவரிடம் அவமதிப்பாக நடந்து கொண்டார். அச்செயல் இடையூறாக இருப்பினும் தம் கருத்து நிறைவேறுதற்கு அனுகூலமானதென்று அவர் கருதினர். அவருடைய பற்றற்ற தன்மையும் உலக விஷயங்களில் உள்ள வெறுப்பும் இறைவன்பாலுள்ள திண்ணிதாகிய அன்பும் வெளிப்படுதற்கு அந்த ஜமீன்தாருடைய செயல் காரணமாயிற்று.

ஜமீன்தார் தம்பால் அவமதிப்பாக நடந்ததை உணர்ந்த ஐயாவையங்கார் நேரே பெருமாள் கோயிலுக்கு வந்தார்; தசாவதார மண்டபத்திற்குச் சென்று ஸ்ரீ நரசிங்க மூர்த்தியின்முன் நின்ருர்; அதுகாறும் தம்முடைய வாழ்வு வீணுயிற்றென்று நைந்தார்; கண்ணீர் வார மயிர்க் கூச்செறிய உள்ளம் உருகி,

(கட்டளைக் கலிப்பா)

"வஞ்ச மாரு மனத்தரைக் காவென்று
வாழ்த்தி வாழ்த்தி மனதுபுண் ணுகவே
பஞ்ச காலத்திற் பிள்ளைவிற் பார்கள்போல்
ப்ரபந்தம் விற்றுப் பரிசு பெருமலே
நெஞ்சம் வாடி யிளைத்துநொந் தேனையா
நித்த நின்மல நின்னடி தஞ்சங்காண்
செஞ்சொல் நாவலர் போற்றவெந் நாளிலும்
செழித்து வாழரி யில்நர சிங்கமே"

என்றபாடலை வாய்விட்டுக் கதறிச் சொல்லி அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கிஞர்; "இனி நரஸ்துதியும் நரஸேவையும் செய்யேன்; நரசிங்கத்தைப் பணிந்து பாடுவதே என்கடன்" என்னும் வைராக்கியத்தை உடையவராஞர்.

அன்றுமுதல் அவருடைய வாழ்க்கையில் ஒரு மாறுதல் உண்டாயிற்று. நரசிங்க மூர்த்திக்குச் சனிக்கிழமைதோறும் மிக்க சிறப்பாக அபிஷேகமும் பூஜை முதலியனவும் பானகம் நீர்மோருடன் பலவகைச் சித்திரான்னப் பிரசாத வினியோகங்களும் செய்வித்துவந்தார். அவருடைய பெருமை வரவர அதிகரித்தது.

அவ்வூரிலிருந்த கார்காத்த வேளாளர்கள் பலரும் பிறரும் அவருக்கு வேண்டியவற்றை உதவி வந்தனர். பல பிரபுக்கள் அவர் மூலமாகத் தங்கள் செல்வம், திருப்பணி முதலியவற்றிற் பயன்படுவதை ஒரு பெரும்பேறாகக் கருதி உபகரித்தனர். பல திருப்பணிகளை அவர் செய்தார். தசாவதார மண்டபத்துக்கும் கோபுரத்துக்கும் இடையேயுள்ள இடம் திறப்பாக இருந்தது. அங்கே விசாலமான ஒரு மண்டபத்தை அவர் கட்டுவித்தார்; கோபுரத்தைப் புதுப்பித்தார். அவருடைய மனத்துறவின் முதிர்ச்சியையும் பெருமையையும் பற்றி என் தந்தையார் பலமுறை பாராட்டிச் சொல்லியிருப்பதுண்டு.

## சடகோபையங்கார்

ஐயாவையங்காருக்கு ஐந்து குமாரர்கள் உண்டு. அவர்கள் ஐவரும் தமிழ்க்கல்வியிலும் சங்கீதத்திலும் சிறந்த பயிற்சியுள்ளவர்கள். அவர்களுள் சடகோபையங்காரென்பவர் ஐந்தாங்குமாரர்; பல பிரபந்தங்களை ஆராய்ந்து வாசித்துப் பாடஞ்சொல்லும் ஆற்றலுடையவர்; செவ்வைச் சூடுவார் பாகவதத்திலும் ஞானவாசிட்டம் முதலியவற்றிலும் மிக்க பழக்கமுடையவர்; அத்வைத சாஸ்திரத்திற் சிறந்த அறிவுவாய்ந்தவர்; சங்கீதப் பயிற்சியும் அவருக்கு இருந்தது; வீணைவாசிப்பதில் நல்ல தேர்ச்சி உண்டு.

அவர் காலையில் ஐந்துமணிக்கே எழுந்து விடுவார். நித்தியகர்மானுஷ்டானங்களை ஒழுங்காகச் செய்வார். பின்பு புத்தகங்களை எடுத்துக் கொண்டு தம்வீட்டுத் திண்ணைக் கோடியில் அமர்ந்துகொள்வார். எந்த நூலையாவது படித்து இன்புற்றுக்கொண்டே இருப்பார். அந்தவழியே போகின்றவர்கள் அவரைக் கண்டால் வணக்கத்தோடு அந்தத்திண்ணையில் வந்து அவர் சொல்வனவற்றைக் கேட்கும் பொருட்டு இருப்பார்கள். உடனே ஏதாவது தமிழ்ப்பாடல் சொல்வார்; பிரசங்கமும் செய்வார்.

சடகோபையங்காரும் என் தந்தையாரும் இளமைதொடங்கி நட்புடையவர்களாக இருந்தார்கள். என் தந்தையார் பாடுங்காலங்களில் அவர் வீணை வாசிப்பார். இருவரும் சங்கீத சம்பந்தமாக அடிக்கடி அளவளாவிப் பேசிக் கொண்டிருப்பது வழக்கம். அவர் வீட்டிற்கு எதிர்வீட்டில் நாங்கள் குடியிருந்துவந்தோம்.

நாள் தவறுமல் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு, வந்தவர்களுக்கு அவர் சலிப்பில்லாமல் தமிழ்ப்பாடஞ் சொல்லுவார். அப்படி அவர் சொல்லிவரும்போது நானும் சென்று உடனிருந்து கேட்பேன். என் தந்தையாரும் எனக்குத் தமிழ்ப்பாடஞ் சொல்லிக் கொடுக்கவேண்டுமென்று என்னை அவரிடம் ஒப்பித்தார். நான் அவருடைய பேச்சில் ஈடுபட்டு மிகுந்த ஆவலுடன் அவர் சொல்லு

வனவற்றைக் கேட்பேன். அதனால் அவருக்கு என்பால் பிரீதி உண்டாயிற்று.

எந்த விஷயத்தைச் சொன்னாலும் அதைச் சுவையுண்டாகச் சொல்வதில் அவருக்கு இயல்பாக ஒரு திறமை இருந்தது. ஒரு வேளைக்கு இரண்டு மூன்று செய்யுட்களே சொல்வார். ஆனாலும் மனத்தில் தெளிவாகப் படும்படி பல உதாரணங்களைக் காட்டி விரிவாகப் பொருள் சொல்வார். சிறு விஷயமானாலும் அதற்குப் பொருத்தமான செய்திகளைச் சேர்த்துக் கொண்டு அழகுபடுத்திச் சொல்லும்பொழுது என்னுடைய மனம் அதில் ஈடுபட்டுவிடும். ஏழாம் பிராயமுதலே நான் அவரிடம் பாடங் கேட்டுவந்தேன். அவர் சொல்லும் முறையானது எந்தவிஷயத்தையும் எளியதாகவும் சுவையுள்ளதாகவும் தோன்றச் செய்யும். தமிழில் நான் ஈடுபட்டதற்கு அவரே முதற்காரணம்.

அவரிடம் திருவேங்கடத்தந்தாதி, திருவரங்கத்தந்தாதி, திருவேங்கடமாலை முதலியவற்றைக் கேட்டிருக்கிறேன். மிகவும் இளைய பருவத்திற் கேட்டேனாலும் அவரைப்பற்றிய ஞாபகமும் அவர் என் நெஞ்சிற்படும்படி சொன்ன வார்த்தைகளின் திறமும் இன்னும் என் மனத்தைவிட்டு அகலவேயில்லை.

பல தனிப்பாடல்களையும் பல கீர்த்தனங்களையும் சில பிரபந்தங்களையும் அவர் இயற்றியிருக்கின்றனர். ஸ்ரீ வைஷ்ணவராயினும் அத்

வைதக் கொள்கையும் அந்த நெறியிற் பயிற்சி யும் உடையவராதலின் சமரசமான தெய்வ வழிபாடுடையவராக இருந்தனர். அரியிலூர் ஸ்ரீ ஆலந்துறையீசர் விஷயமாக ஒரு பதிகமும் விசுவகுல வகுப்பினர் சிலருடைய வேண்டு கோளின்படி ஸ்ரீ காமாட்சியம்மை விஷயமாக ஒரு பதிகமும் ஸ்ரீ சருக்கரை விநாயகரென்னும் மூர்த்தி விஷயமாக ஒரு பஞ்சரத்தினமும் இயற்றி யிருக்கிறார். அரியிற்சிலேடைவெண்பா, இராமாயண வண்ணம், இராமாயணச் சிந்து, ஜீவப்பிரம்ம ஐக்கியசரித்திரம் முதலிய நூல்கள் அவரால் செய்யப் பெற்றன. இராமாயண வண்ண மென்பது ஒவ்வொரு காண்டத்திற்கும் ஒவ்வொன்றாக நாட்டை முதலிய ஏழு ராகங்க ளால் அமைந்த ஏழு பகுதிகளையுடையது. ஜீவப் பிரம்ம ஐக்கிய சரித்திரம் நாடகரூபத்திற் செய் யப்பெற்றது. அதிலுள்ள பல கீர்த்தனங்களை அவர் அடிக்கடி சொல்லி நயங்களை எடுத்துக் காட்டுவார். திருவாவடுதுறையில் ஆதீன வித்துவா னாக இருந்த கந்தசாமிக் கவிராயரென்பவர் அந்நாடகத்துக்குச் சிறப்புப்பாயிரம் அளித் திருக்கிறார்;

> என்னை யறிய வென்க்கறிவித் தானரியில்
> தன்னை நிகருஞ் சடகோபன் "

என்பது அதன் முதலிரண்டடி.

அக்காலத்தில் அருகேயுள்ள ஓர் ஊரிலிரு ந்த ஆலயத்துக்கு அதிகாரிகளான பஞ்சாயத்

தார் அவ் வாலயத்தின் வருவாயை உரிய பணி களிற் செலவிடாமற் பலவாறாக அழித்து வருவதை யறிந்து அவர்களுடைய அறியாமையையும் அறமல்லாத செயலையும் எடுத்துக் காட்டி, 'பஞ்சாயத்துமாலை' என்னும் பெயரால் அவர் ஒரு நூல் இயற்றினர்.

பொருளை மேன்மேலே ஈட்டவேண்டுமென்னும் நோக்கம் இன்றித் தமிழ்நூற் கடலிலே துளைந்து விளையாடுவதொன்றையே இன்பமுடையதாகக் கருதிய புலவர்களுக்கு வறுமைத்தொடர்பு இருப்பது புதிதன்று. சடகோபையங்கார் பிறரால் நன்குமதிக்கப்பெற்ற அறிஞராயினும் வறிஞராக இருந்தார். ஆனாலும், பெற்றது கொண்டு திருப்தியடையும் இயல்பு அவருடைய வாழ்க்கையை இன்பமாக்கியது. அரியிலூர் ஸம்ஸ்தானம் நாளடைவில் மெலிவுற்றதாதலின் அதன் ஆதரவு அவருக்கும் பிறருக்கும் இலதாயிற்று. குளிருக்குப் போர்த்துக்கொள்ள வேண்டி ஒரு வேளாளப் பிரபுவாகிய மல்லூர்ச் சொக்கலிங்கம் பிள்ளையென்பவருக்கு ஒரு செய்யுளெழுதி யனுப்பினர்; அவர் லிங்கம்பிள்ளை யென்றும் வழங்கப் பெறுவார். அவர் ஒன்றுக்கு இரண்டாக வாங்கி உதவினர். அந்தச் செய்யுளின் ஈற்றடி,

"துப்பட்டி வாங்கித் தரவேண்டும் லிங்க துரைச்சிங்கமே"

என்பது.

மாலைவேளையில் கடைவீதிவழியே சடகோ பையங்கார் செல்வதுண்டு. நானும் உடன்போ வேன். அப்பொழுது ஏதாவது பாடலைச் சொல் லிப் பொருள்சொல்லிக்கொண்டே போவார். ஒவ்வொரு கடைக்காரரும் எழுந்து அவரை அழைத்து மரியாதையாக இருக்கச்செய்து ஒரு தட்டில் நான்கு வெற்றிலையும் இரண்டு பாக்கும் வைத்துக் கொடுப்பார். இப்படிப் பெற்றுக் கொண்ட வெற்றிலைகளையும் பாக்கையும் தொகுத்துவைத்துக் கொள்வார். அவற்றை விற்று அவ்விலையைக் கொண்டு வேறுபண்டம் வாங்குவார்.

அவர் இருக்கும் இடத்தில் சிலர் உடன் இருந்துகொண்டே இருப்பார்கள். அவர் ஏதா வது பாடலைச் சொல்லிப் பொருள் கூறிக் கொண்டிருப்பார். சொல்லிச்சொல்லிப் பழக வேண்டுமென்பது அவர் கொள்கை. "கம் பத்தைவைத்துக் கொண்டாவது கூறிப்பழகி னால்தான் படித்தவைகளை மறவாமல் இருப் போம். பாடங் கேட்பவனை மாத்திரம் உத் தேசித்துச் சொல்லவே கூடாது. நமக்கே அது பிரயோசனம்; கல்வி அபிவிருத்தி உண்டா கும்" என்று அவர் அடிக்கடி சொல்வார்.

ஒருநாள் அவர் வீட்டுத்திண்ணையில் இருந்து மிக இரைந்து யாருக்கோ நெடுநேரம் பாடஞ் சொல்லிக் கொண்டிருந்தார். நான் எங்கள் வீட்டில் இருந்தே கேட்டுக்கொண்டிருந்

தேன். தடையொன்றுமில்லாமல் சொல்லிக் கொண்டேவந்தார். 'கேட்பவர் இடையில் சந்தேகம் ஒன்றும் கேட்கமாட்டாரா?' என்று நான் நினைத்தேன். சிறிதுநேரம் கழித்து வெளியில் வந்து பார்த்தேன். அவருக்குமுன் அமர்ந்திருந்தவர் கோபாலசாமி ஐயங்காரென்ற ஒரு முழுச்செவிடர். எனக்கு உண்டான ஆச்சரியத்துக்கு எல்லையே இல்லை. அவர் செவிடர் என்பது ஐயங்காருக்கும் தெரியும். "கேட்பவரை மாத்திரம் உத்தேசித்துச் சொல்லவே கூடாது; நமக்கே அது பிரயோசனம்" என்று தாம் சொன்னதை ஐயங்கார் செயலிற் காட்டுகிறாரென்று எண்ணினேன். பாடஞ்சொல்வதில் அவருக்கு இருந்த அளவற்ற பிரீதி இதனால் விளங்குகிறதல்லவா?

---

## 4. பூண்டி அரங்கநாத முதலியார்

(1844—1893)

### முன்னுரை

சென்ற நூற்றாண்டில் தமிழ்நாட்டில் விளங்கிய சிறந்த அறிஞர்களுள் ஒருவராகிய பூண்டி அரங்கநாத முதலியாரை இந்நாட்டினர் யாவரும் நன்கு அறிவார்கள்; பிறநாடுகளிலும் அவருடைய புகழ் பரவியுள்ளது. அவருடைய சரித்திரத்தைச் சிலர் எழுதியிருக்கிறார்கள்; பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்குரிய சில பாட புத்தகங்களில் அவருடைய சுருக்கமான வர

லாறு இருப்பது எனக்கு மிக்க மகிழ்ச்சியை உண்டாக்குகின்றது. பிராயம் முதிரமுதிர உடலும் செல்வமும் முதிரவேண்டுமென்று கருதி அவற்றிற்குரியவற்றைச் செய்பவர்கள் பெரும்பாலும் மலிந்த இந்த உலகத்தில், நாளுக்கு நாள் பிராயம் முதிர்வதற்குமுன் அறிவு முதிரும் முயற்சிகளை மேற்கொள்ளும் கல்விமான்களே ஒரு நாட்டுக்கு ஆபரணமாகத் திகழ்பவர்கள்.

சிறந்த அறிவுடையோர்கள் போற்றும் பேரறிஞராக விளங்கியவர் அரங்கநாத முதலியார். இளமை தொடங்கியே அவருடைய வாழ்க்கை கல்வியினால் விளக்கமுற்றது. மாணாக்கராக இருக்கையில் அவருடைய கல்வித்திறமை வகுப்பிலுள்ள மற்றப் பிள்ளைகளுடைய திறமையைக்காட்டிலும் மேலோங்கி நின்றது. கல்வியைக் கற்பதும் கற்பிப்பதுமே அவருடைய வாழ்வாக அமைந்திருந்தன. அவரோடு பழகிய யாவரும், 'அவர் ஒரு பெரிய ஆச்சரிய புருஷர்' என்றே வியந்து கூறுவர்.

திருவாவடுதுறையாதீனத்து வித்துவான்களாகிய ஸ்ரீ சிவஞானமுனிவர், கச்சியப்ப முனிவர், சுப்பிரமணிய முனிவர் முதலியவர்களை ஆதரித்து அவர்களைக்கொண்டு பலநூல்களை இயற்றுவித்த தொட்டிக்கலைக் கேசவ முதலியார் பரம்பரையினருக்கு உறவினரும், தமிழ்மொழியில் நல்ல பயிற்சியுள்ளவரும்,

பெரிய உத்தியோகத்தில் இருந்தவருமான சுப்பராயமுதலியாரென்பவருடைய தவப் புதல்வராக அரங்கநாதமுதலியார் 1844 - ஆம் வருஷத்தில் பிறந்தார். அவருடைய முன்னோர்கள் தொண்டை நாட்டிலுள்ள பூண்டியென்னும் ஊரினராதலின், பூண்டி அரங்கநாத முதலியாரென்று அவர் பெயர் வழங்கலாயிற்று.

அரங்கநாத முதலியார் தம்முடைய தந்தையாரிடத்திலும் வேறு பலரிடத்திலும் தமிழ்க் கல்வியும், பள்ளிக்கூடங்களில் ஆங்கிலக்கல்வியும் கற்றனர். அவர் ஒவ்வொரு பரீக்ஷையிலும் பரிசுகளைப் பெற்றார். எம். ஏ. பட்டம் பெற்றவர்களிற் சிறந்தவராக விளங்கியமையின், அவரை எம். ஏ., அரங்கநாத முதலியார் என்று யாவரும் அழைப்பாராயினர். அவர் பிரஸிடென்ஸி காலேஜிலும் கும்பகோணம் காலேஜிலும் பல்லாரி புரொவின்ஷியல் ஸ்கூலிலும் முக்கிய ஆசிரியராகவும், அரசாங்கத்துத் தமிழ் மொழிபெயர்ப்பாளராகவும் இருந்து விளங்கினர். பலவகையான கல்விச் சபைகளிலும் வேறு பல ஸ்தாபனங்களிலும் அவர் உயர்ந்த ஸ்தானத்தை வகித்துவந்தார். 1893-ஆம் வருஷத்தில், தம் குணங்களையும் கல்விப் பெருமையையும் தமிழுலகம் நினைத்து நினைத்து இரங்கும்படி உயிர் நீத்தார்.

அவரோடு பத்து வருஷங்களுக்குமேல் நான் பழகியிருக்கின்றேன்; அக்காலத்தில்

அவருடைய தோற்றப் பொலிவையும், தமிழி னிடத்திலும் தமிழ் கற்றாரிடத்திலும் அவருக் கிருந்த பேரன்பையும், அவருடைய நுண்ணறி வையும், பெருந்தகைமையையும் உணர்ந்து வியந்தேன்; அவருடைய அறிவாற்றலைப் பல பெரிய அறிவாளிகள் வாயாரப் புகழ்வதையும் பலமுறை காதாரக் கேட்டு இன்புற்றிருக்கின் றேன்.

அவரைப்பற்றி எனக்குத் தெரிந்த செய்தி கள் பல. அவரோடு பழகிய காலத்தில் நானே அறிந்துகொண்டனவும், அவரே நேரிற் கூறி யனவும், அவரோடு பழகிய பிறர் கூறியனவு மாகிய சில நிகழ்ச்சிகளை யாவரும் அறிந்து இன்புற வேண்டுமென்று கருதி இப்போது எழுதுகின்றேன் :

### " பொன்னரங்கம் "

அரங்கநாத முதலியார் இளமை தொடங் கியே தமிழில் விருப்பமுடையவர்; சென்னையி லுள்ள வித்துவான்கள் எங்கேயாவது பிரசங்கம் செய்தால்,அங்கே தவறாமல் அவர்சென்று கேட் பார். சென்னையில் இருந்த கதிர்வேல் உபாத்தி யாய ரென்பவரிடத்தில் அவர் பல தமிழ் நூல் களைப் பாடங் கேட்டதுண்டு. காஞ்சீபுரம் சபா பதி முதலியார், புரசபாக்கம் அஷ்டாவதானம் சபாபதி முதலியார் முதலிய வித்துவான்க ளோடு அடிக்கடி பழகித் தமக்குத் தமிழ் நூல்

களிலுள்ள ஐயங்களைப் போக்கிக்கொள்வார். ஒரு முறை கேட்டவற்றை மறவாமல் நினைவிற் கொள்ளும் ஆற்றல் அவர்பால் சிறப்புற்றிருந்தது.

முதலியார் பள்ளிக்கூடத்தில் வாசித்துக் கொண்டிருந்தபோது, அஷ்டாவதானம் சபாபதி முதலியார் புரசபாக்கத்திலுள்ள ஸ்ரீகங்காதரேசுவரர் கோயிலில் வாரந்தோறும் சைவ நூற் பிரசங்கம் செய்துவந்தார். அக்காலத்தில், அத்தகைய பிரசங்கங்களைக் கேட்பதில் விருப்பமுடையார் பலர் இருந்தனர். சபாபதி முதலியாரோ மிக்க நா வன்மையுள்ளவர். ஆதலின், பிரசங்கத்தைக் கேட்கப் பெருங்கூட்டம் வரும். எல்லோரும் அமைதியுடன் இருந்து கேட்டு இன்புறுவர். அரங்கநாத முதலியாரும் தவறாமற் சென்று கேட்டு வருவார்.

ஒரு நாள் நிகழ்ந்த உபந்நியாசத்தின் இடையே அஷ்டாவதானம் சபாபதி முதலியார் சிவனடியாரது பெருமையைப்பற்றிப் பேசுகையில், மிக அழகாக விஷயங்களை எடுத்துக் கூறித் தேவார திருவாசகங்களிலிருந்தும் வேறு பல நூல்களிலிருந்தும் தக்க மேற்கோள்களை எடுத்துக் காட்டி யாவரையும் உவப்பித்தார். இடையே பிள்ளைப் பெருமாளையங்கார் இயற்றிய திருவரங்கக் கலம்பகத்திலுள்ள செய்யுளாகிய,

(ஆசிரியவிருத்தம்)

"பாதியா யழகியகால் கைய ரேனும்
பழிதொழிலு மிழிகுலமும் படைத்தா ரேனும்
ஆதியா யரவணையா யென்பா ராயின்
அவரன்றே யாம்வணங்கு மடிக ளாவார்
சாதியா லொழுக்கத்தான் மிக்கோ ரேனும்
சதுர்மறையால் வேள்வியாற் றக்கோ ரேனும்
போதினன் முகன்பணியப் பள்ளி கொள்வான்
பொன்னரங்கம் போற்றுதார் புலையர் தாமே"

என்பதைக் கூறி, 'சாதி முதலியவற்றால் உண்டாகும் உயர்வு உயர்வன்று; இறைவனிடத்திலுள்ள பக்தியினால் உண்டாகும் உயர்வே எல்லாவற்றினும் சிறந்ததாகும்' என்று விரித்துரைத்தார்.

அப்பொழுது கூட்டத்தினிடையே இருந்த அரங்கநாத முதலியார் எழுந்து நின்று, "ஐயா! சைவநூற்பிரசங்கம் செய்ய வந்த நீங்கள் அதற்கு மாறாகத் திருமாலைப்பற்றிய செய்யுளை மேற்கோளாகக் காட்டலாமா?" என்று கேட்டார்.

சபாபதி முதலியார், "என்ன அப்பா! அதுவும் பொன்னரங்கத்தைப்பற்றிச் சொல்லும் செய்யுள்தானே?" என்று உடனே சொன்னார். சபையிலுள்ளோர் யாவரும், இவ்வளவு விரைவில் விடை சொன்னாரே என்று வியந்தார்கள். பொன்னரங்கமென்பது அழகிய ஸ்ரீரங்கமென்றும், பொன்னம்பலமென்றும் பொருள்படும்.

அரங்கநாத முதலியார், "பொன்னரங்கம் பொன்னம்பல மாகலாம்; ஆனால் அந்தப் பாட்டில் 'ஆதியாய் அரவணையாய்' என்றும், 'போதினான் முகன் பணியப் பள்ளிகொள்வான்' என்றும் இருப்பவற்றிற்கு என்ன சமாதானம் சொல்வீர்கள்?" என்று கேட்டார்.

பிரசங்கம் செய்த முதலியார், இதற்குச் சாதுரியமாக விடை கூறவேண்டுமென்று எண்ணிச் சிறிதுநேரம் யோசித்தார். அதற்குள் அரங்கநாத முதலியார், "ஆதியாய் - முதல்வனே, அர - ஹரனே, அணையாய் - என்பால் வந்து அருள்புரிவாயாக வென்றும், பள்ளி கொள்வா னென்பதற்குக் கோயில் கொள்பவ னென்றும் அர்த்தம் சொல்லலாமல்லவா?" என்று மெல்லக் கேட்டார்.

சபாபதி முதலியார், அறிவு ஒளி வீசும் அரங்கநாத முதலியாருடைய கண்களை நோக்கினார்; 'தானே தடையை எழுப்பி விடையையும் சொல்லி விட்டான்; இவன் சிறந்த புத்திசாலி' என்று உணர்ந்தார்; உண்மையறிஞராகிய அவர், தமக்கு முன்னின்ற இளைய உருவத்திலே கூரிய அறிவு விளங்குவதைக் கண்டு பொறாமையோ கோபமோ கொள்ளவில்லை; "ஆ! ஆ! மிகவும் அழகாக இருக்கிறது! இந்த இளமையிலேயே இவ்வளவு கூர்மையான அறிவையுடைய உனக்குச் சிவபிரான் திருவருளால் மேன்மேலும் அறிவு விளக்கமும் பெரும்

புகழும் உண்டாகும்'' என்று மனமார வாழ்த்தி அவ்விளைஞரை அருகில் அழைத்து முதுகில் தட்டிக்கொடுத்தார். அவையிலுள்ளோர் யாவரும் அவ்விளைஞருடைய அறிவின் திறத்தையும் அதனைப் பாராட்டிய பிரசங்கியாரது பெருந் தன்மையையும் கண்டு வியந்தார்கள்.

'மோசம் போனேன்!'

அரங்கநாத முதலியார், கலாசாலையில் வாசித்த காலத்தில் ஒவ்வொரு வகுப்புப் பரீக்ஷையிலும் முதல்வராகவே தேர்ச்சி பெற்று வந்தார். 1862-ஆம் வருஷத்தில் மெட்றிகுலேஷன் பரீக்ஷையில் இராசதானியில் முதல்வராகத் தேர்ச்சி பெற்றார். இங்ஙனம் தேர்ச்சி பெற்ற காலங்களில் அவர் பெறும் பரிசுப் புத்தகங்கள் வீட்டிற்கு வண்டியிலே வைத்துக் கொண்டு போம்படி அவ்வளவு மிகுதியாக இருக்குமாம்.

பிரஸிடென்ஸி காலேஜில் அரங்கநாத முதலியார் பி. ஏ. வகுப்பிற் படித்த போது ஆங்கிலத்திலும் கணிதத்திலும் அவர் சிறந்த அறிவுடையவராக விளங்கினார். அக்காலத்தில் அக் காலேஜுக்குத் தலைவராக இருந்த ஸ்ரீமான் எட்மண்டு தாம்ஸன் துரை அவருடைய அறிவின் திறத்தையறிந்து அவரிடம் மிகவும் ஈடுபட்டு அவரை அன்புடன் நடத்தி வந்தார். அந்த வருஷப் பரீக்ஷையில் அவரே முதல்வராகத் தேர்ச்சி பெற்று அதற்குரிய

பரிசை யடைந்து தம் காலேஜுக்கும் தமக்கும் பெருமையை உண்டாக்குவாரென்று நிச்சயமாக எண்ணியிருந்தார்.

பரீக்ஷை நடைபெற்றது; பரீக்ஷையின் முடிவு காலேஜ் தலைவருக்குத் தெரிந்தது. அரங்கநாத முதலியார் ஆங்கிலத்தில் முதன்மை ஸ்தானம் பெறவில்லை. இதனையறிந்த தாம்ஸன்துரை மிக்க வருத்தமுற்றார்; தேடிய பொருளை இழந்தவரைப் போன்ற உணர்ச்சி அவருக்கு உண்டாயிற்று. அவர் அரங்கநாத முதலியாரை வரவழைத்து, "ஏன் இப்படி ஏமாற்றிவிட்டாய்?" என்று கேட்டார். "நான் நன்றாகத்தானே எழுதியிருந்தேன்?" என்றார் முதலியார். தாம்ஸன், தாம் நினைத்தபடி முதலியார் ஆங்கிலத்தில் முதல்வராக வாராமையைப் பற்றிக் கூறினார். முதலியார், "இதில் ஏதோ தவறு இருக்கவேண்டும். நான் ஒவ்வொரு வினாவிற்கும் தவறாமல் நன்றாக விடை எழுதியிருக்கிறேன்" என்று சொன்னதன்றித் தாம் எழுதியிருந்த விடைகளையும் விரிவாகத் தெரிவித்தார்.

அவ்வருஷத்தில் பரீக்ஷைத் தலைவராக இருந்தவரை அறிந்திருந்த தாம்ஸன்துரை தாமதம் செய்யாமல் உடனே முதலியாரை அழைத்துக் கொண்டு அவரிடம் சென்றார். அரங்கநாத முதலியார் எந்தப் பகுதியில் குறைவாக 'மார்க்கு'ப் பெற்றிருந்தாரோ

அதனைத் திருத்தியவர் அவராகவே இருந்தார். ஆதலின் முதலியாருடைய விடைக் கடிதத்தைத் தாம்ஸன்துரை பார்க்க வேண்டுமென்று விரும்பினர்.

**திருத்தியவர்:**—நான் எல்லாவற்றையும் நன்றாகப் பார்த்துத்தானே 'மார்க்குகள்' கொடுத்திருக்கிறேன்?

**துரை:**—இவர் யாவரும் வியக்கத்தக்க அறிவையுடையவர்; ஆயினும் சாதாரண மாணுக்கரைப் போலவே தேர்ச்சி பெற்றிருக்கிறார். இதைக் காட்டிலும் இவர் தோல்வியுறுவது நல்லது. இவர் எழுதியனவாகக் கூறிய விடைகளை நான் கேட்டேன்; அவை மிகவும் நன்றாக இருக்கின்றன. அறிவாளிகளின் திறமையைப் பிரகாசப்படுத்துகின்ற உங்களிடம் பிழையிருக்குமென்று நான் கருதவில்லை. எதற்கும் அதை மீண்டும் ஒருமுறை பார்த்தால் நலமாக இருக்கும்.

திருத்தியவர், "தாங்கள் சொல்லும் பொழுது அதைக் கவனிப்பதைவிட எனக்கு வேறு என்ன வேலை?" என்று சொல்லிவிட்டு அரங்கநாத முதலியாருக்குரிய எண்ணுள்ள விடைக் கடிதத்தை எடுத்துவந்தார். வந்து, ஒவ்வொரு பக்கமாகக் காட்டி, காகிதங்களைப் புரட்டினர்; "நான் சரியாகத் தானே பார்த்திருக்கிறேன்? பாருங்கள்" என்று ஒரு பக்கத்தைக் காட்டிக்கொண்டே திருத்தியவர் கூறினர்

அந்தப் பக்கத்தின் பெரும்பகுதியில் ஒரு கேள் விக்குரிய விடை முற்றிலும் எழுதப்பட்டிருந்தது; பின்னுள்ள கடிதப்பகுதி எழுதப்படாமல் இருந் தது. அப்பொழுது முதலியார் மிகவும் ஆத்திரத் தோடு, "அந்தக் காகிதத்தையும் தள்ளுங்கள்" என்றார். பரீக்ஷகர் அப்படியே செய்தார். என்ன ஆச்சரியம்! அந்தப் பக்கமும் அதற்கு மேலுள்ள பக்கங்களும் திருத்தப்படவேயில்லை.

"ஐயோ மோசம்போனேனே!" என்று கூவினார் பரீக்ஷகர்; "மன்னிக்கவேண்டும்; நான் அநியாயமாய் ஒருவருடைய புகழுக்குத் தடையாய் நின்றேன். இந்தப் பக்கம் பாதி யோடு எழுதி விடப்பட்டதனால் இதற்குமேல் விடைகள் இல்லை யென்று எண்ணி மேலே பார்க்கவில்லை. பெரும்பிழை செய்துவிட்டேன். பொறுத்துக்கொள்ள வேண்டும். என்பிழையை அறிந்து கொள்ளும்படி செய்த தங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகின் றேன்!" என்று மனம் வருந்திக் கூறினார்.

திருத்தாத பகுதிகள் திருத்தப்பட்டன; அரங்கநாத முதலியார் முதல்வராக நின்றா ரென்று சொல்லவும் வேண்டுமா? பி.ஏ., பரீ க்ஷையில் முதல்வராகத் தேர்ச்சி பெறுபவருக் குரிய சிறந்த பரிசையும் அவர் அவ்வருஷம் பெற்றார்.

தம்முடைய உண்மையான கல்வித்திறமை எதிர்பாராதபடி நேர்ந்த இடையூற்றினால் மங்

காமல் தப்பி விளக்கமுற்றதனால் அரங்கநாத முதலியாருக்கு உண்டான உவகையோ, அவருடைய ஆசிரியராகிய தாம்ஸன் துரைக்கு உண்டான உவகையோ, யாது அளவிற்பெரிதென்று அறிந்து கூறவல்லார் யார்?*

## 'வெறும் பண்டிதர்'

கும்பகோணம் காலேஜில் அரங்கநாத முதலியார் சிலகாலம் ஆசிரியராக இருந்து வருகையில் அங்கே இருந்த மற்ற ஆசிரியர்கள் யாவரும் அவருடைய கல்வியாற்றலைக் கண்டு வியந்து அவரைத் தமக்கு எடுத்துக் காட்டாக மேற்கொண்டனர். புதிய விஷயமென்பதே அவருக்கு இல்லை; எதையும் விரைவில் அறிந்து கொண்டு பிறருக்கும் கற்பிக்கும் ஆற்றல் அவர்பால் இருந்தது.

அக்காலத்தில் அக்காலேஜில் தமிழாசிரியராக இருந்தவர் திரிசிரபுரம் சி. தியாகராச செட்டியார். அவரிடம் முதலியாருக்கு நன்மதிப்பு உண்டாயிற்று; அவருடைய தமிழ்க் கல்வியின் ஆழத்தை உணர்ந்து அடிக்கடி அவர் வீட்டிற்குச் சென்று பார்த்து வருவார். முதலியார் அங்ஙனம் செய்ததைப் பொறாத ஒருவர் அவரிடம், "செட்டியார் வீட்டிற்கு நீங்கள் போகலாமா? அவரோ வெறும் பண்டி

---

* அரங்கநாத முதலியாரவர்களே என்னிடம் நேரில் கூறிய வரலாறு இது.

தர்; தாங்கள் பெரிய புரொபஸர். நாங்களெல்லோரும் அவரிடம் மதிப்புடையவர்களே; ஆனாலும் அளவுக்கு மிஞ்சிப் போகமாட்டோம். தாங்கள் அவர் வீட்டிற்கு அடிக்கடி போவது தங்களுடைய கௌரவத்திற்கு ஏற்றதன்று. எங்களைக் காட்டிலும் உயர்வையுடைய தாங்கள் அங்ஙனம் செய்வது எங்கள்மேல் அவருக்கு வருத்தத்தை உண்டாக்கும்" என்றனர்.

இதைக் கேட்ட முதலியார், "உங்களுக்குத் தமிழ்க் கல்வியறிவு உண்மையாக இருந்தால் இங்ஙனம் கூறத் துணிய மாட்டீர்கள். செட்டியாரவர்களுக்கு நம்மைக் காட்டிலும் சம்பளம் குறைவென்ற காரணத்தால் அவர்கள் நம்மிலுந் தாழ்ந்தவர்களென்று கருதுகிறீர்களா? பணத்துக்கும் கல்விக்கும் சம்பந்தமில்லையென்பது உங்களுக்குத் தெரியாதா? பழைய காலத்தில் தமிழ் வித்துவான்களும் ஸம்ஸ்கிருத வித்துவான்களும் வறியவர்களாக இருந்தார்களென்பதும், அந்த வறுமையே அவர்களுக்கு உயர்வை உண்டாக்கிய தென்பதும், முடியுடை மன்னர்களெல்லாம் அவர்களுடைய நட்பை ஒரு சிறப்பாகக் கருதி வந்தார்களென்பதும் சரித்திரத்தால் அறிந்த உண்மைகளல்லவா? நாமெல்லாம் வேறொருநாட்டாருக்குரியபாஷையில் ஓரளவு படித்துவிட்டுத்தருக்கிநிற்கின்றோம். செட்டியாரோ நம்முடைய தாய்மொழியை இளமை முதலே தக்க ஆசிரியரிடம் முறை

யாகக் கற்றுத் தமிழ்ச் சுவையில் ஈடுபட்டிருக்கின்றார். அவருக்குத் தமிழ்தான் செல்வம்; இன்றைக்கு நம்மை வேலையிலிருந்து நீக்கிவிட்டால் நம் அறிவு நமக்கு உதவாது; அவர் விஷயமோ அப்படியன்று; தமிழுலகத்தில் எங்கே சென்றாலும் அவருடைய மதிப்பு வெளிப்படும். நாம் வேலையை உத்தேசித்துப் படித்தோம். அவர் இயற்கையாகவே தமிழில் அன்புற்றுப் படித்தவர். அவருடைய கல்வி மிகுதியைக் கேள்வியுற்ற கோபால ராவ் இந்தக் காலேஜுக்கு அவரை விரும்பி அழைத்தார். அவரைப் போன்றவர்கள் தங்களுக்கு வேண்டியதை நம்மிடம் சொல்லமாட்டார்கள். அவர்களுடைய வீட்டிற்கு நாம் போய்ப் பழகினால்தான் அவர்களுடைய உண்மை நிலையை அறிந்து தக்கபடி உதவிபுரியலாம். நமக்கு இந்த ராஜ்யத்திலேதான் மதிப்பு. பழைய காலமாக இருந்தால் அவர்கள் இருக்கும் நிலையே வேறு. செட்டியாருடைய அருமை தெரியாமல் 'அவர் வெறும் பண்டிதர்' என்று தாங்கள் சொன்னதைக் குறித்து நான் மிக வருந்துகின்றேன்" என்றார்.

கேட்ட அவர் தாம் சொல்லியதைப் பொறுத்துக்கொள்ளும்படி வேண்டிக்கொண்டார். முதலியாருடைய தமிழன்பை யாவரும் தெரிந்துகொண்டனர்.

## அறியான் வினா

முதலியார் மிக்க தமிழ்ப் பயிற்சி யுடையவராதலின் சில சமயங்கள் வருஷ முடிவில் நடைபெறும் காலேஜ் வகுப்புப் பரீட்சைகளில் பரீட்சகராக இருப்பதுண்டு. ஒருமுறை பி. ஏ. வகுப்பிற்குக் கம்பராமாயணத்தில் ஒரு பகுதி பாடமாக இருந்தது. அதில் பொருள் விளங்காத ஒரு செய்யுள் அச்சிடப்பட்டிருந்தது. பாடஞ் சொல்லிய தியாகராச செட்டியார் அந்தச் செய்யுள் வரும்போது, "இதற்குப் பொருள் விளங்கவில்லை. வேறு யாருக்கும் விளங்காது; ஆகையால் இதிற் கேள்வியும் வராது" என்று சொல்லி மற்றச் செய்யுட்களை மட்டும் கற்பித்தார்.

அவ்வருஷ முடிவில் நடைபெற்ற வகுப்புப் பரீட்சையில், பி. ஏ. தமிழ் வினாப் பத்திரத்தில், எந்தச் செய்யுளுக்குப் பொருள் கூறப்படவில்லையோ அதில் ஒரு கேள்வி வந்திருந்தது. பிள்ளைகளுள் ஒருவரேனும் அதற்கு விடையெழுதவில்லை; அவர்கள் செட்டியாரை அணுகி, "நீங்கள் இது விளங்காத செய்யுளென்றும், இதிற் கேள்வி வராதென்றும் சொன்னீர்களே; உங்களுக்கு விளங்காதது இப்பரீட்சகருக்கு விளங்கியதனால் கேட்டிருக்கிறார்" என்று சொன்னார்கள். அந்த வினாப் பத்திரமோ அரங்கநாத முதலியார் ஸித்தம் செய்தது. பிறகு செட்டியார் அந்த வினாப் பத்தி

ரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு முதலியாரிடம் சென்று, "இந்தக் கேள்வி கேட்டிருக்கிறீர்களே; இதற்கு என்ன பொருள் செய்து கொண்டீர்கள்?" என்று கேட்டார்,

முதலியார்: நீங்கள் என்ன சொன்னீர்கள்?

செட்டியார்: அது விளங்காத செய்யுள்; எனக்கு விளங்கவில்லையென்று சொல்லிவிட்டேன்.

முதலியார்:—எனக்கும் விளங்கவில்லை.

செட்டியார்:-விளங்காததைக் கேட்கலாமா?

முதலியார்:—நீங்கள் இதற்கு என்ன பொருள் சொல்லியிருக்கிறீர்களென்று அறிந்து கொள்ளும் பொருட்டே நான் கேட்டேன். வினாவின் வகைகளுள் அறியான் வினா ஒன்றல்லவா? இதை அந்த வகையிற் சேர்த்துக் கொள்ளுங்கள்.

செட்டியார்:—தாங்கள் என்னை நேரில் கேட்டிருக்கலாமே; இந்தச் செய்யுள் எந்தப் பரீட்சகருக்கும் விளங்காததாகையால் இதிற் கேள்வி வராதென்று மாணாக்கர்களிடம் நான் சொல்லி விட்டேன்; அதற்கு நேர் விரோதமாக இதில் நீங்கள் கேள்வி கேட்டிருக்கிறீர்கள்; பிள்ளைகள் என் மண்டையை உருட்டுகிறார்கள்; இப்படி விஷப் பரீட்சை செய்யலாமா?

முதலியார்:—இதைப் பற்றித் தாங்கள் கவலையுற வேண்டாம்; அந்தக் கேள்விக்கு 'மார்க்கு'ப் போடாமல் விட்டுவிடுகிறேன்.

முதலியாருக்குச் செட்டியாரிடம் உள்ள மதிப்பும் அவருடைய உண்மைத் தமிழன்பும் இந்நிகழ்ச்சியால் நன்கு விளங்கும்.

முதலியார் சென்னைக்கு வந்த பின்பும் செட்டியாருக்கு அடிக்கடி கடிதம் எழுதுவ துண்டு. செட்டியார் இறந்ததைக் கேட்டதும் அவர் மிகவும் வருந்தினார். அப்பொழுது அவர் கும்பகோணம் காலேஜில் இருந்த ஸ்ரீ ஸாது சேஷையரவர்களுக்கு ஆங்கிலத்தில் ஒரு கடிதம் எழுதினார். அதிலுள்ள ஒரு பகுதியின் கருத்து வருமாறு :—

சென்னை,

26, ஜனவரி, 1888.

"அன்புள்ள சேஷையா,

நேற்று இரவு ஹிந்துப் பத்திரிகையில், நம் தியாகராச செட்டியார் நீண்ட காலமாக அசௌக்கியமாக இருந்து திருச்சிராப்பள்ளி யில் தேகவியோகமடைந்தாரென்று வாசித் தேன். ஸ்ரீ சாமிநாதையரிடமிருந்து வந்த கடி தத்தால் செட்டியாருடைய தேகஸ்திதி விரை வாக மெலிவுற்று வருகின்றதென்று அறிந் திருந்தமையால், ஹிந்துவில் வெளியிடப்பட்ட இந்தச் செய்தியை எதிர்பார்த்திருந்தேன். தியாகராச செட்டியார் கும்பகோணம் காலே ஜிற்குச் செய்த உபகாரமும், ஒரு பண்டித ரென்ற வகையில் அவர் பெற்றிருந்த உயர்ந்த திறமையும் அவருடைய மாணக்கர், அபிமானிக

ளாகிய பலருடைய மரியாதைக்கும் பிரியத்துக்கும் அவரை உரியராக்கின. நீங்கள் ரூபாய் 500 சேகரிக்க முடியுமானால் பி. ஏ. வகுப்பில் தமிழில் முதல்வராகத் தேர்ச்சி பெறும் மாணக்கருக்குப் புஸ்தகங்களாக 20 ரூபாய் மதிப்புள்ள பரிசொன்றை அவர் பெயரால் ஏற்படுத்தலாம். கும்பகோணத்தில் நீங்கள் 450 ரூபாய் சேகரிக்க முடியுமானால், 500 ரூபாயாக்குவதற்கு நான் 50 ரூபாய் தருவேன். இந்த விஷயத்தில் நீங்கள் ஊக்கங்கொண்டு அவருடைய மாணக்கர் பலரையும் அபிமானிகளையும் அணுகுதற்குரிய உபாயமொன்றைத் தேடுவீர்களென்று நம்புகிறேன். திருவாவடுதுறை * மடாதிபதி உலகை நீத்துவிட்டாரே! என்செய்வது! இல்லையாயின் அவரிடமிருந்து நல்ல தொகை யொன்றைப் பெறலாகுமே; இந்த விஷயத்தை நிறைவேறச் செய்வதற்கு என்னைக் காட்டிலும் உங்களுக்கு நன்றாகத் தெரியும்........."

'கீழ்காய் நெல்லி'

கும்பகோணம் காலேஜில் அரங்கநாத முதலியார் இருந்த காலத்தில் அந்த ஊர் ஒவ்வாமையால் அவருடைய தேகத்திற்கு அசௌக்கியம் நேர்ந்தது. அப்பொழுது அங்கே இருந்த தமிழ்ப் பண்டிதர் ஒருவர் வைத்தியத்திலும் பழக்கமுடையவராக இருந்தார். அவர் இலக்கணமாகவே பேசுவார்; திரிசொற்களைக்

---

* மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள்.

கலந்து பேசுவதில் அவருக்கு விருப்பம் அதிகம். பிறருக்கு எளிதில் விளங்கவேண்டு மென்பதை நினையாமல் தமிழ்நாட்டில் வழக்கத்தில் வந்த சில வேறுபாஷைச் சொற்களை அவ்வாறே வழங்காமல் மொழிபெயர்த்துக் கூறுவார். பிள்ளைகளிடம் பேசும்பொழுது 'சிலேட்' என்று சொல்லாமல் கற்பலகை யென்றே சொல்வார்; பென்ஸிலை எழுது கோலென்றும், ரூல்கழியை உரூல்கழி யென்றும், ரயிலென்பதை இரயிலென்றும், பேனவை இறகென்றுமே வழங்குவார். இப்படிப் பேசினால்தான் தம்மைத் தமிழ்க்கல்வியிற் சிறந்தவராக யாவரும் கருதுவாரென்பது அவரது எண்ணம். அங்ஙனமே அநேகர் எண்ணி நடப்பதுண்டு.

அரங்கநாத முதலியாருடைய நோயின் மூலத்தை யறிந்து மருந்து கொடுக்கும் பொருட்டு அப்பண்டிதர் வருவிக்கப் பெற்றார். அவர் வந்து கைபார்த்து இன்ன நோயென்று சொல்லிவிட்டு, ஒரு தைலம் காய்ச்ச வேண்டு மென்றும் அதற்குச் சில பச்சிலைகள் வேண்டு மென்றும் கூறினர். அந்தப் பச்சிலைகளைத் தேடிக்கொண்டு வருவதற்காக ஒருவனை அழைத்து வந்தார்கள். அவனிடம் தமக்கு வேண்டிய பச்சிலைகளைப் பண்டிதர் சொன்னார். உலக வழக்கில் வழங்கும் பெயர்களைக் கூறாமல் வைத்திய நூல்களி லுள்ளபடி அவர் சொன்னார்; அவற்றிற் சில அவனுக்குப்

புரியவில்லை. "கீழ்காய் நெல்லி" என்று ஒரு பச்சிலையைக் கூறினார். அவனுக்கு அது விளங்கவில்லை. மீட்டும் அவன் என்ன வென்று கேட்டான்; "கீழ்காய் நெல்லி" என்று ழகரத்தையும் யகரத்தையும் அழுத்த மாக உச்சரித்துச் சொன்னார் பண்டிதர். அவனோ அப்பொழுதும் தெரிந்துகொள்ளாமல் விழித்தான். "எண்ணெய் வடிக்கவேண்டும்; அதற்காகக் கீழ்காய் நெல்லி வேண்டும்" என்று பண்டிதர் விளக்கினார்; அவன், "எனக்கு வெறும் நெல்லிக்காய்தான் தெரியும்; நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லையே" என்றான்.

இப்படிச் சிறிதுநேரம் இருவரும் பேசிக் கொண்டிருக்கையில் அருகிலிருந்த வைத்தியந் தெரிந்த ஒருவர் சிரித்துக் கொண்டே, "கீழா நெல்லியப்பா அது!" என்றார். அவனுக்கு அவர் சொன்னது ஒரு பெரிய விடுகதையை விடுத் ததுபோல இருந்தது; "கீழா நெல்லியா! இதை முந்தியே சொல்லியிருக்கக்கூடாதா? அவர் ஏதோ நெல்லி என்று தானே சொன்னார்; எனக்கு ஒன்றும் புரியவில்லை" என்றான்.

இவற்றையெல்லாம் கவனித்துக் கொண் டிருந்த அரங்கநாத முதலியாருக்கு மிக்க வியப்பு உண்டாயிற்று; அவர் பண்டிதரைப் பார்த்து, "உங்களுடைய தமிழ் இலக்கணத்தை இவனிடந்தானா காட்ட வேண்டும்! இவ்வளவு

நேரம் தொண்டைத் தண்ணீர் வற்றும்படி இவனிடம் சொன்னீர்களே. இவனுக்கு விளங் கும்படி வழக்கமாகவுள்ள பேரைச் சொல்லி யிருந்தால் இவ்வளவு கால தாமசம் உண் டாகாதே'' என்றார்.

**பண்டிதர்:** நான் ஒன்றும் தவருகச்சொல்ல வில்லையே. கீழாநெல்லி யென்பது மரூஉ வழக் கல்லவா? கீழ்காய் நெல்லியென்பது தானே அதன் இயற்பெயர்? அதனைக் கூறுவதிற் பிழையென்ன?

**முதலியார்:** இவ்வளவு நேரம் அவனுடைய நேரத்தையும் உங்களுடைய வார்த்தைகளையும் செலவழித்ததுதான் பிழை. 'ஊருடன்கூடி வாழ்' என்பது உங்களுக்குத் தெரியாததன்றே. 'கீழ்காய் நெல்லி' என்று நீங்கள் அவனிடம் சொன்னால், அவன் அந்தப் பெயரைக் குறித் துக்கொண்டு ஆராய்ச்சிசெய்யப் போகிறானா? அவனிடம் நமக்கு வேண்டியது அந்தப் பச்சிலை. அதை விரைவில் கொண்டுவருவதற்கு எது வழியோ அதையல்லவா பார்க்கவேண் டும்? அவனிடம் 'கீழாநெல்லி' என்று முதலி லேயே சொல்லி யிருந்தால், இவ்வளவு நேரத் தில் அதைக் கொண்டுவந்து கொடுத் திருப்பானே; நீங்கள் புஸ்தகம் எழுதினால்தான் 'கீழ்காய் நெல்லி' என்று எழுதவேண்டும்.

பண்டிதர் பேசாமல் வீடுசென்றார். அவ ருடைய தமிழறிவு உலகியலை யறியாமையால்

சங்கடங்களை உண்டாக்கியது; முதலியாருடைய தமிழன்போ உலகியலோடு பொருந்தி யாவருக்கும் நன்மையை உண்டாக்கிற்று.

### ஆங்கிலேயர்களின் பாராட்டு

சென்னைச் சர்வகலா சாலையில் 1890-ஆம் வருஷத்தில் நடந்த பட்டமளிப்புவிழாவில் அரங்கநாதமுதலியார் பிரசங்கம் செய்தார். அது பலரால் உயர்வாகக் கொண்டாடப்பெற்றது. 'புதிய இந்தியா' என்னும் நூலின் ஆசிரியராகிய ஸ்ரீமான் காட்டன் துரை என்பவர் அப்பிரசங்கத்தைப் பத்திரிகையிற் படித்து அதனுடைய பொருட்சிறப்பை யறிந்து ஈடுபட்டு, வலிந்து முதலியாருக்கு ஒரு கடிதம் எழுதிப் பாராட்டினாராம்; அதுமுதல் இருவரும் அடிக்கடி ஒருவர்க்கொருவர் கடிதம் எழுதும் வழக்கத்தை மேற்கொண்டனரென்பர்.

இந்திய இம்பீரியல் கெஸட்டியர் (*The Imperial Gazetteer of India*) என்னும் நூல் தொகுதிகளை அரசாங்கத்தாரின் கட்டளைப்படி வெளியிட்டவராகிய ஸ்ரீமான் ஹண்டர் துரை (*Sir William Wilson Hunter*) என்பவர் அவற்றின் *இரண்டாம் பதிப்பைப் பின்னும்

* இந்தப் புஸ்தகங்கள் முதலில் ஹண்டர் துரையினால் 1881-ஆம் வரு 9 தொகுதிகளாகவும் பின்பு 1886-ஆம் வருஷத்தில் விரிவாக எழுதப்பெற்று 14 தொகுதிகளாகவும் அவராலேயே வெளியிடப்பெற்றன; அவர் காலமான பிறகு அவை பல அறிஞர்களாற் பின்னும் விரிவுபெற்று 26 தொகுதிகளாக வெளிவந்திருக்கின்றன.

சில செய்திகளைச் சேர்த்து வெளியிட எண்ணி ஞர். அதன்பொருட்டு இந்தியாவிலுள்ள பற் பல இடங்களுக்குஞ் சென்று அங்கங்கே உள்ள மக்களின் வழக்க ஒழுக்கங்கள், நாகரிக நிலை, வியவசாய வியாபார நிலை, மரம் செடி கொடி விலங்கு பறவை முதலியவற்றின் தன்மை, சரித் திர சம்பந்தமான அடையாளங்கள் முதலிய வற்றை ஆராய்ந்து தேடிப் பல செய்திகளைத் தொகுத்தார். இதற்காக அங்கங்கே உள்ள பேரறிஞர்களைத் துணையாகக் கொண்டார். அவர் தமிழ்நாட்டுக்கு வந்த காலத்தில் துரைத் தனத்தார் அவருக்குத் துணைபுரியும்படி அரங்க நாத முதலியாரை நியமித்தனர்.

முதலியாருடைய உதவியினுல் ஹண்டர் துரை பலசெய்திகளை எளிதில் அறிந்தனர். அவ ருடைய ஆராய்ச்சித் திறமும் அறிவாற்றலும அந்தத் துரையின் உள்ளத்தைக் கவர்ந்தன. ஒருமுறை ஹண்டர் கும்பகோணத்திற்கு வந் திருந்தார். அக்காலத்தில் நான் அந்நகர்க்காலே ஜில் வேலைபார்த்து வந்தேன். அவர் ஒரே நாளில் காலையிலிருந்து பிற்பகல் 4-மணிக்குள் அவ்வூரைச் சுற்றிப் பார்த்து, அங்கங்கே யுள்ள தொழிலாளிகளின் நிலை, நகரத்தின் அமைப்பு, கோயில்களின் அழகு, இயற்கைப் பொருள்களின் தன்மை முதலியவற்றைப்பற்றி அறிந்துகொண்டார். அன்று பிற்பகல் 4-மணிக்குமேல் கும்பகோணம் காலேஜில் ஒரு

பிரசங்கம்செய்தார். அதைக்கேட்கும்பொருட்டு அயலூர்களிலிருந்தும் பலர் வந்திருந்தனர்.

அவருடைய தோற்றமும் அவர் பேசிய அழகும் எல்லோருடைய உள்ளத்தையும் கவர்ந்தன; அவர் பல அரிய விஷயங்களைப்பற்றிப் பேசிவிட்டு அரங்கநாத முதலியாரைப் பாராட்டிச் சில கூறினர்: "என்னுடைய தமிழ்நாட்டு யாத்திரையில் எனக்குப் பலவிதத்திலும் உதவி புரிந்த நண்பர் அரங்கநாத முதலியாரைப்பற்றி நான் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். அவர் இந்தக் கலாசாலையில் சிலவருஷங்கள் ஆசிரியராக இருந்தவராதலால் உங்களுக்கு அவரைப்பற்றி நன்ருகத் தெரிந்திருக்கும். ஆனலும் ஆங்கிலப்பயிற்சியிலும் விஷயங்களை ஆராய்ந்தறிவதிலும் அவருக்குள்ள நுண்ணறிவை என்னைப்போல் அறிந்து மகிழும் சந்தர்ப்பம் உங்களுக்குக் கிடைத்திராது. அவருடைய அறிவைக் கண்டு நான் வியந்தேன். அவர் ஒரு பெரிய ஆச்சரிய புருஷரென்பதில் சந்தேகமே இல்லை. அவருடைய சிறந்த உதவியை நான் என்றும் மறவேன்" என்று கூறியதைக்கேட்ட யாவரும் அகமகிழ்ந்தார்கள்.

முதலியாருடைய ஆங்கில அறிவை ஆங்கிலேயரே புகழ்ந்து பாராட்டியது பெரிய சிறப்பன்ருே?

முற்கூறிய ஹண்டர் துரைக்கு அந்நகர் நேடிவ் ஹைஸ்கூலின் தலைவராகிய ராவ்பகதூர்

எஸ். அப்பு சாஸ்திரியார் ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்து அளிப்பதாக நினைத்தனர். அதற்குரியவற்றை அரங்கநாத முதலியாரோடு யோசித்துச் செய்தார். "வரவேற்புப் பத்திரத்தைப் பெற்றுக்கொண்டு விடை கூறுதற்குரியவற்றை யோசித்து வைத்துக் கொள்வதற்கு அந்தப் பத்திரத்தின் பிரதியொன்றை முந்தியே கொடுக்கவேண்டுமோ?" என்று ராவ்பகதூர் அப்பு சாஸ்திரிகள் முதலியாரைக் கேட்டபொழுது, அவர் "துரையவர்களுடைய பேனாவும் நாவும் எந்தச் சமயத்திலும் ஸித்தமாக இருக்கும்; ஆதலின் அப்படிச் செய்ய வேண்டுவது அவசியமில்லை" என்றார். அந்தத்துரை அரங்கநாத முதலியாரை எங்ஙனம் நன்றாக அறிந்திருந்தனரோ அப்படியே முதலியாரும் அந்தப் பேரறிஞருடைய அறிவினை அறிந்து அவரோடு பழகுவதில் மகிழ்ச்சியுடையவராக இருந்தார். "சான்றோர் சான்றோர் பாலராப" என்பது உண்மையன்றோ? அரங்கநாத முதலியாருடைய உயர்ந்த அறிவின் திறமை இயல்பாகவே எல்லோராலும் மதிக்கப் பெற்றாலும், அது ஹண்டர் துரையோடு சேர்ந்து உதவியதால் பின்னும் நன்கு வெளிப்பட்டுப் பெருமையை யடைந்தது.

என் பழக்கம்

கும்பகோணத்தில் ஹண்டர் துரையுடன் அரங்கநாத முதலியார் வந்திருந்த காலத்தில்

நான் அவரை முதன்முதலாகக் கண்டேன். அவரோடு நெருங்கிப் பழக அப்பொழுது சமயம் நேரவில்லை. ஆனாலும் அவரைப்பற்றிப் பிறர் கூறுவனவற்றைக் கேட்டவனாதலின் அவரிடத்து எனக்கு மிக்க மதிப்பு உண்டாயிற்று.

சென்னைக்கு நான் முதன்முதலாக வந்த காலத்தில் சேலம் ஸ்ரீ இராமசாமி முதலியாரவர்களுடைய பங்களாவில் தங்கியிருந்தேன். அப்பொழுது சென்னையின் பல இடங்களுக்கும் அவர் என்னை அழைத்துச் சென்று பல கனவான்களுடைய பழக்கத்தையும் வித்துவான்களுடைய பழக்கத்தையும் செய்துவைத்தார்.

ஒருநாள் பிரஸிடென்ஸி காலேஜிற்குப் போயிருந்தோம். அங்கே அரங்கநாத முதலியாரைப் பார்த்துப் பேசிக்கொண்டிருந்தோம். அன்று அவர் தமிழ்நூல்களில் உள்ள சில வருணனைகளை எடுத்துக்காட்டி, "இவற்றின் நயங்களை யறிந்து கொள்ளாமற் சிலர் குறை கூறுகிறார்கள். கவிஞர்களுடைய கற்பனைச் திறனை இவை எவ்வளவு அழகாக எடுத்துக்காட்டு கின்றன!" என்று சொன்னார். அவற்றைக் கேட்ட நான், 'ஆங்கிலத்திலே பல அரிய விஷயங்களை உணர்ந்த இவர் தமிழ்நூல் வருணனைகளைப் புகழ்ந்து பேசுவது இவருடைய தமிழன்பை வெளிப்படுத்துகின்றது; இவரிடம் பாடங்கேட்கும் பிள்ளைகளுக்குத் தமிழ்மொழியினிடத்தும் அதிகப்பற்று உண்டாகும்' என்று

எண்ணி வியந்தேன். அப்பொழுது நான் சீவகசிந்தாமணியைப் பதிப்பிக்க எண்ணி யிருப்பதை அவர்பால் தெரிவித்தேன். அவர் மிக மகிழ்ந்து அங்ஙனம் செய்வது அவசிய மென்று கூறினர்.

சிந்தாமணியைப் பதிப்பிக்கும்பொருட்டு இரண்டாவது முறை நான் சென்னைக்கு வந் திருந்தேன். அரங்கநாத முதலியார் ஒவ்வொரு நாளும் பிற்பகலில் 'காஸ்மொபாலிடன் கிளப்' புக்குச் சென்று பொழுதுபோக்குவது வழக்கம். அவரைக் காண எண்ணிய நான் சே. இராமசாமி முதலியாருடன் அங்கே சென்று கண்டேன். அவர் அப்பொழுது 'பில்லியர்ட்ஸ்' விளையாடிக் கொண்டிருந்தார். எங்களை அவர் உட்காரச் சொல்லி விட்டு, விளையாடிக்கொண்டும் என்னைப் பார்த்துக்கொண்டும்,

* "என்னனைய முனிவரரு மிமையவரு மிடையூருன்
றுடைய ராஞல்
பன்னகமு நகுவெள்ளிப் பனிவ்வரையும் பாற்கடலும்
பதும பீடத்
தந்நகருங் கற்பகநாட் டணிநகரு மணிமாட
வயோத்தி யென்னும்
பொன்னகரு மல்லாது புகலுண்டோ விகல்கடந்த
புலவு வேலோய்"

(கையடைப் படலம்)

என்னும் கம்பராமாயணச் செய்யுளைச் சொன்

---

* இது, விசுவாமித்திரர் இராமரை அழைத்துச் செல்ல வந்தபோது தசரதரைப் பார்த்துக் கூறிய செய்யுள்.

ஞர். கேட்ட நான், "நான் அந்தப் பாடலைத் தங்களிடம் சொல்லி என் குறையைத் தீர்த்துக் கொள்ளலாமென்று எண்ணியிருந்தேன்!" என்றேன். அவர், "நீங்கள் இந்தச் செய்யுளைச் சொல்வீர்களென்று எனக்குத் தெரியும். அதைச் சொல்லும் சிரமத்தை உங்களுக்கு வைக்கக்கூடாதென்று நானே சொல்லி விட்டேன்" என்றார். அப்பால் சிறிது நேரம் பேசிக்கொண் டிருந்தோம். சிந்தாமணியைப் பதிப்பித்து வருவதைத் தெரிவித்தேன். அவர் மகிழ்ச்சியுற்றார்.

பின்பு ஒருநாள் அவர் வீட்டிற்குச் சென்றேன்; அவரைக் கண்டு,

(கட்டளைக் கலித்துறை)

"நந்தாத வான்பொரு ளைப்புல வோர்க்கு நயந்தளிக்கும்
சிந்தா மணியைப் பலரு மெளிதுறச் செய்திடுவாய்
மந்தாரத் தோடெழிற் சந்தானம் போலிரு வான்பொருளை
வந்தார்க் களித்திடு மால்ரங்க நாத மகிபதியே"

என்ற செய்யுளைக் கூறினேன்; அன்றியும் பலரிடம் கையொப்பம் பெற்று நான் சிந்தாமணியின் பதிப்பைத் தொடங்கி யிருப்பதையும் சொன்னேன். அவர் உடனே உவந்து 50 ரூபாய் தருவதாகக் கையொப்பமிட்டார்.

அக்காலமுதல் நான் சென்னைக்கு வரும் காலங்களிலெல்லாம் முதலியாரைக் கண்டு ஸல்லாபம் செய்யும் லாபத்தைப் பெற்றேன். அவரோடு பழகப்பழக அவருடைய குணங்கள்

என் உள்ளத்தைக் கவர்ந்தன. அவருடைய தோற்றம் கம்பீரமாக இருக்கும். நறுக்கிவிட்ட தலைமயிர் பிடரியிலே வரிசையாகத் தொங்குவதும், முகத்தோற்றமும், பார்வையும் ஒரு சிங்கத்தின் நினைவை உண்டாக்கும். தைரியத்திலும் அவர் சிங்கத்திற்குக் குறைந்தவரல்லர் அவரிடத்தில் அறிஞர்களும் கனவான்களும் நன்மதிப்பு வைத்து மரியாதையுடன் பழகி வந்தார்கள். ஜட்ஜு முத்துசாமி ஐயர், ஸர். வி. பாஷ்யமையங்கார், சேலம் இராமசாமி முதலியார், புதுக் கோட்டையில் திவானாக இருந்த அமராவதி சேஷையா சாஸ்திரிகள், திவான்பகதூர் ஸ்ரீநிவாஸராகவையங்கார், கும்பகோணம் திவான்பகதூர் ஆர். ரகுநாத ராயர், சென்னையிலிருந்த சோமு செட்டியார், பம்மல் விஜயரங்க முதலியார் முதலியவர்கள் அவருடைய நண்பர்கள்.

ஆங்கிலம் முதலியவற்றிற் சிறந்த பயிற்சியும் அன்பும் அவருக்கு இருந்தன; ஆயினும் தமிழினிடத்தில் அவருக்கு ஒரு தனியன்பு இருந்து வந்தது. தமிழ்ச் செய்யுட்களிற் பல அவருக்கு மனப்பாடம் உண்டு. தமிழ்ச் சுவையை அவர் உணர்ந்து உணர்ந்து இன்புறும்பொழுது உடன் இருப்பவர்களுக்கும் தமிழபிமானம் உண்டாகும். கவிகளுடைய கற்பனையின் உயர்வையும், மனோபாவத்தையும் தரமறிந்து கூறுவார்; 'இக்கருத்தை இப்படிச்

சொல்லலாம் ; இப்படியும் கூறலாம் ; ஆனால் இந்தக் கவியைப்போல இவ்வளவு அழகாக



வெளியிட முடியாது' என்று செய்யுட் பொருள்களை வியந்து பாராட்டுவார். கம்பராமாயணத் திலும் வேறு சில பிரபந்தங்களிலும் அவருக்கு

ஈடுபாடு அதிகம். இக்காலத்தில் ஆங்கிலத்தில் அறிவுடைய பலர் ஆங்கிலத்திலேயே முதலில் நினைந்து பிறகு தமிழிலே பேசுகிறார்கள்; முதலியார் அத்தகையரல்லர்; அவர் ஒருமுறை, "நான் எதையாவது நினைக்கும்போது முதலில் தமிழிலேதான் நினைப்பேன்; தமிழினால் உண்டாகும் இன்பம் இங்கிலீஷினால் உண்டாவதில்லை" என்று என்னிடம் சொல்லியிருக்கின்றார்.

### பாடற் கடிதம்

சீவகசிந்தாமணியை நான் பதிப்பித்து வந்தகாலத்தில் அச்சான பகுதிகளை முதலியாரிடம் அவ்வப்போது காட்டுவேன். அவர் அவற்றைப் பார்த்து அந்நூற் செய்யுட்களின் அருமையையும் உரையின் பெருமையையும் அறிந்து இன்புறுவார்; பதிப்புமுறை அழகாக இருக்கின்றதென்று பாராட்டுவார்; அதனால் எனக்குப் பின்னும் ஊக்கம் மிகுதியாக உண்டாகும்.

சிந்தாமணியின் முதற்பதிப்பு 1887-ஆம் வருஷ முடிவில் நிறைவேறியது. அப்பொழுது எனக்கு உண்டான மகிழ்ச்சிக்கு இணையாக என் வாழ்க்கையில் இதுகாறும் வேறொன்றைக்கண்டிலேன். அச்சுக்கூடத்திற்கு அந்தப் பதிப்பு வகையில் நான் பணம் கொடுக்கவேண்டியிருந்தது. அதைக் கொடுத்துவிட்டு மறுநாள் கும்பகோணம் போய்ச்சேர வேண்டியவன் நான்.

கையிலோ பணம் இல்லை. கையொப்பமிட்ட அன்பர்களிடம் பணம் வாங்கிக் கொடுக்கலாமென்று எண்ணினேன். கைப்பிரதியை, 'பைண்டு' செய்து சேலம் இராமசாமி முதலியாரிடம் சென்று காட்டினேன்; பணம் வேண்டியிருப்பதையும் தெரிவித்தேன். அரங்கநாத முதலியாரிடம் சென்றால் உதவி புரிவாரென்று அவர் கூறினர். அங்ஙனமே நான் முதலியாரைப் பார்க்கச் சென்றேன்; 'அவர் இந்தப் புத்தகத்தைக் கண்டால் அளவற்ற மகிழ்ச்சியை அடைவார்; நாம் பட்ட சிரமத்துக்கு அவருடைய சந்தோஷம் ஆறுதலை யளிக்கும்; அவர் வாக்களித்த பணத்தையும் பெறலாம்' என்ற எண்ணத்தோடு போனேன். அவர் வீட்டிற்குள் இருந்தார். நான் போனகாலம் பிற்பகல் நான்கு மணி. நான் வந்திருப்பதைச் சொல்லியனுப்பிய போது அவர், "நான் இப்பொழுது எம். ஏ., பரீட்சைக்குரிய வினப்பத்திரம் ஸித்தப்படுத்திக் கொண்டிருக்கிறேன். இன்று மாலை ஏழுமணிக்குள் முடித்து அனுப்பிவிட வேண்டும். பார்க்க அவகாசமில்லாமைக்கு வருத்த மடைகிறேன்; நாளைக் காலையில் வந்தால் பார்த்துப்பேசலாம்" என்று சொல்லி யனுப்பிவிட்டார். அவரைப் பார்த்துப் பேசவேண்டுமென்ற பெரு விருப்பத்தோடு சென்ற எனக்கு அது மனத்தளர்ச்சியை உண்டுபண்ணியது. அதனால் மிக்க

வருத்தமுற்று இராமசாமி முதலியாரிடம் சென்று அரங்கநாத முதலியாரைப் பார்க்க முடியாமையையும், மறுநாள் தங்க இயலாத வகை இருப்பதையும், பிறவற்றையும் தெரிவித்தேன். பிறகு ஒரு நண்பரிடம் வேண்டிய பணம் கடனாகப் பெற்று அச்சுக்கூடத்திற்குக் கொடுத்துவிட்டு அன்று இரவு புறப்பட்டு மறு தினம் கும்பகோணம் போய்ச் சேர்ந்தேன்.

அரங்கநாத முதலியாரைப் பாராமல் வந்தது என் மனத்தில் ஒரு குறையாகவே யிருந்தது. மறுநாட் காலையில் என் வரவை அவர் எதிர்பார்த்திருப்பாரென்றும் என்னைக் காணாமையால் வருத்தமுறக் கூடுமென்றும் எண்ணினேன். ஆதலின், கும்பகோணத்திற்குப் போன அன்றே அவருக்கு ஒரு கடிதம் எழுதத் தொடங்கினேன். அக்கடிதம் பாட்டுக்களாகவே எழுதும்படி நேர்ந்தது. அப்பாட்டுக்களின் கருத்து, 'நான் தங்களை நேரிற் கண்டு சிந்தாமணிப் புத்தகத்தைக் காட்டி ஸல்லாபம் செய்துவிட்டு வரலாமென்றெண்ணித் தங்கள் வீட்டிற்கு வந்தேன். என்னுடைய தௌர்ப்பாக்கியத்தால் தங்களைக் காணக்கூடவில்லை. ஆயினும் இராமசாமி முதலியாரவர்களிடத்தில் தங்கள்பாற் சொல்ல வேண்டியவற்றைத் தெரிவித்துவிட்டு இங்கே வந்தேன். தங்கள் திருமுகத்திலிருந்து வரும் வார்த்தைகளைக் கேட்கப்பெறுவிடினும், நாங்

கள் எழுதும் திருமுகத்திலுள்ள வார்த்தைகளை யேனும் காணச் செய்யவேண்டும்' என்பது. அக்கடிதம் வருமாறு:—

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

1. " குலத்தினாற் புலவர் மெச்சுங்
குணத்தினாற் பலநூ லாயும்
புலத்தினாற் றிசைய ளக்கும்
புகழினாற் புரையில் வாய்மை
வலத்தினா லடுத்தோர்த் தாங்கும்
வன்மையால் வண்மை மிக்க
நலத்தினாற் றிகழ ரங்க
நாதமா முகிலீ தோர்க.
[புலம் - அறிவு. புரை - குற்றம்.]

(ஷை வேறு)

2. " திருத்தகுமா முனிவனருள் தெள்ளியசிந்
தாமணியைத் திருவி லாதேன்
வருத்தமிக வாய்ந்தச்சிற் பதிப்பித்து
முடித்தபெரு மகிழ்வை யோதும்
கருத்துடையே னுகியந்த நூலையுங்கைக்
கொடுநின்னைக் காண வந்தும்
பெருத்தவபாக் கியமென்னைத் தடுத்தமையா
னினைக்காணப் பெற்றி லேனால்.

[திருத்தகுமாமுனிவன் - திருத்தக்கதேவர். திரு - செல்வம்.]

3. " ஆயினுநின் னன்புடைமை யெள்ளளவு மகலாதென்
றகத்திற் கொண்டே
தாயினுமன் பமைந்திலகு மிராமசா மிக்குரிசில்
தன்பாற் பின்னர்
மேயினனின் பால்விளம்ப வெண்ணியவெ லாமவன்பால்
விளம்பி வந்தேன்
நீயிரிரு வீர்களுமோர் மனமுடையீ ரென்பதனை
நினைந்தே மன்னே.

[ஓர்மனம் - ஒருமனம்; ஆராய்ச்சி செய்யும் மனம்.]

4. "இதுபொழுதி லெனக்கின்றி யமையாத தின்னதென
இயல்பா வோர்ந்த
மதுவிரவுந்தொடைப்புயத்துவள்ளலே வெளிப்படையா
வழங்க வென்னெஞ்
சதுதுணிவுற் றிலதானின் றிருமுகமாற் றங்கேட்கும்
ஆசை யேற்குக்
கதுமெனவே மகிழ்வுமிக நினதுதிரு முகமாற்றம்
காணச் செய்யே."

[திருமுகமாற்றம் - வாய்ச்சொல், கடிதவாக்கியம். கதுமென - விரைவாக.]

இரண்டு நாட்களுக்குப்பின் எனக்கு முதலியாரிட மிருந்து ஒரு கடிதமும் 50 ரூபாய் உண்டியலொன்றும் வந்தன. ஏழு பாடல்களும் ஒரு குறிப்பும் அக்கடிதத்தில் இருந்தன. அவை வருமாறு:

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

1. "பொறையினுற் பகையைத் தாக்கும் பொருள்படச்
சீடர்க் கோதும்
முறையினுன் மடமை நீக்கு முத்தமிழ்க்
கல்வித் தேர்ச்சி
நிறையினு லயம் போக்கும் நெடும்புகழ்
தன்பேர்க் கொத்த
துறையினு லெளிதி னுக்குந் தூயனிஃ
துவந்து காண்க.

[தாக்கும், நீக்கும், போக்கும், ஆக்குமென்னும் எச்சங்கள் தூயனென்பதைக் கொண்டு முடிந்தன.]

(ஷை வேறு)

2. "மகமாற்றந் தணருவப்ப மாற்றலர்தா மிகவடங்க
வானெ ரேத்த
நகமாற்றம் மில்லையுங்கை வில்லையுஞ்செய் நம்பாடி
மறவா நண்ப

அகமாற்ற மடைந்திலனீ துண்மையினி யையமொழி
அன்பி னுற்போன்
முகமாற்றங் கேட்டனையான் மொழியிணைத்துக்
கவிபாட முயன்றி லேனுல்.

[மகம் ஆற்று அந்தணர்-யாகம் செய்யும் பிராமணர். மாற்றலர்-பகைவர். நகமால் தம் இல்லையும் கைவில்லையும் செய்நம்பர்-தம்முடைய இருப்பிடத்தையும் கைவில்லையும் மலையாகச் செய்த சிவபெருமான்; ஆல் : அசை. அகமாற்றம்-மனவேற்றுமை.]

(கலிநிலைத்துறை)

3. "பாடுந் திறனில னுயினு மறுமொழி பாவலநீ
நாடுந் திறனிவை நவிலற் கொருவகை துணிவுற்றேன்
கூடுந் திறனறி புலமைக் கவிஞரொ டுறவாய்க்கூற்
ருடுந் திறனுறு செந்தமி ழமுதச் சுவையோர்ந்தே.

[கூற்றுடும் - பேசும்.]

(எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

4. "அன்றெனைக் காண நயந்தனை யைய
அமையமொன் வாமையா லமைவாய்ச்
சென்றனை நின்னைக் கண்டிலாக் குறைய
தென்னதே சிற்றறி வுடையேன்
ஒன்றல பலவாம் பிழைசெயத் தகுமே
உத்தம குணமொருங் குடையாய்
கன்றினைக் காராக் களியுறக் காக்கும்
கனிவொடு கமித்தனின் கடனே.

[காரா - கார்காலத்திற்குரிய பசு. கமித்தல்-பொறுத்தல்.]

(வெண்பா)

5. "விரும்பார்க் கினியா னெனக்குறிபேர் மேலோன்
கரும்பார் சுவையின்பங் கண்டான்—அரும்பாகச்
சிந்தா மணியின் சிறப்பனைத்து மோர்ந்ததனை
நந்தா மணியா நயந்து.

[விரும்பார்க்கு இனியான் - தன்னை விரும்பாதவர்க்கு இனிமை தாராதவன்; இஃது எதிர்மறைமுகத்தால், விரும்புகின்றவர்க்கு இனிப்பவனென்னும் பொருளை

யுடையதாய் நச்சினார்க்கினியர் என்னும் உரையாசிரியர் பெயரைக் குறித்தது. அரும்பாகம் - அரிய செய்யுட் பாகங்களையுடைய.]

(கொச்சகக் கலிப்பா)

6. "மருந்தனசீ வகசிந்தா மணிக்குரையை
மாண்புலவர்
விருந்தெனக்கொள் வகையளித்தாய் வேறியம்பல்
வேண்டுமதோ
பெருந்திமிரம் போக்குவித்தாய் பேரறிவி
னாதவனைப்
பொருந்தீரம் பெற்றவனையே புத்தகமும்
பெற்றேனே.

[மருந்து - அமிர்தம். திமிரம் - இருள், அறியாமை. ஆதவனை - சூரியனை.]

(வெண்பா)

7. "மருந்தன சிந்தா மணியுரையின் மாண்பை
விருந்தெனக் கற்றோர் வியக்கப்—புரிந்தோய்நீ
பட்டபாட் டுக்குப் பகர்ந்தபடி யஞ்சல்வழி
விட்டபாட் டுக்குமா மே.

[பட்டபாடு - பட்ட சிரமம். பகர்ந்தபடி - நான் முன்பு வாக்களித்தபடி. அஞ்சல் - தபால். விட்ட பாட்டு- நீங்கள் அனுப்பிய செய்யுள்.]

"பிரமகுல திலகராகிய ம-ா-ா-ஸ்ரீ வே. சாமிநாதையர் அவர்களுக்கு விஞ்ஞாபனம்.

"என்னுடைய மூத்தகுமாரனாகிய சி. கல்யாண சுந்தரம் நானியற்றிய பொருளிலாப் பாட்டுக்குத் தாங்கள் பொருள்படவும் பாடுறவும் உரையிட வேண்டுமென விரும்புகிறான். ஏழையாகிய யானீட்டிய பொன் அவனுக்குத் தான் தேடாத பொன்னன்றோ! தான்தேடாத பொன்னுக்கு மாற்றுமில்லை, உரையுமில்லை யெனக் கூறியவாறுமோ அல்லவோ அறியேன்.

"ம-ா-ா-ஸ்ரீ சேலம் இராமசாமி முதலியாருக்கு அவர் கேட்டபடி ஐம்பது ரூபாய் கொடுத்துவிட்டேன்.

இப்போது Bank of Madras-இல் மாற்றத்தக்க Cheque மூலமாய்த் தங்களுக்கு ஐம்பது ரூபாய் அனுப்பியிருக்கிறேன்.

"இப்படி நான் கொடுத்த நூறுரூபாயும் தங்களுடைய புலமையையாவது தாங்கள் எடுத்துக்கொண்ட உழைப்பையாவது அளக்கும் மாண்புடையதன்றெனினும் என்னுடைய சக்திக்கியன்றதென மகிழ்ந்து கொள்வீர்களாக.

அன்பன்

பூ. அரங்கநாதன்."

இக்கடிதத்தைப் படிக்கும் அன்பர்கள் முதலியாருடைய தமிழ் அறிவையும், தமிழறிவைப் பாராட்டும் குணவிசேடத்தையும், அன்புக்கு வசமாகும் திறத்தையும் அறியலாம். இத்தகைய குணக்குன்றத்தோடு பழகிய நாட்களை நான் எங்ஙனம் மறக்க முடியும்! தாம் சிறிதளவு தமிழறிவு பெற்றமாத்திரத்தில் தமக்குள்ள செல்வம், அதிகாரம் முதலிய பிற சிறப்புக்களால் தமிழ்ப் பெரும் புலவர்களை இரவலர்களாகவும் ஊழியர்களாகவும் எண்ணி யொழுகுவாரையும் இவ்வுலகம் கண்டிருக்கிறது; பெருக்கத்து வேண்டும் பணிவையே பேரணிகலனாகப் பூண்ட அரங்கநாத முதலியாரைப் போன்ற குணமணிகளையும் கண்டிருக்கிறது. முதலியாரைப் போன்ற பெருந்தகையினர் உலகுக்கு வழிகாட்டும் தலைமையை யுடையரானமைக்குக் காரணம் அவர்களுடைய மாசற்ற எண்மையும் கைம்மாறு கருதாத பேரன்புமே யல்லவா?

இந்தக் கடிதம் வந்தவுடன் என். மனநிலை

இன்னபடி இருந்ததென்று எழுதிக் காட்டுதல் அரிது. முதலியாரைக் காணாத குறை கடிதம் கண்டவுடன் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது; அவருடைய அன்பு என் உள்ளத்தை விழுங்கிநின்றது. அதனால் உடனே ஒரு பாடற் கடிதத்தை அவருக்கு எழுதி யனுப்பினேன்.

உண்மையை யுணர்ந்து பாராட்டி ஊக்கமளித்து அன்பு செய்யும் பெருந்தகையினருக்கு முன்பு கல்வியறிவு தானே ஒளிவிடும்; எதையும் கண்டித்து அடக்கும் தகையாளருக்குமுன் மிக்க கல்வியறிவுகூட இருந்த இடந்தெரியாமல் ஓடி ஒளித்துக்கொள்ளும். அரங்கநாத முதலியாருடைய கடிதம் என் உள்ளத்தைக் கிளரச் செய்தது; அவருடைய அன்பும் ஆதரவும் என்னை யறியாமல் ஊக்கத்தை உண்டாக்கின. அதன் பயனே பின்வரும் கடிதம் :

(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

1. பூமேவு திருமகளும் புகலாங்கி லேயமொழிப்
பூவை யுஞ்சீர்ப்
பாமேவு தமிழ்மகளும் புகழ்மகளுங் கொடைமகளும்
பயன்பெற் றோங்கத்
தாமேவி நடமாடு மரங்கமதாய்த் தான்விளங்கல்
சாற்றி யாங்கு
மாமேவு மெழிலரங்க நாதப்பேர் கொளுமண்ணல்
மகிழ்ந்து காண்க.

2. நித்தியநின் மலநிருவி காரநிரஞ் சனசிவத்தின்
நேய மென்றும்
மெத்தியசிந் தனையினொடுஞ் சத்தியவாக் குங்கொண்ட
விறலோய் நின்றன்

கத்தியமும் பத்தியங்க ளேழுநிதங் கண்டுமிகக்
களிக்கின் றேனப்
பத்தியங்க ணிவைப்பாராத் துயரமெனு மொருநோயைப்
பறித்த மன்னே.

[மெத்திய-மிக்க. கத்தியம்-வசனம். பத்தியம்-பாட்டு, வைத்தியர்கூறும் பத்தியமென்பது தொனி.]

3. தேனென்கோ பாலென்கோ தேனும்பா லுங்கலந்த
தெளிவே யென்கோ
வானென்கோ வுலகமரு மமுதென்கோ கரும்பென்கோ
வயங்கு கண்டு
தானென்கோ துயர்க்கடலைக் கடந்துசெல வெழுபுணை
சாற்று கோபூ [யாச்
மானென்கோ புகழரங்க நாதமுகி னின்கவியின்
மாண்பை மன்னே.

[என்கோ-என்பேனே. வான் என் கோ உலகு அமரும் அமுது-தேவலோகம் என்னப்படும் தலைமை யுடைய உலகத்தில் தங்கும் அமுதம்; கோ-தலைமை. கண்டு-கற்கண்டு. புணை-தெப்பம். பூமான் என் கோ-அரசனென் னப்படும் தலைவன்.]

(கலிநிலைத்துறை)

4. பாடுந் திறனில னுயினு மெனநவில் பாவொன்றே
பாடுந் திறனுள யெனவே நன்கு பரிந்தோதும்
வாடும் பயிர்மலி மழைபெற் றுங்கு மனத்துன்பால்
வாடுந் தமியனுண் மகிழுத் தயைசெய்து மகிழ்கோவே.

(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

5. பொருளிலாப் பாட்டென்று புகன்றவைநீ நவின்றசுவை
பொழியும் பாவைப்
பொருளிலாப் பாடல்களென் பாடல்பொரு ளுளபாடல்
புகழ்நின் பாடல்
பொருளுடனே விரவியஞ்சல் வழிவந்த செயலொன்றே
பொருந்து சான்றும்
பொருளிலா வெவையுமொரு பொருளாக்கோ ணயகுசு
புகழ்க்கோ மானே. [ணப்

[பொருள்-நல்ல கருத்து, பணம். அஞ்சல்-தபால்.]

6. மொழியிணைத்துக் கவிபாட முயன்றிலே னெனநவின்ற
மொழிதான் மெய்யே
மொழியிணைத்துக் கவிபாட முயல்லெமர் செயலது
முயலா தான்ற [போல்
மொழியிணைத்துக் கவிபாடி மகிழ்வித்தல் நினதியற்கை
முறைமை யாமால்
மொழியிணைத்துக் கவிபாடு மறிஞர்கள்பா மாலையணி
மொய்ம்பி னுனே.

[வார்த்தைகளை வருத்தப்பட்டுச் சேர்த்துக் கவிபாடாமல் இயல்பாக வேண்டிய வார்த்தைகள் வேண்டியவாறு அமையக் கவிபாடும் ஆற்றலுள்ளாயென்பது கருத்து. எமர்-எம்மவர். ஆன்றமொழி-தாமாக வந்து அமைந்த மொழிகள். மொய்ம்பு-தோள்.]

(வெண்பா)

7. பட்டபாட் டுக்குப் பகர்ந்தபடி யஞ்சல்வழி
விட்டபாட் டிற்குமா மேயென்ற—மட்டில்சுவை
வெண்பா கரும்பா வெனவினித்து மேவியதால்
நண்பாவென் சொற்றிடுவேன் நான்.

[வெண்பா, கரும்பா: முரண்; கரும்பா என இனித்து-இது கரும்புதானோ என்று சொல்லும்படி இனிமை தந்து.]

(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

8. அகமகிழ்ந்து விடுத்தவெழு பாடல்மகிழ் வெழுபாடல்
ஆன வன்றிச்
சகமகிழும் பிறர்கவியைத் தாழ்த்திமிசை யெழுபாட்ல்
தாமாய் மேவும் [பியான்
மிகமகிழ்ந்தவ் வெழுபாடல் தமையெண்ணு பெண்ணு
விளம்ப லாலே
தகமகிழ்ந்தேன் பாடல்களெண் பாடல்களா குபுநின்
சார்ந்த மன்னே. [வனச்

[மிசை-மேலே. எண்ணுபு எண்ணுபு - எண்ணி யெண்ணி. எண் பாடல்கள்-எண்ணும் பாடல்கள், எட்டுப் பாடல்கள்.]

## பகலும் இரவும்

பத்துப்பாட்டை அச்சிடுவதற்காக நான் சிலகாலம் சென்னையில் தங்கியிருந்தேன். திருமானூர் ஸ்ரீ கிருஷ்ணையரென்பவர் எனக்கு உதவியாக உடனிருந்தார். இருவரும் ஒருநாள் காலை 8-மணிக்கு அரங்கநாத முதலியார் வீட்டுக்குச் சென்றோம். முதலியாரோடு நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தேன். பேச்சுமுழுவதும் தமிழின் நயத்தைப் பற்றியதும் பத்துப்பாட்டின் பெருமையைப் பற்றியதுமே. தமிழ்ச் செய்யுட்கள் பலவற்றைச் சொல்லிச் சில நயங்களை உரைத்ததோடு இங்கிலீஷிலும் அப்படியே உள்ளனவென்று எடுத்துக் காட்டினர். அப்பொழுது பலர் உடனிருந்தார்கள். இப்படி நிகழ்ந்த பேச்சின் சுவையில் நான் பசியையும் மறந்தேன். முதலியாரும் உடன் இருந்தவர்களும் உண்ணச் செல்லவில்லை. பிற்பகல் 3-மணி வரையிற் பேசிக்கொண்டிருந்தோம்; பொழுது போனதே தெரியவில்லை. அப்பால் விடை பெற்றுக்கொண்டு நானும் கிருஷ்ணையரும் சென்றோம்.

அன்று இரவு கிருஷ்ணையரையும் உடன் அழைத்துக்கொண்டு எனக்குத் தெரிந்தவராகிய ஒரு கனவானிடம் சென்றேன். அக்கன

வானைக் கண்டு க்ஷேமம் விசாரித்த பிறகு பத்துப் பாட்டைப்பற்றி, "இது மிகவும் பழைய காலத்து நூல். பல அரிய விஷயங்களையுடையது; இப்போது இதனை அச்சிடுவதற்காக இங்கே வந்திருக்கின்றேன்" என்று சொன்னேன். அவற்றை அவர் காதில் வாங்கிக் கொள்ளாமல், "இதெல்லாம் யாருக்குப் பிரயோசனம்? ஒருவருக்கும் புரியாத இந்தப் பாட்டு எதற்கு? பாட்டென்றால் எளியதாக இருக்கவேண்டும். ஒரு பாட்டே இவ்வளவு நீளமாக இருக்கிறதே; யார் படிக்கப்போகிறார்கள்! நீங்கள் இந்தப் புஸ்தகத்தைப் 'புரோஸ்' (Prose) ஆக எழுதிவிடுங்கள். பத்திரிகைகளிற் போட்டு விடலாம். வசன நடையில் இருப்பது தான் புஸ்தகம். இதை அச்சிட்டு வீணே கஷ்டப்பட வேண்டாம்" என்றார். மிகவும் சந்தோஷிப்பாரென்று எவ்வளவோ ஆவலாக இருந்த நான் அதன் அருமையை எள்ளளவும் அறியாமல் இங்ஙனம் அவர் கூறவே, விரைவிற் பேச்சை முடித்துக்கொண்டு உடனே திரும்பி விட்டேன்.

தெருப்பக்கம் வந்ததும் கிருஷ்ணையரிடம், "பகலில் மூன்றுமணி வரையில் முதலியார் வீட்டில் பட்டினியோடு பேசினபோது என்ன சந்தோஷமாக இருந்தது! இங்கே எப்படி இருக்கிறது! பகலுக்கும் இரவுக்கும் எத்தனை வித்தியாஸமோ அத்தனை வித்தியாஸம் இருக்

கிறதல்லவா? ஒரே நாளில் இந்த இருவகை அனுபவத்தையும் பெற்றோம்'' என்றேன். 'நிழலருமை வெயிலில் தெரியும்' என்பதுபோல, முதலியாருடைய அருமையானது ரஸிகத் தன்மை யில்லாதவர்களுடன் பழகும்போ தெல்லாம் மிகவும் நன்ருகப் புலப்பட்டு வந்தது.

### கச்சிக் கலம்பகம்

முதலியார் செய்யுள் இயற்றும் பழக்கத்தை மேன்மேலும் விருத்தி செய்துகொண்டு வந்தார். பிரபந்தங்களைப் படிக்கும்போது அவற்றின் சொற்பொருளமைதிகளையும் நயங்களையும் கவனிப்பார். அதனல் தாமும் ஏதேனும் ஒரு பிரபந்தம் இயற்ற வேண்டுமென்னும் ஆவல் அவருக்கு உண்டாயிற்று. அக்காலத்தில் பிரஸிடென்ஸி காலேஜில் தமிழ்ப்பண்டிதராக இருந்த தொழுவூர் வேலாயுத முதலியாருடைய பழக்கத்தால் அவருக்குச் செய்யுள் செய்யும் ஆற்றல் நன்ருக உண்டாகி விருத்தியாயிற்று. இருவரும் ஒரு விஷயத்தைக் குறித்துப் போட்டி போட்டுக்கொண்டு பாடுவார்கள். வேலாயுத முதலியாரை அவர் ஒரு கலம்பகம் பாட வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அப்படியே திருவொற்றியூர்ப் படம்பக்க நாதரையும், கச்சி ஏகாம்பர நாதரையும் பாட்டுடைத் தலைவர்களாக வைத்து 'மகிழ்மாக் கலம்பகம்' என்ற ஒரு நூலை அப்பண்டிதர் இயற்றினர். காயாறு ஞானசுந்தரைய ரென்ற வீரசைவக் கவிஞர்

அந்நூலுக்கு அளித்த சிறப்புப் பாயிரத்தால் இதனை யறியலாம். அச்செய்யுள் வருமாறு:

(அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்)

"பேசுமறைப் பொருளன்பர்க் கின்பூட்ட மாமகிழ்க்கீழ்ப்
பிரியா வாக்கம்
ஆசுகவி பொருந்தவருந் தமிழ்மாலை யணிகென்ன
வறிவாற் சான்ற
வீசுபுகழ்ப் பூண்டிமகி ழரங்கநா தன்சொல்ல
விளம்பி னானல்
மாசிலருட் குரவன்வழி பொழுகுவே லாயுதனும்
வாய்மை யோனே."

அந்நூல் 1887-ஆம் வருஷம் அச்சிடப் பட்டது. அதுமுதல் அரங்கநாத முதலியாருக்குத் தாமும் ஒரு கலம்பகம் பாடவேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. அது முதிர முதிர ஸ்ரீ காஞ்சீபுரம் ஏகாம்பரநாதரையே தலைவராக வைத்துக் கச்சிக்கலம்பகம் என்னும் நூலைப் பாடி முடித்தார்.

நான் விடுமுறைக் காலங்களில் கும்பகோணத்திலிருந்து சென்னைக்கு வருவேன். அந்தக் காலத்தில் பத்துப்பாட்டு அச்சிடப்பட்டு வந்தது. சென்னைக்கு வந்திருந்த காலங்களில் முதலியாரவர்களைக் காணாத நாள் இராது.

பல துறைகளிற் செல்வாக்கு மிக்க முதலியாரைப் பார்க்க வருபவர்கள் பலர். எவ்வளவோ உயர்ந்த பல பிரபுக்களும் வித்துவான்களும் வருவார்கள். அவரவர்கள் தங்கள் தங்கள் விலாஸம் அச்சடித்த சீட்டை அனுப்பித்

தெரிவித்துச் சென்று பார்த்து வருவார்கள். சில சமயங்களில் பார்க்க முடியாமல் அவர்கள் திரும்பிவிடுவதும் உண்டு. முதலியாரவர்களுடைய பலவேலைகளுக்கிடையே பிறர் சென்று அவர்காலத்தை வீணாக்குதற்கு அஞ்சுவார்கள். இந்த நிலையில், நான் போகும்போது மாத்திரம் சீட்டனுப்பாமலே எந்தச் சமயமும் வரலாமென்று அவர் சொல்லிவிட்டார். சிந்தாமணிப் புத்தகத்தைக் கொடுக்க வெண்ணி நான் சென்றகாலத்தில் பாராத குறைக்குப் பரிகாரம் செய்வார்போல இங்ஙனம் அவர் செய்தது எனக்கு வியப்பைத் தந்தது. நான் சென்ற காலங்களில் ஒரு தடையும் இராது. தமிழில் அவருக்கிருந்த பேரபிமானமே இதற்குக் காரணமாகும்.

முதலியார் கச்சிக் கலம்பகத்தை இயற்றி வந்த காலத்தில் நான் சில சில பாடல்களைக் கேட்டதுண்டு. எனக்குத் தெரிந்த சில கருத்துக்களையும் தெரிவிப்பேன். அவர் மிக மகிழ்ந்து உபயோகித்துக் கொள்வார். பத்துப்பாட்டு அச்சிட்டு முடிந்தவுடன் நான் கும்பகோணம் சென்றேன்.

கச்சிக்கலம்பகம் முடிவுபெற்று 1889-ஆம் வருஷம் அச்சிடப்பெற்றது. சென்னையில் வசித்துவந்த பல அன்பர்கள் விரும்பியபடி தொண்டைமண்டலம் துளுவ வேளாளர் உயர்தரக் கலாசாலையில் ஒரு பெரிய சபையில்

அதன் அரங்கேற்றம் ஆரம்பமாயிற்று. கிறிஸ்டியன் காலேஜில் தமிழ்ப்பண்டிதராக இருந்த சின்னசாமி பிள்ளை முதன்முதலில் கலம்பகத்துக்கு உரை கூறிப் பிரசங்கம் செய்தார்; தண்டலம் பாலசுந்தர முதலியாரும், பச்சையப்பன் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் முருகேச முதலியாரும் பின்பு அரங்கேற்றத்தை நடத்தி வந்தார்கள். அங்ஙனம் கலம்பகம் அரங்கேறி வருவதைக் கும்பகோணத்திலிருந்த எனக்கு அரங்கநாத முதலியார் ஒரு கடித மூலமாக அறிவித்து, "நீங்கள் வந்து இதனை அரங்கேற்ற வேண்டுமென்பது இங்குள்ள பலருடைய விருப்பம்; நானும் அப்படியே விரும்புகின்றேன்" என்று அன்புடன் எழுதி யிருந்தார். மெய்யன்பராகிய அவர் விரும்பும்போது மறுத்தலும் கூடுமோ? அவர் விருப்பத்தின்படியே சென்னை வந்து சேர்ந்தேன்.

சென்னையிலுள்ள பிரபுக்களும் தக்க கனவான்களும் பண்டிதர்களும் பிற அறிஞர்களும் நாள்தோறும் அரங்கேற்றத்திற்கு வந்து கூடுவார்கள். நகரத்திலுள்ள முக்கியமானவர்களை ஒருங்கே பார்க்க வேண்டுமென்றால் அந்தக் கூட்டத்திலே பார்க்கலாம். நூற்றுக்கணக்கான பேர்கள் கூடியிருப்பார்கள்.

ஒவ்வொரு நாளும் பிற்பகலில் 4 அல்லது 5 மணிக்கு அப்பாடசாலையின் வாயிலில் முதலியாருடைய வரவை எதிர்பார்த்துப் பலர் நின்று

கொண்டிருப்பார்கள். முதலியார் என்னை அழைத்துக் கொண்டு வருவார்; அங்குள்ள முக்கியமான கனவான்களை எனக்குப் பழக்கம் செய்து வைப்பார். எனக்கும் அவர்களுக்கும் பழக்கம் உண்டாவதற்கு வேறு வாய்ப்பு ஒன்றும் இல்லை; கலம்பகப் பிரசங்கத்தினாலே அவர்களுடைய பழக்கங்கள் எனக்கு உண்டாயின. முதலியாரிடம் அவர்களுக்கு இருந்த பெருமதிப்பினால் அவருடைய சார்பு பெற்ற என்னிடமும் அவர்களுக்கு ஒரு வகையான அன்பு உண்டாயிற்று. நாள்தோறும் அன்பர் சேலம் இராமசாமி முதலியாரும் வந்து கேட்பார்.

பிரசங்கம் நடைபெறுகையில் ஒவ்வொருவரும் கலம்பகத்தின் பிரதி ஒன்றை வைத்துப் பார்த்துக்கொண்டு வருவார். ஒருபக்கம் முடிந்து மறுபக்கம் தொடங்கும்போது அந்தப் பக்கத்தை அவ்வளவு பேர்களும் திருப்புவார்கள்; காகிதம் மெல்லிதானாலும் சலசலவென்று ஓர் ஓசை கேட்கும்; கூட்டத்தின் மிகுதியை அந்த ஓசையே புலப்படுத்தும்.

ஒரு நாளுக்கு ஒரு பாடலோ அல்லது ஒரு பாடலின் ஒரு பகுதியோதான் நடைபெறும். எனக்குத் தெரிந்த பல கலம்பகச் செய்யுட்களையும் பிறநூற் பாடல்களையும் நான் நினைத்தற்கு அப்பிரசங்கம் பேருதவியாக இருந்தது. கச்சிக்கலம்பகத்தி லுள்ள கருத்துக்களோடு

ஒத்த பகுதிகளை வேறு நூல்களிலிருந்து எடுத்துக் காட்டும்பொழுது அரங்கநாத முதலியார் மிக்க இன்பத்தை அடைவார்; கூட்டத்திலுள்ளவர் களும் மகிழ்வார்கள்; அவ்விரண்டும் சேர்ந்து எனக்குப் பின்னும் ஊக்கத்தை உண்டாக்கும். ஒரு நாளைக்கு மூன்றுமணி நேரம் பிரசங்கம் நடைபெறும்.

அக்காலத்தில் நான் தெருவில் போய்க் கொண்டிருந்தால் திடீரென்று யாரேனும் ஒருவர் வந்து அஞ்சலி செய்வார்; அவரை நான் அறியாவிடினும் அவர் அன்புடனும் முகமலர்ச்சியுடனும், "கச்சிக்கலம்பகம் பிரசங்கம் செய்யும் ஐயாவல்லவா!" என்று சொல்லிப் பாராட்டுவார். இப்படியே பல பேருடைய பாராட்டுக்களை நான் அடைந்தேன். இவ்வளவுக்கும் காரணம் அரங்கநாதமுதலியார் என்பால் வைத்துள்ள அன்பேயென்பதை நினைக்கும்போது முதலியாருடைய கம்பீரமான குணத்தில் என் உள்ளம் மூழ்கி உருகும்.

கலம்பகத்தின் 3-ஆம் செய்யுளிலிருந்து நான் அரங்கேற்றத்தைத் தொடங்கினேன். அதுகாறும் சென்னையில் கூட்டத்திற் பேசியவனல்லேனாதலின் என்னுடைய பிரசங்கம் வந்தவர்களுக்கு உவப்பாக இருக்குமோ இராதோவென்ற சந்தேகம் எனக்கு இருந்தது. மூன்றும் செய்யுளுக்கு உரை சொல்லி வருகையில்,

அவம் புரிவார் செயலை அழித்து உவக்கும் தாண்டவர்"

என்ற பகுதிக்கு, தீங்கு செய்வார்களது செயல்களைப் போக்கி மகிழும் நடராசப் பெருமானென்று ஒருபொருள் கூறிவிட்டு, "அவம் புரிவார் - சைவசமயத்துக்குத் தீங்கு புரிவாராகிய சைனர்களுக்கு உரியதாகிய, செயலை - அருகக்கடவுள் வீற்றிருக்கும் அசோகமரத்தை, அழித்து - அச்சைனர் தோல்வியுற்றமையால் அழியச் செய்து, உவக்கும் தாண்டவரென்றும் பொருள் சொல்லலாம். ஞானசம்பந்த மூர்த்தியின் மூலமாகப் பாண்டிநாட்டுச் சமணர்களுடைய பலம் கெடும்படி செய்தது பரமேசுவரனுடைய திருவருளாதலால் இங்ஙனம் கூறப்பட்டது" என்றேன். கூட்டத்திலுள்ள யாவரும் சந்தோஷ ஆரவாரம் செய்தார்கள். அந்த ஆரவாரம் எனக்கிருந்த ஐயத்தைப் போக்கித் துணிவை உண்டாக்கிற்று. அதன் பிறகு ஊக்கம் பெற்றுப் பிரசங்கம் செய்து வரலானேன்.

கலம்பகத்தின் 8-ஆம் பாடலாகிய,

(கட்டளைக் கலித்துறை)

"சுகந்தரு கச்சிப் பதிவந் தடியார் துயர்களைவோர்
நகந்தரு மெல்லியற் காம விழியிரு நாழிநெல்லால்
உகந்தரு முப்பத் திரண்டற மோங்கச்செ யுத்தமர்பா
தகந்தரு துன்பொழிப் பார்பணி வீரவர் தாண்மலரே"

என்பதற்கு உரை கூறுகையில், "உலகத்திலுள்ளாரை நோக்கி அறிவுறுத்தும் இந்தச் செய்யுள், செய்யுட்களில் ஒருவகையாகிய கட்ட

ளைக் கலித்துறையாக அமைந்தது. யாப்பால் கட்டளைக் கலித்துறையாக அமைந்ததோடு, இன்ன வண்ணம் செய்கவென்று கட்டளையிடு வதனாற் பொருளாலும் கட்டளைக் கலித்துறை யாயிற்று" என்றேன். அதனைக் கேட்ட முதலி யாரும் பிறரும் மகிழ்ந்தனர். வீட்டிற்கு வந்த காலத்தில், "என்னுடைய கலம்பகத்துக்கு உங் கள் பிரசங்கம் பெருமதிப்பை உண்டாக்குகின் றது" என்றார் முதலியார். நான், "உங்களுடைய நூலுக்கு உரை கூற வாய்த்ததே எனக்குப் பெரும்பேறல்லவா? அதிலுள்ள நயங்களை ஏதோ எனக்குத் தெரிந்த அளவிற் சொல்லு கின்றேன். உங்களுடைய அன்பு எனக்கு ஊக் கத்தை உண்டாக்குகின்றது. இவ்வளவு தக்க மனிதர்கள் கூடும் கூட்டத்தை நான் வலிய அழைத்தாலும் கூட்டமுடியுமா? என் பேச் சைப் பொறுமையாக இருந்து கேட்பார்களா? எல்லாம் உங்களுடைய சார்பின் பலன்" என்றேன்.

மற்றொருநாள், "என் கல்லனைய மனத் தூடுன் குடும்பத்தோடு மருவ வொரு தடையு மில்லை" என்ற பகுதியைப் பிரசங்கம் செய் கையில், "என் என்பதற்குச் சிறிதேனும் அறி வும் பற்றுக்கோடும் இல்லாது வருந்தும் என் னுடையவென்றும், உன் என்பதற்குப் பரம கருணாநிதியாகிய நின்னென்றும் பொருள் கொள்ளலாம். 'அந்தாமரையன்னமே நின்னை

யானகன்றூற்றுவனே' என்ற திருக்கோவை யாரின் உரையில் பேராசிரியர் நின்னை என்பதற்கு என் உயிரினும் சிறந்த நின்னையென்றும், யானென்பதற்கு இருதலைப் புள்ளின் ஓருயிரேனுகிய யானென்றும் அச்சொற்களால் விளங்கினவென்று பொருளெழுதி யிருப்பதைப் பின்பற்றி இங்ஙனம் கொள்ள நேர்ந்தது. இப்படியே கம்பர் தசரதன் இராமனது பிரிவாற்றாது கூறும் கூற்றாக,

'எற்றே பகர்வே னினியா னென்னே யுன்னிற் பிரிய
வற்றே யுலக மெனினும் வானே வருந்தா தெனினும்
பொற்றே ரரசே தமியேன் புகழே யுயிரே யுன்னைப் [ன்'
பெற்றே னருமை யறிவேன் பிழையேன் பிழையே னென்று

என்னும் பாட்டில் உன்னை என்பதை என் உயிரினும் சிறந்த உன்னையென்றும், பெற்றேன் என்பதைப் பல ஆண்டுகள் தவஞ் செய்து பெற்றேனுகிய யானென்றும் பொருள் பட அமைத்திருக்கின்றூர்'' என்றேன். முதலியார் அந்தக் கம்பராமாயணப் பாட்டில் மிக ஈடுபட்டார்.

பின்பு, பி. ஏ. பரீக்ஷைக்கு அந்த இராமாயணப்பாட்டுள்ள பகுதி பாடமாக வந்தது. அப்போது அதனைப் பதிப்பித்தவருள் ஒருவரும் பிரஸிடென்ஸி காலேஜில் தமிழ்ப்பண்டிதராக இருந்தவரும் ஆகிய ஸ்ரீநிவாஸாசாரியாரென்பவர் முதலியாரிடம் அப்புஸ்தகத்தைக் கொடுத்தார். முதலியார் அதைப் பெற்று இந்தப் பாட்

டைப் பார்த்தார்; உடனே அவரை நோக்கி, "நீங்கள் ஒரு தப்புச் செய்துவிட்டீர்கள்!" என்ருர். அவர் திடுக்கிட்டார்; "தெரிந்த வரையில் சிரமப்பட்டுக் கவனித்துத்தானே பதிப்பித்தோம். என்ன பிழை இருக்கிறது?" என்று பயந்துகொண்டு அவர் கேட்டார். "உங்களுக்கு இதைப் பதிப்பிக்கத் தெரியவில்லை; இந்தப் பாட்டை இப்படியா பதிப்பிப்பது?" என்ருர் முதலியார்.

"ஏன்? சரியாகத்தானே சீர்பிரித்துப் பதிப்பித்திருக்கிறோம்." என்ருர் அவர்.

"இதன்பாலுள்ள 'உன்னை', 'பெற்றேன்' என்ற சொற்களைத் தங்க எழுத்திலல்லவா பதிப்பித்திருக்க வேண்டும்?" என்ருர் முதலியார்.

அப்பொழுதுதான் அவர் முதலியாருடைய கருத்தை யறிந்து விம்மிதமுற்ருர்.

கலம்பகத்தின் 10-ஆம் செய்யுள் 'வலைச்சியார்' என்னும் தலைப்பையுடையது. மீன் விற்கும் ஒரு வலைச்சியைப் பார்த்து ஓரிளைஞன் கூறுவதாக அமைந்தது அது. அந்தப் பாட்டில் பலவகையான மீன்களின் பெயர்களும் அவற்ேறாடு சம்பந்தமுடைய சொற்களும் தொனியில் அமைந்துள்ளன. அந்தப் பாட்டுக்கு உரை கூறுகையில், "இப்படி ஏதேனும் ஒருவகைப் பெயர்கள் தோற்றும்படி செய்யுள் செய்வது புலவர்கள் வழக்கம். தமிழ்ப் பிரபந்தங்களிலும்

பிற நூல்களிலும் இத்தகைய செய்யுட்கள் பல உண்டு" என்று சொல்லிவிட்டுக் கந்தபுராணம், சேது புராணம் முதலியவற்றிலிருந்து சில செய்யுட்களை எடுத்துக் காட்டினேன். அவற்றுள் பின்வரும் அழகர்கலம்பகச் செய்யுளும் ஒன்று:

'அத்தியின் மத்தியி லேவிளங் காலிலம் மாமகிழ
நித்திரை கொள்ளுந் தமாலத் துருவ னிவனென்பதே
சத்திய மென்னப் புளிக்கீழ் மகிழுந் தமிழ்க்கரசே
நித்திய மாலழ கன்றமிழ் கூறமுன் னின்றருளே.''

இதைச் சொல்லிவிட்டு, "இது நம்மாழ்வார் விஷயமானது. இந்தப் பாட்டில் நம்மாழ்வார் புளியமரத்தின்கீழ் எழுந்தருளியிருப்பதை நினைந்து வேறு மரங்களின் பெயர்களும் சொல்லளவில் தோற்றும்படி ஆசிரியர் அமைத்திருக்கின்றார். இப்பாட்டில் அத்தி, ஆல், மா, மகிழ், தமாலம், புளி, அரசு என்னும் மரப்பெயர்கள் உள்ளன. இவற்றில் ஆல், தமாலம், புளி என்பன அம்மரப்பெயர்களையே சுட்டுகின்றன. மற்றவை மரமல்லாத வேறு பொருள்களைக் குறிப்பன. இவை யாவும் சேர்ந்து இந்தப்பாட்டில் பல மரங்களின் பெயர்கள் அமைந்ததுபோலத் தோற்றச் செய்கின்றன. பொருளால் வேறுபட்டாலும் சொல்லமைதியால் ஓரினப் பெயர்களைப்போலத் தோற்றும்படி அமைக்கும் இந்த அரிய திறமை முதலியாரவர்களிடத்திலும் இருக்கின்றது" என்று சொல்லி வந்தேன்.

அந்தக் கூட்டத்தில் வந்திருந்த யாவரும் தமிழ்மொழியின் அணியமைதியைப் பற்றி யறிந்து மகிழ்ந்துகொண்டிருந்தார்கள். ஸம்ஸ்கிருத வித்துவானும், பெரிய உத்தியோகஸ்தரும், ஆங்கிலப் பட்டம் பெற்றவரும், உயர்ந்த சம்பளம் வாங்கிவந்தவருமாகிய ஒருவர் அரங்கநாத முதலியாருக்கு அருகில் இருந்தார். எல்லோரும் நான் கூறிய அழகர் கலம்பகச் செய்யுளின் நயத்தைக் கேட்டு மகிழ்ந்துகொண்டிருக்கையில் அவர்மட்டும் வேறு யோசனை செய்து கொண்டிருந்தார் போலும்! ஏதேனும் ஒரு செய்யுளின் நயத்தை ஒருவர் கூறுகையில் கேட்பவர்களிற் சிலர் அந்நயத்தை அறிந்து பின்பு ஆராய்ச்சி செய்வதை விட்டுவிட்டு, அவர் கூறுவதையே கவனியாமல், 'இதில் இன்னும் அதிகமாக என்ன நயம் கூறலாம்? இவர் சொல்வதில் என்ன குற்றம் இருக்கின்றது?' என்று அப்போதே யோசிப்பது வழக்கம். இந்த வகையைச் சேர்ந்த அந்தக் கனவான், நான் அழகர் கலம்பகச் செய்யுளுக்கு உரை முதலியன கூறி முடித்தவுடன், "ஐயா, நீங்கள் ஒன்றைச் சொல்லத் தவறிவிட்டீர்கள்" என்றார். "அப்படியா! தயைசெய்து தெரிவிக்கவேண்டும்" என்றேன். "அந்தப் பாட்டில் மரப்பெயர்கள் தோற்றுகின்றனவென்று சொன்னீர்களே; அத்தியின் மத்தியிலே என்பதில் உள்ள மத்தியென்னும் மரப்பெயரை ஏன் எடுத்

துச் சொல்லவில்லை?" என்றார். "மத்தியென்பது ஒரு மரப்பெயரென்று நான் கேட்டதில்லை; வடமொழியில் ஆதாரம் இருக்கலாமோ? இருந்தால் சொல்லவேண்டும்" என்றேன்.

அவர், "ஏன்! மத்தியார்ஜுனமென்னும் பெயர் இருக்கிற தல்லவா? மத்தி அந்த ஸ்தல விருக்ஷமல்லவா?" என்றார். அவர் கேட்ட தொனியின் இயல்பு, 'உங்களுக்கு இந்த ஸாமான்ய விஷயமும் தெரியவில்லையே!' என்று இரங்குவதுபோல இருந்தது.

"மத்தியார்ஜுன மென்பதன் மொழி பெயர்ப்பு இடைமருதென்பது. அர்ஜுனமென்பது மருதமரத்தின் பெயர். வடக்கே மல்லிகார்ஜுனமும் தெற்கே புடார்ஜுனபுரமும் இருப்பதால், மத்தியிலுள்ள திருவிடைமருதூர் மத்தியார்ஜுனம் என்று வழங்கப்படுகின்றது. ஆகையால் மத்தியென்பது மரப்பெயரன்று" என்றேன்.

இவற்றையெல்லாம் கவனித்துக்கொண்டிருந்த முதலியார் தடை கூறியவர்பால் சிறிது சினம் கொண்டார். அரங்கேற்றம் முடிந்த பின்பு யாவரும் விடைபெற்றுச் சென்றார்கள்; அவ் வுத்தியோகஸ்தரைமாத்திரம் முதலியார் இருக்கச் சொல்லி அவரை நோக்கி, "இவ்வளவு பெரிய கூட்டத்தில் உங்களுடைய கௌரவத்தை நிலைநாட்ட வேண்டுமென்று கருதி இப்படி ஆக்ஷேபம் செய்தீர்களோ! தெரியாத

விஷயத்தைத் தெரிந்ததுபோல நினைந்து அந்த அஸ்திவாரத்தின்மேல் அநாவசியமானவற்றைச் செய்வதைக் காட்டிலும் அறியாமை வேறில்லை. நீங்கள் பெரிய உத்தியோகம் வகிப்பதனாலேயே அதிகமான அறிவு வந்து விட்டதாக நினைத்துக் கொள்ளலாமா? அவ்வளவு பெரிய கூட்டத்தில் நீங்களாக வலிய அவமானத்தை அடைந்தீர்களே. ஒரு விஷயத்தைப் பற்றி நன்றாகத் தெரிந்துகொண்டல்லவா பலர் முன்னிலையில் பேசவேண்டும்? சிறிதளவு தெரிந்த மாத்திரத்தில் முற்றும் தெரிந்ததாக நாமே நினைத்துக்கொண்டு பேச முன்வரலாமா?" என்று கண்டித்தார். கேட்டவர், 'ஏன் இந்த ஸங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டோம்!' என்று எண்ணி என்னையும் நோக்கி வருந்தினர்.

இதனால் முதலியாரவர்கள் குற்றம் கண்டால் தைரியமாகக் கண்டிக்கும் இயல்பினரென்பதை நான் நன்றாக அறிந்துகொண்டேன்.

இவ்வாறு கச்சிக்கலம்பகத்திற் பல பாடல்களை நான் பிரசங்கம் செய்தபின்பு கும்பகோணம் செல்லவேண்டியிருந்தமையால் முதலியாரிடம் விடைபெற்றுக்கொண்டேன். ஒருவரையொருவர் பிரிவதில் இருவருக்கும் வருத்தம் இருந்தது. முதலியார், "மேல் நாட்டார் தம்முடைய நண்பர்களுக்குத் தம் ஞாபக அறிகுறியாக ஏதாவது ஒன்றைக் கொடுப்பது வழக்கம். அதை அனுசரித்து, உங்களுக்கு நான்

ஒன்று தர எண்ணியிருக்கின்றேன்'' என்று சொல்லிப் பேனு முள் (Nib) வைக்கிற சிறிய தகரப்பெட்டி ஒன்றை அளித்தார். அதனை மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொண்டேன். அதனை இன்னும் பாதுகாத்து வருகின்றேன்.

நான் கும்பகோணம் சென்றபின் சோடசாவதானம் சுப்பராய செட்டியாரும், சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்கத் தம்பிரானும் கலம்பக அரங்கேற்றத்தை நிறைவேற்றினர். அக்காலத்தில் இவ் வரங்கேற்றத்தைப் பற்றிச் சிறப்பித்து, தொண்டை மண்டலம் பாடசாலையில் தமிழ்ப் பண்டிதராக இருந்த திருமயிலை சண்முகம்பிள்ளை சில செய்யுட்களைப் பாடியிருக்கிறார். அக்கலம்பகத்திற்குச் சிறப்புப் பாயிரமாக நான் பாடிய சில செய்யுட்கள் உண்டு.

கலம்பகத்தின் அரங்கேற்றம் நடந்துவந்த பொழுதும் அதன்பின்பும் சென்னை நகர் முழுவதும் அதைப்பற்றிய பேச்சாகவே இருந்தது; அந்நூல் பிறகு காலேஜ் வகுப்புக்களுக்குப் பாடமாக வைக்கப்பட்டதுண்டு.

## சிறந்த மேதாவி

தமிழ் நூல்களில் அரங்கநாத முதலியாருக்கு விருப்பம் அதிகமாக உண்டு. பழம் பாடலானாலும் புதுப்பாடலானாலும் அதன் நயத்தை அறிந்து இன்புறுவார். புதிதாக அச்சிட்ட நூலை நான் கொடுத்தால் கொடுத்த அன்றிரவே அந்நூலைப் படித்துவிட்டு மறு

நாள் அதில் இன்ன இன்ன பகுதிகள் நன்ரு யிருக்கின்றனவென்று சொல்லுவார்.

ஸ்ரீ கச்சியப்ப முனிவர் இயற்றிய பூவா ளூர்ப் புராணம் அச்சிடப்பெற்றபோது அதன் பிரதி ஒன்றை ஒருநாள் மாலையில் முதலியாரிடம் கொடுத்துச் சென்றேன். அவரை மறுநாள் பார்க்கும் பொருட்டு, 'காஸ்மாபாலிடன் கிளப்பு'க்கு நான் போயி ருந்தேன். அப்பொழுது அவர் தம் நண்பர் களுடன் சீட்டாடிக் கொண்டிருந்தார். என் னைக் கண்டவுடன் இருக்கச்சொல்லி, "நீங்கள் கொடுத்த புராணம் மிக நன்ருக இருக்கின் றது" என்ருர். "நீங்கள் எப்பொழுது வாசித் தீர்கள்?" என்று நான் கேட்டேன். "நேற்று ராத்திரியே படித்து விட்டேன்" என்று சொல் லிச் சீட்டாடிக் கொண்டே அப்புராணத்தில் இன்ன இன்ன பாகங்கள் மிக நயமாக இருக் கின்றன வென்று சொன்னர்; சில செய்யுட் பகுதிகளையும் ஒப்பித்தார். கேட்ட எனக்குப் பெரு வியப்பு உண்டாயிற்று.

சேலம் இராமசாமி முதலியார் இறந்த காலத்தில் நான் வருந்திப் பாடிய சில இரங்கற் பாடல்கள் சுதேசமித்திரனில் வெளியிடப்பட் டன. சில நாள் கழித்து நான் சென்னைக்குச் சென்றிருந்தேன்; அப்பொழுது அரங்கநாத முதலியாரது வீட்டிற்குப்போனேன். அங்கே அவர் தம்முடைய அறையில் சுதேசமித்திரனில்

வெளிவந்த முற்கூறிய பாடல்களுள்ள பகுதியைக் கத்தரித்து ஓர் அட்டையில் ஒட்டித் தொங்கவிட்டிருந்தார். அதைக்கண்ட நான், "இவற்றை நீங்கள் ஒரு பொருட்படுத்திக் கவனித்திருக்கிறீர்களே" என்றேன். "ஆமாம்; நல்ல பாட்டை அறிந்து சந்தோஷியாவிட்டால் தமிழைப் படிப்பதன் பயன் என்ன? இது மட்டுமா? இன்னும் பாருங்கள்" என்று சொல்லிவிட்டு, "கிருஷ்ணசாமி!" என்று கூப்பிட்டார். அவருடைய மூன்றும் குமாரரும் நல்ல அறிவாளியுமான கிருஷ்ணசாமியென்பவர் வந்தார்; "எங்கே: அந்தப் பாட்டுக்களைச் சொல்லு பார்ப்போம்" என்றார் முதலியார்; உடனே குமாரர் அவற்றைச் சொன்னார். "பார்த்தீர்களா!" என்று முதலியார் என்னைக் கேட்கையில் நான் சிறிது நாணிப் பின்பு, "நீங்கள் என்னை உயர்த்தி வைக்கிறீர்கள். எல்லாம் உங்களுடைய கரை கடந்த அன்பைப் புலப்படுத்துகின்றன" என்றேன்.

முதலியாருடைய ஆதரவினால் ஒருமுறை 'மெட்றிகுலேஷன்' வகுப்புக்குரிய தமிழ்ப் பாடபுத்தகத்தைப் பதிப்பிக்கும் நிலை எனக்குக் கிடைத்தது. அதுகாறும் தமிழ்ப்பண்டிதர்களுக்கு அப்பதவி கிடைத்ததில்லை. வெறும் சம்பளத்தோடு அவர்கள் திருப்தியுறவேண்டிய நிலையில் இருந்தார்கள். இங்கிலீஷில் பட்டம் பெற்றவர்களுக்கே தமிழ் சம்பந்தமான பதவி

கிடைத்துவந்தது. பாட புத்தகங்களையும் அவர்களே பதிப்பித்துவந்தார்கள். அரங்கநாத முதலியார் மிக முயன்று வாதாடிப் பண்டிதர்களும் பாட புத்தகங்கள் பதிப்பிக்கும் பதவியை அடையும்படி செய்வித்தார். முதல்முறையாக அதனைப் பெற்றவன் நானே.

பாடபுத்தக சபையார் இன்ன இன்ன நூல்களிலிருந்து செய்யுட்களைத் தேர்ந்தெடுத்து அமைக்கவேண்டுமென்று நியமித்திருந்தனர். அவற்றுள் அரிச்சந்திர புராணமும் ஒன்று. அந்தச் சபையில் ஒருவராக இருந்த முதலியார் எனக்கு அவ்வேலை கொடுக்கப்பட்டதை நேரில் அறிவித்துவிட்டு, "அரிச்சந்திரபுராணத்தில் எந்தப் பகுதியைச் சேர்த்தாலும் சேர்க்காவிட்டாலும் மயான காண்டத்திலுள்ள சந்திரமதி புலம்பற் பகுதியைமட்டும் விட்டுவிடாதீர்கள். சோக ரஸத்தை எளிய நடையில் மிக அழகாக எடுத்துக்காட்டும் அந்தப் பகுதியைப் போன்றதை நான் வேறு எந்த நூலிலும் பார்த்ததில்லை" என்றார். நான் அவர் விருப்பத்தின்படியே செய்தேன்.

இராமசாமிமுதலியார் இறந்தபிறகு ஒரு நாள் அவருடைய தகப்பனார் ஒரு சங்கீத வித்துவானைக் கொண்டு அருணசல கவிராயர் இயற்றிய இராமாயணக் கீர்த்தனங்களைப் பாடும்படி செய்தார். அவர் பாட்டைக் கேட்கும்பொருட்டு அரங்கநாத முதலியார்

சென்றிருந்தார். அங்கே போனபிறகு ஒருவரை அனுப்பி என்னை அழைத்துவரச் செய்தார். நான் அங்கே போனவுடன், "நீங்கள் இருந்தால் நான் நாலு காதுகளாற் கேட்பது போல இருக்கும்" என்றார். அன்று சங்கீத வித்துவான் பல கீர்த்தனங்களைப் பாடினார். கேட்டு யாவரும் இன்புற்றோம். பிறகு முதலியார் அருணசல கவிராயருடைய கவித்துவத்தைப் பாராட்டினார்; 'சொன்னான் ஸ்ரீராமன்' என்பதைப் பாடிக்காட்டி, "இந்த மாதிரி வார்த்தைகளும், ராகப்பொருத்தமும், வர்ண மெட்டும் அமைவது மிகவும் அருமை" என்று சொன்னார்.

தமிழபிமானம்

*ஒரு முறை பல கல்விமான்களிடையே இருந்து அவர் பேசிக்கொண்டிருந்தனர். இங்கிலீஷ்ப் பாஷையில் பல அருமையான விஷயங்கள் இருக்கின்றனவென்றும் எவ்வளவோ சிறந்த கவிகளும் அறிஞர்களும் அம்மொழியை வளப்படுத்தி யிருக்கிறார்களென்றும், தமிழில் ஒன்றுமில்லையென்றும் அப்பொழுது அவர்கள் சொன்னார்கள். தமிழைப்பற்றிக் குறை கூறுவதை முதலியாருக்குக் கேட்பதில் விருப்பமில்லை. அவர், "சூரிய மண்டலத்திற்கு எவ்

*இவ்வரலாற்றை, வெள்ளக்கால் ம-h-h-ஸ்ரீ, ராவ் சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் எனக்கு அன்புடன் தெரிவித்தார்கள்.

வளவோ தூரத்தில் ஆயிரக்கணக்கான நக்ஷத்திரங்கள் இருக்கின்றனவென்று சொல்லுகிறார்கள். சில நக்ஷத்திரங்கள் சூரியனைக் காட்டிலும் பெரியனவாக இருப்பதாகவும் சொல்லுகிறார்கள். சூரியனையே பார்த்து அனுபவிக்கத் தெரியாமல் நக்ஷத்திரங்களைப் பற்றிப் பேசுவதில் பிரயோஜனமில்லை. முதலில் தோன்றும் சூரியனைப் பார்த்துக் களித்து அப்பால் நக்ஷத்திரங்களின் பெருமையை அறிய முயற்சி செய்யலாம். அதைப்போன்றதுதான் பாஷை விஷயமும். எவ்வளவோ சிறந்த விஷயங்கள் தமிழைக் காட்டிலும் வேறு பாஷைகளில் இருக்கலாம். அதனால் தமிழை மறந்துவிட்டு மற்றவற்றை ஆராய்வது நன்றாகுமா? முதலில் தமிழாகிய சூரியனைப்பற்றித் தெரிந்துகொண்டு அப்பால் மற்றப் பாஷைகளாகிய நக்ஷத்திரங்களைத் தெரிந்துகொள்வதுதான் முறை'' என்று சொன்னார். உடன் இருந்தவர்கள், முதலியார் தம்முடைய கருத்தைச் சிறந்த உபமானம் ஒன்றின் மூலமாக விளக்கிக் காட்டியதைக் குறித்துச் சந்தோஷமடைந்ததோடு அவர் கூறியது நியாயமென்பதையும் உணர்ந்தனர்.

ஞாபகசக்தி

ஏதையும் விரைவில் படித்து ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும் திறமை அவருக்கு இருந்தது. அவருடைய பேச்சும் எழுத்தும் அவரு

டைய ஞாபகசக்தியை நன்றாக வெளிப்படுத்தும். ஒரு முறை எழுதியதை மாற்றி எழுதுவதென்பது அவரிடம் இல்லை. எழுதும்போதே முடிவான கருத்துக்களாக அமைந்து விடும். எழுதியதை மறுபடி படித்துப் பார்ப்பதுமில்லை.

அரங்கநாத முதலியாருக்கு உதவியாசிரியராகச் சிலகாலம் பல்லாரியில் இருந்தவரும், கும்பகோணம் கலாசாலையில் பிரின்ஸிபாலாக இருந்தவரும், என்னிடம் பேரன்புபூண்டவரும், இப்பொழுது யாழ்ப்பாணத்தில் இருந்துவருபவருமாகிய ஸ்ரீமான் ஜே. எம். ஹென்ஸ்மன் அவர்கள் 16-4-36-இல் எழுதிய கடிதமொன்றில் முதலியாரைப்பற்றிக் கீழ்கண்ட செய்திகளை அறிவித்திருக்கின்றார்கள் :—

'அரங்கநாத முதலியாருடைய அறிவாற்றல் மிக உயர்ந்தது ; அதைக்காட்டிலும் அவருடைய அன்பு சிறந்தது. நகைச் சுவையுண்டாகப் பேசுவதில் அவர் மிகவும் சமர்த்தர். பத்துப் பதினைந்து பேர் உள்ள கூட்டத்தில் அவர் பேசிக்கொண்டே இருப்பார். ஒவ்வொரு கணமும் அக்கூட்டத்திலுள்ளார் சிரித்த வண்ணமாகவே இருப்பார்கள். சில மனிதர்களுக்கும் நகைச்சுவைக்கும் வெகு தூரம்; அப்படிப்பட்டவர்கள்கூட முதலியாருடைய பேச்சினால் தம்மை மறந்து சிரித்துவிடுவார்கள்.

'முதலியாருடைய ஞாபகசக்தி அதிசயிக்கத்தக்கது. புஸ்தகத்திலுள்ள ஒரு பக்கத்தை

அரை நிமிஷத்தில் படித்துவிடுவார்; என்ன ஆச்சர்யம்! அதைக்காட்டிலும் ஆச்சர்யம்: அந்தப் பக்கத்திலுள்ள ஒவ்வொரு வார்த்தையும் அவர் ஞாபகத்திற் பதிந்துவிடும்! சென்ற நூறு வருஷ காலத்தில் அவருக்கு முன்னே பின்னே அவரைப்போன்ற மேதாவிகள் இருந்ததேயில்லை.'

அவருடைய சம்பாஷணை யாவராலும் விரும்பத்தக்கது. தம்மோடு வாதம் செய்பவர்களுக்குச் சமயோசிதமாக விடைகூறும் ஆற்றல் அவருடைய அறிவை வெளிப்படுத்தியது. அவரிடம் எத்தகையவர்களும் அடங்கிவிடுவார்கள்.

முதலியாருக்கு ஆயிர ரூபாய் சம்பளமான போது, அவருடைய நண்பரும் மிகப் புகழ்பெற்ற வக்கீலுமாகிய ஒருவர், "நீங்கள் என்ன வேலை செய்கிறீர்கள்? தினந்தோறும் ஒரு மணி அல்லது இரண்டுமணி நேரம் பாடம் சொல்லுகிறீர்கள். இந்தச் சம்பளம் உங்களுக்கு மிக அதிகம். நாங்கள் தொண்டைத் தண்ணீர்போக வாதாடுகிறோம்; நம்பர்க்கட்டுக் குவியல்களோடு போராடுகிறோம். எங்களுக்கு இவ்வளவு சுலபமாகப் பணம் கிடைப்பதில்லை" என்றார். உடனே முதலியார், "இப்பொழுது செய்யும் வேலைக்காக ஏற்பட்ட சம்பளம் அல்ல இது; முன்பே சிரமப்பட்டுப் படித்து உழைத்திருக்கிறோமே; அதன் பயனேயாகும். நீங்களெல்

லாம் அன்றன்று தேடிப் பிழைப்பவர்கள். நீங்களும், நாங்களும் சரியாவோமா?'' என்றார்.

## மனோ தைரியம்

ஒருகாலத்தில், சென்னைச் சர்வகலாசாலை ஸிண்டிகேட்டில் வருஷமுடிவுப் பரீக்ஷைக்குரிய காலத்தை மாற்ற வேண்டுமென்று தக்க கனவான் ஒருவர் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். அதைத் தழுவிச் சில கனவான்கள் பேசினார்கள். அதை மறுத்துக் காரணங்காட்டி அரங்கநாத முதலியார் பேசினார். தீர்மானங் கொண்டு வந்தவர் மிகவும் கோபமடைந்து நெடுநேரம் முதலியாரைக் கண்டித்துப் பேசினார். சபை முடிந்த பிறகு முதலியாரை அணுகி, "நான் பேசியதில் ஏதாவது கோபம் உண்டா?'' என்று கேட்டார். முதலியார், "நீங்கள் உங்களுடைய ஆத்திரத்தைக் கத்தித் தொலைத்தீர்கள்; நான் கூறிய ஆக்ஷேபங்களுக்குச் சரியான பதிலே இல்லை'' என்றார். அரங்கநாத முதலியாருடைய மறுப்பினால் அத்தீர்மானம் நிறைவேறவில்லை. இச்செய்தியை முதலியாரே என்னிடம் கூறியிருக்கிறார்.

## பிரிவு

எவ்வளவுக்கு எவ்வளவு அன்பு ஒரு பொருளினிடத்தே உண்டாகுமோ அவ்வளவுக்கு அவ்வளவு துன்பம் அப்பொருளைப் பிரிவதனால் உண்டாகுமென்று பெரியோர்கள் கூறுகின்றார்கள். அருமையும் அன்பும் உடை

யாரைப் பிரிவதிலும் பெரிய துன்பம் வேறில்லை. "பழகிய பகையும் பிரிவின் ஞதே" (நற்றிணை) என்ற அரிய வாக்கியம் இவ்வுண்மையை எவ்வளவு அழகாக உணர்த்துகின்றது!

முதலியாருடைய பிரிவினல் அவருடைய மெய்யன்பர்களுக்கு உண்டான துன்பத்துக்கு ஆறுதல் ஏது? 1893-ம் வரு டிசம்பர் மீ, 10-ஆம் தேதி, ஞாயிற்றுக்கிழமையன்று அவர் இவ்வுலக வாழ்வை நீத்தார்; அச்செய்தி சென்னையிலிருந்து எனக்கு எட்டியது. அப்பொழுது எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. துயர்க்கடலில் மூழ்கினேன். சிலர், "சரமகவி பாடவில்லையா?" என்ருர்கள். "யாருக்காக இனிமேல் பாடவேண்டும்? தமிழ்ச்செய்யுள் நயத்தையறிந்து ஈடுபட்டுப் பாராட்டும் அவருடைய ஸ்தானத்தில் இப்பொழுது யார் இருக்கிருர்கள்?" என்று நான் வருந்திக் கூறினேன். பின்பு சென்னையிலிருந்து சில அன்பர்கள் வற்புறுத்தி எழுதி யிருந்தார்கள். அப்போது நான் இயற்றியவை வருமாறு:—

1. நண்பார் தருமரங்க நாதசுகு ஞகரவித்
திண்பார் புகழ்கல்விச் செல்வமுடைச் சிங்கமே
பண்பார் தருமுன்னைப் பார்த்தே பெருமகிழ்வை
உண்பார் வருந்த வொளித்தெங் ககன்றனையே.

2. தென்ஞடு செய்த செழுந்தவமே தென்ரேண்டை
நன்ஞடு பெற்ற நலமார் மணிவிளக்கே
முன்ஞடு சென்னை முளைத்த முழுமதியே
எந்நாடு சென்ருயீ தென்னேயோ வென்னேயோ.

3. பொன்னைப் பெறலாம் புகழ்பெறலாம் பூவலயந்
தன்னைப் பெறலாந் தகமுயன்றால் யாவையுமே
பின்னைப் பெறலாம் பிறழா மனவலிசேர்
உன்னைப் பெறுமாறு முண்டோ வுரையாயே.

4. [1]பனியார் சிலசொற் பகர்ந்தே யுளங்குழைப்போய்
கனியா ரினிமை கலந்தே சுவைகள்பல
நனியார் தமிழி னயந்தெரிய வல்லார்தாம்
இனியா ருனைப்போ லினியா ரினியாரே.

5. என்னே நலமா ரிராமசா மிக்குரிசில்
முன்னே யகன்றன் மொழியுமவ னைத்தொடர்ந்து
பின்னே நடந்தாய் பிரிவாற்றாத் தன்மையினோ
நன்னேய மாரரங்க நாத தயாகரனே.

6. நாவலோர் வாழ்த்தரங்க நாத நயசுகுணா
பாவலோர் பெற்றபெரும் பாக்கியமே செந்தமிழின்
ஆவலோ டேனை யருங்குணங்கள் யாவையுமே
[2]மாவலோயெவ் விடத்து வைத்தகன்றாய் சொல்லாயே.

(வேறு)

7. உனைப்போல வெவற்றையுமே யொழுங்காகச் செய்துமுடித்
துற்றோர் யாரே
உனைப்போலத் தமிழர்தலை சாயாம னிறுத்தவல்லோர்
உலகில் யாரே
உனைப்போல வலியார்க்கு மெலியார்க்கு மொப்பநடந்
துவந்தோர் யாரே
உனைப்போலப் பலகலையு மெளிதறிந்து கம்பீரம்
உடையோர் யாரே.

(வேறு)

8. [3]தரங்க வேலை யனைய தாய சபையி டைப்பு குந்துநின்
றுரங்க லந்த வாங்கி லேய ரொருமொ ழிப்ர சங்கமங்
கரங்க நாத வள்ளல் போல வவர வர்வி யந்துதம்
சிரங்க ரந்து ளக்கு மாறு செப்ப வல்லர் யாவரே.

1. பனி - குளிர்ச்சி.
2. மாவலோய் - மிக வல்லவனே.
3. தரங்க வேலை - அலையையுடைய கடல்.

(வேறு)

9. எல்லா நலமு மினிதமைந்தோன் பூண்டிநகர்
நல்லார் புகழரங்க நாத முகிலிறந்த
பொல்லாத வோசையிடி போலே தமிழ்க்குயிலை
[1]வல்லாமை செய்து வருத்தத் திருந்தியதே.

அரங்கநாத முதலியார் இப்பொழுது இல்லாவிட்டாலும் தமிழ்ச் செய்யுளின்பத்தை அனுபவிக்கும்போதெல்லாம் நான் இந்தக் காலத்தை மறந்து விடுகிறேன்; அவருடைய வீட்டுக்குள், கம்பீரமான தோற்றத்துடன் அவர் சில அன்பர்களோடு வீற்றிருக்க அவர்களோடு நானும் கலந்து தமிழ்விருந்தை அனுபவிக்கும் காட்சியில் என் மனம் ஒன்றிவிடுகின்றது.

---

## 5. *பண்டைக் காலத்துப் பள்ளிக்கூடங்கள்

### குருகுலங்கள்

இக்காலத்தில் பள்ளிக்கூடங்களைப் பற்றியும், பாடஞ் சொல்லும் முறைகளைப் பற்றியும் நூற்றுக்கணக்கான புஸ்தகங்கள் ஆங்கிலம் முதலிய பாஷைகளில் இருக்கின்றன. கால நிலை மாறுபாடு அடைய அடைய ஜனங்களுடைய பழக்கங்களும் மாறுதலடைகின்றன. இக்

1. வல்லாமை - ஒன்றும் செய்ய மாட்டாமை.

*புரசபாக்கம் ஸர், எம். ஸி. டி. முத்தையா செட்டியார் ஹைஸ்கூல் ஆசிரியர் சங்கத்தின் முதற்பிரசங்கமாக, 20—7—36-இல் செய்யப்பட்டது.

காலத்துப் பள்ளிக்கூடங்களில் இக்கால வாழ்க்கைக்கேற்ற முறைகள் மேற்கொள்ளப்படுகின்றன. பழைய காலத்துப் பாடசாலைகளில் வழங்கிவந்த முறைகளோ வேறு வகை. அக்காலத்திலிருந்த பள்ளிக்கூடங்களின் அமைப்பும் ஆசிரியர்களின் நிலைமையும் மாணுக்கர்களின் இயல்பும் வேறு. எனக்குத் தெரிந்த வரையில் அவற்றைப்பற்றிச் சொல்லுகிறேன்.

நம்முடைய நாட்டில் மிகப் பழைய காலத்தில் உபாத்தியாயருடைய வீடே பள்ளிக்கூடமாக இருந்தது. அதைக் குருகுலம் என்பார்கள். குரு எழுந்தருளியுள்ள கோயிலென்பது அதன் பொருள். இப்படியே தெய்வம் எழுந்தருளிய கோயிலுக்கு, 'தேவகுலம்' என்னும் பெயர் வழங்குகின்றது;

"ஊரானோர் தேவகுலம்"

என்பது ஒரு பழைய வாக்கியம். ஊருக்கு ஒரு கோயிலேனும் இருந்தது.

"கோயிலில்லா வூரில் குடியிருக்க வேண்டாம்"

என்றும்,

"திருக்கோயிலில்லாத் திருவில் ஊரும்"

என்றும் பெரியோர்கள் கூறியுள்ளார்கள். எப்படித் தேவகுலம் இல்லாத ஊர் வாழ்வதற்கு ஏற்றதன்றென்று கருதப்பட்டதோ, அங்ஙனமே குருகுலமில்லாத ஊரும் நன்மையில்லாததென்று கருதப்பட்டது.

"கணக்காய ரில்லாத வூரும் பிணக்கறுக்கும்
மூத்தோரை யில்லா வவைக்களனும் பாத்துண்ணும்
தன்மை யிலாளர் அயலிருப்பும் இம்மூன்றும்
நன்மை பயத்தல் இல"

என்று திரிகடுகம் கூறுகின்றது. இதில் கணக்காயர் இல்லாத ஊர் நன்மை பயவாதென்பது காணப்படும்.

கணக்காயர்

கணக்காயரென்பது உபாத்தியாயருக்குப் பெயர். கணக்கு என்பது நூலின் பெயர். கணக்காயரென்றால் பல நூற்றொகுதியை யுடையவரென்பது பொருள். அவர்கள் பல நூல்களைத் தொகுத்துப் பெட்டிகளிற் சேமித்துவைப்பவர்கள் அல்லர்; பல நூல்களையும் கற்று ஆய்ந்து தம்மனத்துள்ளே தொகுத்து வைப்பார்கள். அவர்களிடம் பாடங் கேட்பவர்கள் புதிய செய்திகளை அறிந்தறிந்து, "இவர்களுக்குத் தெரிந்த விஷயங்களுக்கு ஒரு வரம்பில்லை போலும்!" என்று வியப்பார்கள். அதனாலேதான் உத்தம ஆசிரியர்களுக்கு மலையை உவமை கூறி, அம்மலை இன்ன தன்மையினால் ஆசிரியர்களுக்கு உவமையாவதென்பதை விரித்துக் கூறும்பொழுது, "அளக்கலாகா அளவும் பொருளும்" உடையதென்று பெரியோர்கள் கூறி யிருக்கிறார்கள். யார் யாருக்கு எந்த எந்த விஷயம் தெரியவேண்டுமோ, அவ்வவர்களுக்கு அவ்வவ் விஷயத்தைச்

செவ்விபெறக் கற்பிக்கும் திறமை அவர்களுக்கு இருந்தது. ஆதலின் அவர்கள் ஊரில் இல்லையெனின் ஊருக்கு மங்கலமே இல்லை யென்பது நம்முன்னோர்களுடைய கொள்கை. "மங்கலமாகி யின்றியமையாது, யாவரும் மகிழ்ந்து மேற்கொள" விளங்கும் மலரை அத்தகைய ஆசிரியர்களுக்கு உவமை கூறி யிருக்கின்றார்கள். அவர்களை மாணுக்கர்கள் தெய்வமாகவே எண்ணி வழிபட்டார்கள்.

"எழுத்தறிவித்தவன் இறைவ னாகும்"

என்று வெற்றி வேற்கை கூறுகின்றது. அருச்சுனன் தன் ஆசிரியராகிய துரோணரை,

"யாதுமொன் றறியா என்னை இவனலா தில்லையென் றிந்த
மேதினி மதிக்கு மாறு வின்முதற் படைகள் யாவும்
தீதறத் தந்த உண்மைத் தெய்வம்நீ"

என்று வாயார வாழ்த்துகின்றான்.

தமிழ்ச் சுவடிகளை எழுதும் பிள்ளைகள் 'நன்றாக, குரு வாழ்க, குருவே துணை' என்று எழுதுவது பழைய வழக்கம். இதனால் ஆசிரியர்களிடத்து அக்காலத்தினருக்கு இருந்த மதிப்பு விளங்கும்.

தமிழ் நாட்டில் இருந்த பழைய ஆசிரியர்கள் தமிழ் இலக்கிய இலக்கணப் பயிற்சி மிக உடையவர்கள். வடமொழி, தெலுங்கு முதலிய வேறு பாஷைகளிலும் அவர்களுக்கு ஓரளவு பயிற்சி இருந்தது. கணக்கு, சோதிடம், வைத்தியம், சங்கீதம் முதலியவற்றிலும் பழக்கம்

இருக்கும். இவ்வளவு துறைகளிலும் பரந்த அறிவு வாய்ந்த அவர்களிடம் படிக்கும் பிள்ளைகளும் அப்படியே பல வழியிலும் நல்ல ஞானத்தை அடைவார்களென்பதில் என்ன தடை! பல இடங்களில் உபாத்தியாயரே வைத்தியராகவும் சோதிடராகவும் இருப்பதுண்டு.

தம்முடைய வாழ்வு முழுவதும் பிறர் நன்மைக்கு உழைக்கும் இயல்புடையவர்களாக அவ்வாசிரியர்கள் இருந்தார்கள். சங்க காலத்துப் புலவர்களில் பலர் உபாத்தியாயர்களாக இருந்து ஜீவனம் செய்தனர். மிக்க புகழ் பெற்ற புலவராகிய நக்கீரருடைய தந்தையார் ஒரு கணக்காயரே. அவருடைய பெயரைக்கூட ஏனையோர் கூறுவதில்லை. அவ்வளவு மதிப்பு அவருக்கு இருந்தது. இப்பொழுதும் அவர் பெயர் 'மதுரைக் கணக்காயர்' என்று நமக்குத்தெரிய வருகிறதேயல்லாமல் அவரது இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. கணக்காயன் தத்தன் என்ற சங்கப் புலவர் ஒருவர் இருந்தார். அவரும் பள்ளிக்கூட உபாத்தியாயரே.

### திண்ணைப் பள்ளிக்கூடங்கள்

கிராமந்தோறும் இருந்த பள்ளிக்கூடங்களைத் திண்ணைப் பள்ளிக்கூடங்களென்று நாம் சொல்லுகிறோம்; தெற்றிப்பாடசாலைகளென்றும் சொல்வதுண்டு. ஊர்தோறும் பொது

வான இடத்தில் ஒரு பெரிய மரத்தினடியே மேடையொன்று அமைக்கப்பட்டிருக்கும். அதனை மன்றமென்றும் அம்பலமென்றும் கூறுவர். ஊருக்குப் பொதுவான விஷயங்கள் அந்த இடங்களில் கூடி யோசிக்கப்படும். சங்கீத வித்துவான்கள் முதலியவர்கள் வந்தால் அங்கே தங்கியிருப்பார்கள். அங்கே வெயிலுக்கும் மழைக்கும் தங்குதற்கேற்ற இடங்களும் இருக்கும். அவ்வம்பலத்திலுள்ள தெற்றிகளிலே மரநிழலில் முற்காலத்துப் பள்ளிக்கூடங்கள் நடைபெற்றிருக்கலாமென்று எண்ணுகிறேன்.

## மன்றங்கள்

குறுந்தொகை யென்னும் பழைய சங்க நூலில்,

"அன்னாய் இவனோர் இளமா ணாக்கன்
தன்னூர் மன்றத் தென்னன் கொல்லோ?"

என்பது காணப்படுகின்றது. ஒரு பாணனைப் பார்த்து ஒரு பெண் சொல்வது இது. பாணனென்பவன் சங்கீதத்தால் ஜீவனம் செய்பவன். அவனைநோக்கி அம்மங்கை, "இவன் ஓர் இளைய மாணாக்கன். தன் ஊரிலுள்ள மன்றத்தில் எப்படி இருப்பானோ?" என்று கூறுகின்றாள். இதனால் மாணாக்கனாகிய அவன் மன்றில் பயில்வது ஒருவாறு பெறப்படும். மன்றென்பது மரத்தடியில் உள்ள திண்ணையே; அதுவே பிறகு திண்ணைப் பள்ளிக்கூடமாக மாறியதென்று தோற்றுகிறது.

இயற்கையாக உள்ள மரத்தடியிலும், வனங்களிலும் சென்று பழைய காலத்து மாணுக்கர்கள் கல்வி கற்றனர். இப்பொழுது பள்ளிக்கூடம் இருக்குமிடத்தில் செடி கொடிகளை வருவித்து வனம் உண்டாக்குகிறோம். நாடகத்தில் வனங்களைத் திரையில் எழுதித் தொங்கவிடுவது போலப் பள்ளிக்கூடங்களில் சட்டியிலும் வாயில்களிலும் செடி கொடிகளை வளர்க்கிறோம்.

## பள்ளிகள்

மரத்தடியில் இருந்த பள்ளிக்கூடங்கள் நாளடைவில் சிறு குடிசைகளாக மாறின. பல இடங்களிலே மடங்களிற் பாடசாலைகள் உண்டாயின. பள்ளியென்னும் சொல் ஜைன மடங்களுக்கும் பாடசாலைகளுக்கும் பொதுவான பெயர்.

"அந்தணர் பள்ளியும் அறவோர் சாலையும்"

என்று பொதுவாக, தவம் புரிவோர் இடங்களுக்குப் பள்ளியென்னும் பெயர் வழங்கியதும் உண்டு. அங்கே நூல்களைப் படிப்பதும், படிப்பிப்பதுமாகிய செயல்கள் மிகுதியாக நடந்தன. பாடசாலைகள் வேறு, மடங்கள் வேறு என்ற வேறுபாடின்றி இரண்டும் ஒன்ருகவே கருதப்பட்டமையின், பள்ளி யென்னும் பெயர் இரண்டிற்கும் பொதுவாக வழங்கியதென்று தோற்றுகின்றது. பழைய சிலா சாஸனங்களைப் பார்க்கும்போது மடங்களில்

இன்ன இன்ன நூல்களைப் படிக்கும்பொருட்டு மாணக்கர் இருந்தார்களென்ற செய்தி தெரிய வருகின்றது. இரண்டாம் இராசராச சோழன் காலத்தில் ரூபாவதாரமென்ற வியாகரணத்தைத் திருவாவடுதுறையிலிருந்த பழைய மடமொன்றில் மாணக்கர்கள் படித்து வந்தார்களென்றும், அதற்காகத் தனி நிலங்கள் விடப்பட்டிருந்தனவென்றும் ஒரு சாஸனத்தினல் அறிகிறோம். இப்படியே வேத பாடசாலைகளும் ஆகம பாடசாலைகளும் பல மடங்களில் இருந்தன. தொண்டை நாட்டில் திருமுக்கூடலென்னும் இடத்தில் வைத்திய நூல்களைக் கற்பிக்கும் பள்ளிக்கூடம் ஒன்று இருந்ததென்றும், அங்கே பல மாணக்கர்கள் இருந்து படித்து வந்தார்களென்றும் சிலாசாஸன வாயிலாக அறிகிறோம்.

## தமிழ்ப் பள்ளிக்கூடங்கள்

தமிழ்ப் பள்ளிக்கூடங்களைப் பற்றி அதிகமாகச் சாஸனங்கள் கூருவிட்டாலும் பரம்பரையாக வந்த வழக்கத்தைக்கொண்டு ஆராய்ந்தால் ஊர்தோறும் அவை இருந்தனவென்பது தெரியவரும். ஒருவரிடத்தில் பல மாணக்கர்கள் சேர்ந்து பாடங்கேட்கும் வழக்கம் தொன்றுதொட்டே இந்நாட்டில் இருந்து வந்தது. அகத்தியருடைய மாணக்கர்கள் பன்னிருவரென்று நாம் அறிகிறோம். அவர்கள் பன்னிருவரும் ஒருசாலை மாணக்கர்கள். சாலை

யென்பது பள்ளிக்கூடம். அவர்கள் ஒரு பள்ளிக்கூடத்தில் ஓர் உபாத்தியாயரிடத்தில் படித்தவர்கள். அகத்தியரிடத்தில் இந்தப் பன்னிருவரே படித்தார்கள் என்று வரையறுத்துச் சொல்ல முடியாது. நூற்றுக்கணக்கானவர்கள் படித்திருப்பார்கள்; அவர்களுள் பெரும் புகழ் பெற்றவர்கள் பன்னிருவரென்றுதான் கொள்ள வேண்டும். துரோணரிடம் நூற்றைவர் கற்றுக்கொள்ளவில்லையா?

ஆசிரியர்களின் தகுதி

உபாத்தியாயர்கள், பிள்ளைகளின் வாழ்க்கைக்கு அடிப்படையான விஷயங்களை நன்கு போதிக்கும் கடமையை மேற்கொண்டிருந்தார்கள். வெறும்படிப்போடுமட்டும் அவர்கள் நின்றுவிடவில்லை; மாணாக்கர்களுடைய ஒழுக்கத்தையும் அவர்கள் வரம்பு செய்து திருத்தி வந்தார்கள். அதற்கேற்ற தகுதியும் அவர்களுக்கு இருந்தது. எல்லோரும் உபாத்தியாயராக வந்துவிட முடியாது. பழம்பிறப்பிற் செய்த புண்ணிய வசத்தால் பேரறிவும் நல்லொழுக்கமும் தெய்விக அருளும் வாய்ந்தவர்களே ஆசிரியர்களாக இருக்கத் தகுதியுடையவர்கள். அவர்களே உலகத்தைத் திருத்த முடியும். அரசர்களெல்லாம் அவர்களுக்கு அஞ்சி ஒழுகினர்கள்.

செல்வத்துக்கு உலகத்தில் பெருமதிப்பு உண்டென்பது உண்மை; ஆயினும் கல்விச்

செல்வத்தை உலகுக்கு வழங்கும் ஆசிரியர்கள் முன்னிலையில் அந்தச் செல்வத்துக்கு மதிப்பே யில்லை. ஆசிரியனுக்கு முன்பு பணியாதது ஒன்றும் இல்லை. அவர்கள் செல்வத்தைப் பணியச் செய்வார்கள்; வீரத்தையும் தாழச் செய்வார்கள்.

### சீவகன்

சீவகன் கல்வி கற்றதைக் கூறவந்த திருத்தக்க தேவர், "பூமகள் புலம்பி வைக" அவன் கற்றான் என்கின்றார். அங்கே நச்சினார்க்கினியர், 'செல்வச் செருக்கின்றிக் கற்றான்' என்று உரை எழுதுகின்றார். கல்வி கற்கும்போது செல்வம் பணிந்து நிற்கின்றது.

தன்னுடைய உண்மைநிலையை உணர்ந்த காலத்தில் அதே கணத்தில் பகைவனைக் கொன்று வெற்றி பெறவேண்டுமென்று சீவகன் வீர உணர்ச்சி கொள்கின்றான். அவனுடைய ஆசிரியர், "இன்னும் ஒரு வருஷம் பொறு" என்று கூறுகின்றார். அவ்வளவு வீரமும் ஆசிரியருக்கு முன் அடங்கி ஏவல் கேட்கின்றது.

### அருச்சுனன்

மகாவீரனாகிய அருச்சுனன் விராட நகரத்தில் பசுக்களை மீட்கப் போர்முனையில் நிற்கின்றான். எதிரே துரோணர் வந்து நிற்கிறார். தன்னுடைய பகைவரோடு பகைவராக வந்து நின்ற அவரை நோக்கவே அருச்சுனனுடைய

கைகள் வில்லையும் அம்பையும் நழுவவிட்டுக் குவிகின்றன.

"அந்தணர் அரசே! உம்முடைய அருளால் நாங்கள் வனவாசம் செய்து முடித்துவந்தோம்; சௌக்கியமாக இருக்கிறோம்; நீர் அருள்கூர்ந்து கற்பித்தமையால் நான் பெரிய வில்வீரனானேன். நீரே எனக்குக் கண்கண்ட தெய்வம். உம்மை எதிர்ப்பது மகா பாதகம்" என்று அவன் பணிந்து கூறுகின்றான். அவனுடைய வீரம் ஆசிரியன் கண் முன்பு அடங்கி ஒடுங்கிப் பணிகிறது. "இல்லை அப்பா! நிவாத கவச காலகேயர்களை நீ கொன்று வென்றதாகக் கேள்வியுற்றேன். உன்னுடைய வீரத்தை நான் நேரிலேகண்டு களிக்கவேண்டும். செஞ்சோற்றுக் கடனைத் தீர்க்கும்பொருட்டே இங்கு நிற்கின்றேன். நீ அஞ்சாமற் போர் புரி!" என்று ஆசிரியர் கட்டளையிட்ட பிறகே அவன் வில்லை எடுக்கின்றான்.

இவ்வாறு உலகத்தில் எல்லாவிதமான ஆற்றல்களும் அடங்கி வழிபாடு புரியும் உயர்வு ஆசிரியர்களுக்கு இருந்ததென்றால், அவர்களுடைய தகுதி எவ்வளவு சிறப்பாக இருக்க வேண்டும்!

## ஒருசாலை மாணக்கர்கள்

குருகுலத்தில் பிள்ளைகள் தங்கள் உயர் நிலையை மறந்து பழகி வந்தார்கள். சக்கர

வர்த்தியும் பிக்ஷுகனும் சமமாக இருந்தனர். அவர்களுக்குள் வேறுபாடு உண்டாகவில்லை. பெரிய அரச குமாரனாகிய துருபதனும் ஏழைப் பிராமணராகிய துரோணரும் பாடசாலையில் ஒருவரோடு ஒருவர் கலந்து பழகினர்கள் என்பது பாரதத்திற் கண்டகதை. அங்ஙனம் பழகிய பழக்கம் வாழ்நாள் முழுவதும் மாருமல் இருந்தது. துருபதன் அங்ஙனம் இராமையால் அதற்கேற்ற துன்பத்தை அனுபவித்தான்.

பெரிய அரசனாகிய கண்ணபிரானும் வறிய அந்தணராகிய குசேலரும் ஒரு சாலை மாணக்கர்கள். பாடசாலைப் பழக்கம் பின்பு வாழ்நாள் முழுதும் அவர்களிடம் இருந்ததைக் குசேலோபாக்கியானம் அறிவிக்கின்றது.

என்னுடைய தமிழாசிரியரும் மகாவித்துவானுமாகிய ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இளம்பிராயத்தில் படித்து வருகையில் அவர்களோடு ஒருவர் படித்துவந்தார். அவர் பிள்ளையவர்கள் படித்துவந்த ஒவ்வொரு நூலையும் தவருமல் வாங்கிச்சென்று படிப்பார். ஆனல் மறுகணமே அவற்றை மறந்து விடுவார். நெடுங்காலத்துக்குப் பிறகு பிள்ளையவர்கள் திருவாவடுதுறை யாதீன வித்துவானாக இருந்து தமிழ்நாடெங்கும் கவிஞர் தலைவரென்ற பெயர் பெற்று விளங்கிய காலத்தில், ஒருநாள் மாணக்கர்களுடன் ஒரு சாலையில் நடந்து சென்றார்கள். அக்கூட்டத்தில் நானும்

இருந்தேன். அப்பொழுது முற்கூறிய மனி தர் எதிரில் அந்த வழியே வந்தார். அவருடைய தோற்றம் சர்வசாதாரணமாய் இருந்தது. அவர் பிள்ளையவர்களைக் கண்டவுடன், "மீனாக்ஷி சுந்தரம்! சௌக்கியமா யிருக்கிறாயா?" என் றார். பிள்ளையவர்களை அவ்வாறு ஒருமையில் ஒருவர் அழைத்ததை அதுவரையில் நாங்கள் கேட்டறியாமையால் திடுக்கிட்டோம். அவ் விருவரும் ஒருவரையொருவர் மிக்க அன்போடு க்ஷேம சமாசாரங்களை விசாரித்துப் பேசி விட்டுப் பிரிந்தார்கள். பிரிந்த பின்னர் எங்களுடைய பார்வையினால் நாங்கள் அவ ரைப்பற்றி அறியும் விருப்பமுடையோமென் பதை அறிந்த பிள்ளையவர்கள் எங்களி டம் அவர் தம்முடன் இளமையில் படித்தவ ரென்று கூறினார்கள். அவ்விருவருக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமையிருந் தும் ஒரு பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படித்த பழக்க மிகுதியே மாறா அன்பை உண்டாக்கிய தென்பதை உணர்ந்தோம்.

## பள்ளிப் பயிற்சி

குருகுலவாசம் செய்தவர்கள் பிக்ஷை யெடுத்து அதைத் தம் ஆசிரியர்பாற் கொடுத்து எஞ்சியதைத் தாம் உண்டு வந்தார்கள். அந்த வழக்கம் அவர்களிடத்திற் பொறுமையையும் பணிவையும் உண்டாக்கியது. ஊரிலுள்ளாரும் அவர்களிடம் மதிப்பு வைத்து ஒழுகி வந்தனர்.

தாய் தந்தையர் மக்களைப் பெற்றகடமையோடு அமைகின்றனர். மக்களை மக்களாக்கும் அறிவைப் புகட்டி அவர்களுடைய வாழ்க்கையை இன்பமயமாக்குதற்குரிய அடிப்படையான பயிற்சியைச் செய்விப்பவன் ஆசிரியனே ஆவான். இராமர் முதலிய நால்வரும் வளர்ந்த நெறியைச்சொல்லவந்த விசுவாமித்திரர், "இவர்களைத் தசரதன் பெற்றானென்னும் பெயரேயன்றி, உண்மையில் இவர்களை உலகுக்குப் பயன்படும்படி செய்தவர் வசிஷ்டரே" என்ற கருத்துப்பட,

"திறையோடு மரசிறைஞ்சுஞ் செறிகழற்காற் றசரதனும்
பொறையோடுந் தொடர்மனத்தான் புதல்வரெனும் பெயரே
உறையோடு நெடுவேலோய்! உபநயன விதிமுடித்து [காண்
மறையோது வித்திவரை வளர்த்தானும் வசிட்டன்காண்"

என்று கூறுகின்றார். நிறைந்த செல்வம் முதலியவற்றை ஒரு தந்தை தன் தனயனுக்கு வைத்திருந்தும் பயனில்லை. அச்செல்வமாதியவற்றை நல்ல வழியில் பயன்படுத்தி வாழும் நிலையை உண்டாக்குவது கல்வியே. ஆதலின் மகன் கல்வி கற்கும்படி செய்தலே தந்தையின் முதற்கடமை. அரண்மனையிற் பிறந்த அரசகுமாரனும் பள்ளிக்கூடத்திற் சாணையிடப் பட்டால்தான் பிற்காலத்தில் பிரகாசிப்பான். நிறைந்த செல்வமிருந்தும் பள்ளிக்கூடப் பயிற்சி யில்லாமல் தாழ்ந்த நிலையை அடைந்த ஒருவன் பின்பு தன் தந்தையை நொந்து

கொள்வதாக ஒருபுலவர் ஒரு செய்யுளை இயற்றியிருக்கிறார். அச்செய்யுள்,

" அள்ளிக் கொடுக்கின்ற செம்பொன்னும் ஆடையும் ஆதர
[வாக்
கொள்ளிக்கும் பட்ட கடனுக்கும் என்னைக் குறித்ததல்லால்
துள்ளித் திரிகின்ற காலத்தி லென்றன் துடுக்கடக்கிப்
பள்ளிக்கு வைத்தில னேதந்தை யாகிய பாதகனே"

என்பது. செம்பொன்னும் ஆடையும் இருந்தும் பள்ளிக்கூடத்துப் பயிற்சியின்மையால் அவன் கெட்டுப்போனதை இப்பாடல் விளக்குகின்றது.

சென்ற நூற்றாண்டு வரையில் நம் நாட்டில் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் இருந்துவந்தன. நான் இளமையில் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படித்தவனே. பிள்ளையவர்களிடம் தமிழ் படித்த காலத்தைக் குருகுல வாசமென்றே சொல்லவேண்டும். என்னைப்போன்ற பலர் எல்லாவற்றையும் விட்டுவிட்டுக் கல்வியொன்றையே முக்கியமாக எண்ணி அவர்களிடம் படித்துச் சென்றார்கள்.

கிராமப் பள்ளிக்கூடங்களிலிருந்த உபாத்தியாயர்களுக்கும் பிள்ளைகளுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது. தாய் தந்தையருக்கு அடங்காத பிள்ளைகளை உபாத்தியாயர் அடக்கி விடுவார். பிள்ளைகள் அறிவு வந்த காலத்திலேயே ஆசிரியர்களிடம் ஒப்பிக்கப்பட்டார்கள். அதுமுதல் யௌவனமடையும் வரையில் அவர்

கள் உலகியலை மறந்து கல்வியையே கருத்தாகப் பயின்றார்கள்.

### வித்தியாரம்பம்

முதன்முதலில் ஐந்தாம் பிராயத்தில் வித்தியாப்பியாசம் செய்யும்பொழுது தாய் தந்தையர் பிள்ளைகளை ஆசிரியர்களிடம் அடைக்கலமாகக் கொடுத்து வந்தார்கள்.

பிள்ளைகள் தமிழெழுத்தை ஆரம்பிக்கும் போது 'ஓம் நமச்சிவாய' என்றாவது, 'ஓம் நமோநாராயணாய' என்றாவது எழுதத் தொடங்குவது வழக்கம். ஜைனர்கள் 'ஓம் ஜிநாயநம' என்று தொடங்குவார்கள். விஜயதசமி யன்று பள்ளிக்கூடத்தில் வைப்பது மரபு. அன்று தொடங்குவதனால் கலைமகள் திருவருள் உண்டாகுமென்பர்.

பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்தில் வைக்கும் காலம் ஒரு பெரிய விசேட நாளாகக் கொண்டாடப்பெறும். அன்று உபாத்தியாயருக்குப் பல வகையான ஊதியம் கிடைக்கும். ஏட்டின்மீது மஞ்சட் பூசிப் பூசித்துப் பையனிடம் கொடுத்து வாசிக்கச் செய்வார்கள். உபாத்தியாயர் நெடுங்கணக்கைச் சொல்லிக்கொடுக்க, மாணாக்கன் அதனைப் பின்பற்றிச் சொல்லுவான். இப்படி உபாத்தியாயர் ஒன்றைச் சொல்ல அதை மாணாக்கர்கள் பலரும் சேர்ந்து சொல்லதை முறை வைப்பதென்று கூறுவார்கள்.

உபாத்தியாயருக்குப் பிரதியாகச் சில சமயங் களிற் சட்டாம்பிள்ளை முறை வைப்பதுண்டு. அக்ஷராப்பியாஸத்துக்குப் பிறகு ஒவ் வொரு சுவடியையும் படிக்கத் தொடங்கும் காலமும் ஒருசிறு திருவிழாவாகச் செல்வர் களாற் கொண்டாடப்படும். சுவடி துவக்க லென்று அதனைச் சொல்வார்கள்.

மையாடல்

சுவடிகளிலுள்ள எழுத்துக்கள் செவ்வனே தெரிவதற்காகச் சுவடியில் வசம்பு, மஞ்சள், மணத்தக்காளியிலைச்சாறு அல்லது ஊமத்தை யிலைச்சாறு, மாவிலைக்கரி, தர்ப்பைக்கரி முதலிய வற்றைக் கூட்டிச் செய்த மையை அதில் தடவு வார்கள். அந்த மை எழுத்துக்களை விளக்க மாகக் காட்டுவதோடு கண்ணுக்கும் குளிர்ச்சி யைத்தரும். இங்ஙனம் மை தடவிப் புத்தகத்தை வாசிக்கத் தொடங்குவதனால் அக்ஷராப்பியா சத்தை 'மையாடல் விழா' என்று சொல் வார்கள்.

''ஐயாண் டெய்தி மையாடி அறிந்தார் கலைகள்''

என்பது சிந்தாமணி.

தமிழைக் குழந்தையாக உருவகஞ் செய்த ஒரு புலவர் தமிழ்விடுதூதென்னும் பிரபந்தத் தில் சுவடிக்கு மஞ்சட் பூசுதல், மையிடுதல் முதலியவற்றை,

"மஞ்சட் குளிப்பாட்டி மையிட்டு முப்பாலும்
மிஞ்சப் புகட்ட மிகவளர்ந்தாய்"

என்று புலப்படுத்துகின்றார்.

முறைவைத்தல்

உபாத்தியாயர் சொல்வதைப் பிள்ளைகள் தொடர்ந்து கூறும் பொழுது பலவகை வேறுபாடுடைய ஒலிகளும் ஒன்றுகூடிக் கேட்கும் அவ்வோசையைப் பல தவளைகள் சேர்ந்து சத்த மிடுதலுக்கு உவமையாகக் கம்பர்,

"கல்வியிற் றிகழ்கணக் காயர் கம்பலைப்
பல்விதச் சிருரெனப் பகர்வ பல்லரி"

என்று கூறுகின்றார். தமிழெழுத்துக்களின் வரிசையாகிய நெடுங்கணக்கை வாயாற் சொல்லிப் பழகும் சிறுவர்களைப்பற்றிய செய்தியொன்று சேதுபுராணத்தில் வருகிறது. கந்தமாதன மென்னும் மலையினருகில் உள்ள பள்ளிக்கூடங்களில் சிறு பிள்ளைகள் தமிழெழுத்துக்களை வாய்விட்டுச் சொல்லிக்கொண்டிருப்பார்கள். 'வா' என்று அவர்கள் சொல்லும்பொழுது 'வா' என்ற எதிரொலி எழும். அதனைக் கேட்டவர்கள் 'நம்மை யாரோ வாவென்கிறார்கள்' என்று தேடுவார்கள். அப்பிள்ளைகள், 'போ' என்றபொழுது எதிரொலியைக் கேட்டு "யார் நம்மைப் போகச் சொல்கிறார்கள்?" என்று யோசிப்பர். கூ வென்றால் யாரோ கூக்குரலிடுகிறார்களே யென்று திகைப்பர். இந்தக் காட்சிகளை வெளியிடும் பாடல்:—

"ஓவரு நெடுங்கணக் கோதி டுஞ்சிறார்
வாவென வரையயல் வருவர் தேடுவர்
போவென யாரெமைப் போகென் றாரெனுக்
கூவென வெங்ஙனே கூப்பி டென்பரால்"

(கந்தமாதனப்படலம், 75)

என்பது.

மணலில் எழுதுதல்

பிள்ளைகள் முதலில் மணலில் எழுதிப் பழகுவார்கள். அதனால் அவர்களுடைய எழுத்துக்கள் வரிசையாகவும் நன்றாகவும் அமையும். உபாத்தியாயர் முதலில் தரையில் எழுத அதன் மேல் பிள்ளைகள் விளம்புவார்கள். பிறகு தாமே எழுதி எழுதிப் பழகுவார்கள். இங்ஙனம் தரையில் எழுதும் பழக்கத்தைக் கந்தபுராண ஆசிரியர் அவையடக்கத்தில்,

"இறைநிலம் எழுதுமுன் இளைய பாலகன்
முறைவரை வேனென முயல்வ தொக்குமால்
அறுமுகம் உடையவோர் அமலன் மாக்கதை
சிறியதோர் அறிவினேன் செப்ப நின்றதே"

என்று அமைக்கின்றார். "நான், முருகக்கடவுளுடைய கதையைச் சொல்லப் புகுந்தது, சிறிதளவு தரையில் எழுத்துக்களை எழுதுவதற்கு முன் ஒரு பாலகன் நூலொன்றை எழுத முயல்வதை ஒக்கும்" என்பது இதன்பொருள். கல்வியில் முதற்பருவம் தரையில் எழுதத் தொடங்குவது; முற்றிய பருவம் நூலாசிரியத் தன்மை. இவ் விரண்டையும் இணைந்து இந்தச் செய்யுளிற் கூறியிருக்கிறார்.

கையெழுத்து

"கொம்புசுழி கோணமற் கொண்டபந்தி சாயாமல்
அம்புபோற் கால்கள் அசையாமல்—தம்பி
எழுதினுல் நன்மையுண்டு"

என்று வரும் பழைய வெண்பா ஒன்று உண்டு.

எழுத்துக்கள் ஒன்றேடொன்று படாமல் வரிகோணமல் பழைய காலத்தில் எழுதி வந்தார்கள். பழைய ஏட்டுச் சுவடிகளைப் பார்த்தால் இது விளங்கும். அங்ஙனம் அமைந்த எழுத்துக்களைப் பார்த்தும் எழுதியும் வந்த கச்சியப்ப முனிவர் தணிகைப் புராணத்தில் எழுத்துக்களின் ஒழுங்கான வரிசையை ஒரு பெரிய நகரத்தின் தெருவிலுள்ள மாடவரிசைக்கு உவமை கூறியிருக்கின்றார்.

"பொறித்த சீரெழுத் தொழுக்கெனப் பொற்ற மாடங்கள்
செறித்த வார்நிரை வீதியிற் சிலவளம் மொழிந்தாம்"

ஒவ்வோரெழுத்தும் தத்தமக்குரிய தனியமைப்போடு வரிசை வரிசையாக அமைந்திருத்தலைப் போல மாடங்களும் தந்தமக்குரிய தனியலங்காரங்களோடு வரிசையாக விளங்கின. பல எழுத்துக்கள் சேர்ந்து வரிகளும், பல வரிகள் சேர்ந்து பக்கமும், பல பக்கங்கள் சேர்ந்து நூலும் ஆவது போலப் பல வீடுகள் வீதிகளாகவும், பல வீதிகள் நகரப் பிரிவுகளாவும், பல பிரிவுகள் ஒரு பெரிய நகரமாகவும் அமைந்தனவென்ற விரிவும் அந்த உபமானத்தாற் கொள்ளக் கிடக்கின்றது.

## எழுத்தின் வடிவம்

எழுத்துக்களின் உருவங்கள் பல காலமாக மாருமல் இருந்துவந்தன. புள்ளி, கால், கொம்பு, விலங்கு முதலியவை வரியெழுத்தின் உறுப்புக்கள். பெரியோர்கள் பழக்கி வந்த பழக்கத்தால் பல நூறு வருஷங்களாகியும் எழுதும் வழக்கத்தில் பெரிய மாறுபாடுகள் ஏற்படவில்லை. தொல்காப்பியமென்னும் இலக்கண நூலிற் சொல்லப்பட்ட எழுத்துக்களின் வடிவத்திற்கும் பலநூறு வருஷங்களுக்குப் பின்பு உண்டான நன்னூலிற் சொல்லப்படும் எழுத்துக்களின் வடிவத்திற்கும் சிறிதளவே வேறுபாடு இருக்கின்றது. நன்னூலார்,

"தொல்லை வடிவின எல்லா எழுத்தும்"

என்று வற்புறுத்திக் கூறுகின்ருர். நாளுக்கொரு கோலமாக வஸ்துக்கள் மாறி வரும் இந்த உலகத்தில் இவ்வாறு பல நூறு வருஷங்களாகியும் எழுத்துக்கள் விசேஷ மாறுபாடுகளை அடையாமைக்குக் காரணம் பள்ளிக்கூடத்திற் செய்துவைத்த பழக்கமேயாகும்.

மகாவித்துவாளுகிய ஸ்ரீ மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் மாயூரப் புராணத்தில் நைமிச வனத்தை நெடுங்கணக்குக்கு ஒப்பிடுகின்ருர்.

கோடு, கால், புள்ளி, விலங்கு என்னும் எழுத்தின் உறுப்புக்களின் பெயர்களால் மரங்களின் உறுப்புக்களும் குறிக்கப்படும். மரங்களும் கோடுடையன; கோடென்பது கொம்

பிறகுப் பெயர். மரங்களிலும் கால்கள் இருக்கின்றன; அடிமரத்தைக் காலென்று சொல்வது வழக்கம். புள்ளியுடைய மரங்கள் இருக்கின்றன. மேலே விலங்கும் தன்மையின; கீழே விலங்கும் தோற்றத்தையுடையன. விலங்குதல்-கோணுதல், வளைதல். இவற்றால் அவ்வனம் நெடுங்கணக் கென்று கூறத் தகுமென்கின்றார். இக்கருத்துடைய செய்யுள்,

> "கோடு கொண்டன பல்லகால் கொண்டன பல்ல
> கூடு புள்ளிகள் கொண்டன பல்லமேல் விலங்கும்
> பாடு கொண்டன பல்லகீழ் விலங்குவ பல்ல
> நீடு மின்னதால் நெடுங்கணக் கெனற்கைய மின்றே"

என்பது.

## மனனப் பயிற்சி

அக்காலத்துப் பாடமுறைக்கும் இக்காலத்து முறைக்கும் பெரிய வேறுபாடு உண்டு. அடிப்படையான நூல்களெல்லாம் பிள்ளைகளுக்கு மனனமாக இருக்கும். தமிழில் நிகண்டு, நன்னூல், காரிகை, தண்டியலங்காரம், நீதிநூல்கள் முதலியன பாடமாக இருக்கும். கணிதத்தில் கீழ்வாயிலக்கம், மேல் வாயிலக்கம், குழிமாற்று முதலிய பலவகை வாய்பாடுகள் பாடமாக வேண்டும். வடமொழியில் அமரம் முதலியன மனனமாகவேண்டும். ஞாபக சக்தியை விருத்தி பண்ணுவதை மிகவும் முக்கியமானதென்று பழையகாலத்திற் கருதினர். அதற்காகப் பல வகையான முறைகள் இருந்தன. வேதத்தி

லுள்ள கனம், ஐடை முதலிய முறைகளைப் பார்க்கையில் அவையும் மனனத்தின் சிறப்பைக் காட்டுவன வென்பதை அறியலாம். 'தலைகீழ்ப்பாடம்' என்று சொல்வதை அம்முறைகளிற் காணலாம்.

இளங் குழந்தைகளுக்கு ஞாபக சக்தியை விருத்தி பண்ணுவதற்கு உபாத்தியாயர்கள் சில முறைகளை மேற்கொண்டனர். பள்ளிக்கூடம் விட்டுப் பிள்ளைகள் வீட்டுக்குப் போகும்போது அவர்களிடம் ஒரு மலரையோ, காயையோ, பழத்தையோ, விலங்கையோ, பறவையையோ சொல்லி, மறுநாள் வரும்போது அதைச் சொல்லவேண்டும் என்று உபாத்தியாயர் நியமிப்பார். பிள்ளைகள் தம் வீடு சென்றவுடன் உபாத்தியாயர் சொன்னவற்றைத் தம் தாய்மார்களிடம் சொல்லி விடுவார்கள். தாங்களும் மனத்தில் வைத்துப் படுத்துக் கொள்வார்கள். விடியற்காலையில் எழுந்தவுடன் அவற்றை ஞாபகப்படுத்திக் கொள்வார்கள். தம் தாய்மார்களிடம் அவற்றைச் சொல்லி அவை சரியா என்பதை அறிந்துகொண்டு உபாத்தியாயரிடம் சொல்வார்கள். இதனால் அவர்களுடைய ஞாபகம் விருத்தியாயிற்று.

சிறுவர்கள் படிக்கும் ஆத்திசூடி, கொன்றைவேந்த னென்பவை அகராதி வரிசையில் அமைந்தமை அவர்களுடைய ஞாபகத்தில் அவை பதிவதன் பொருட்டே யாகும். இப்

படியே அந்தாதி முறையைக் கொண்டும், எதுகை மோனைகளைக் கொண்டும் செய்யுட்களை ஞாபகப்படுத்திக் கொள்வார்கள். அந்தாதி நூல்களை இளம்பருவத்தே கற்பிப்பதற்குப் பயன் ஞாபக சக்தியடையவதே. நிகண்டுநூல் எதுகை வகையில் அமைந்ததுவும் ஞாபகத்தில் எளிதிற் பதிவதன்பொருட்டேயாகும். நூல்களிலுள்ள செய்யுட்களின் முதல் நினைப்பை எழுதி, அதைப் பாடம் பண்ணிக்கொண்டு ஞாபகம் வைப்பது பழைய வழக்கம். இதற்காக யாப்பருங்கலக் காரிகையில் முதல் நினைப்புச் செய்யுட்கள் இருக்கின்றன; வடமொழியிலும் ரூபாவதாரம் முதலிய நூல்களுக்கு இத்தகைய செய்யுட்கள் உண்டு. அவற்றை ஸீதக சுலோகங்கள் என்று கூறுவார்கள். திவ்யப் பிரபந்தத்திலுள்ள அடிவரவும் இத்தகைய கருவியே யாகும்.

பள்ளிக்கூடப்பிள்ளைகள் தமக்குத்தெரிந்த பாடங்களை அடிக்கடி சிந்தித்து வருவார்கள். பலர் ஒருங்குகூடிக் கேள்விகள் கேட்டும் விடை கூறியும் கற்று வருவார்கள். இதனால் அவர்களுடைய கல்வி எந்தவேளையிலும் தடையின்றிப் பயன்பட்டது. புத்தகத்தின் துணையின்றியும் குறிப்புக்களின் துணையின்றியும் ஒரு விஷயத்தைப்பற்றிப் பேசுவதும், ஒரு செய்யுளுக்குப் பொருள் கூறுவதும், ஒரு செய்தியுள்ள இடங்களைச் சொல்லுவதும் அவர்களுக்குச் சுலபமாக

இருந்தன. ஒருவர் ஒரு செய்யுள் சொல்லுவதும் அச்செய்யுளின் ஈற்றிலுள்ள பதத்தை முதலாக உடைய வேறொரு நூற்செய்யுளை மற்றொருவர் சொல்வதும் இப்படியே இந்தத் தொடர் அறுமல் மாலை போலச் சொல்லிக் கொண்டு வருவதுமாகிய ஒரு பழக்கம் முற்காலத்தில் இருந்தது. வழி நடக்கையிலும், உபாத்தியாயரின் பூஜைக்காகப் புஷ்பங்கள் பறிக்கையிலும், தொடுக்கையிலும் இலை தைக்கும்போதும் இப்படியே சொல்லிப் பழகினார்கள்.

தனியே இருந்தாலும் இந்தப் பழக்கத்தைச் செய்து வந்தார்கள். பாடம் தவறி விட்டால் உடனே ஏட்டையெடுத்து அந்த இடத்தை மீண்டும் நினைவுறுத்திக் கொள்வார்கள். அதற்காக எப்பொழுதும் ஏட்டை உடன் வைத்திருப்பார்கள்.

"பாட மேறினும் ஏடது கைவிடேல்"

என்பது இந்த வழக்கத்தை ஒட்டி எழுந்ததாகும்.

விடியற் காலையில் எழுதல்

மாணாக்கர்கள் விடியற்காலையில் எழுந்து படித்து வந்தார்கள். இந்தப் பழக்கத்தை உபாத்தியாயர் உண்டாக்கி வைப்பார். முதற் கோழி கூவும்பொழுது சில பிள்ளைகள் பள்ளிக்கூடத்துக்கு வந்து விடுவார்கள். நேரங் கழித்துச் சென்றால் உபாத்தியாயர் பிரம்பால்

அடிப்பாராகையால், எல்லோருக்கும் முன்பே போய்விட வேண்டுமென்று கருதித் தூங்கிக் கொண்டிருக்கும் தாய் தந்தையரைத் தாமே எழுப்பிவிட்டுப் பள்ளிக்கூடம் செல்பவர்களும் உண்டு. உபாத்தியாயர் பாடம் தொடங்கும் போது பிள்ளைகளை அவர்கள் வந்த நேரத்தை அநுசரித்து வரிசையாக நிறுத்திவைப்பார். முதலில் வந்தவனுக்கு வேத்தானென்று பெயர்; ஏத்தானென்றும் சொல்வதுண்டு. அவன் கையில் உபாத்தியாயர் பிரம்பால் மெல்லத் தொடுவார். அடுத்தவன் கையில் நீவுவார். வரவர அடி பலமாகும். இறுதியிலுள்ள பைய னுக்கு மிகப் பலமான அடி கிடைக்கும். இந்தத் தண்டனைக்கு அஞ்சிப் பிள்ளைகள் விடியற் காலையிலேயே எழுந்து வந்து விடுவார்கள். முதல் நாள் இறுதியில் வந்த பையன் மறுநாள் எல்லோருக்கும் முந்தியே வந்துவிடுவான். அவ னுக்குப் பிறகு வந்தவன் தானே முந்தி வந்த வனை எண்ணிக் கொள்ளாமல் இருப்பதன் பொருட்டு முன் வந்தவன் கனைப்பான். பொய் பேசுதல் வழக்கமில்லையாகையால், பின் வந்த வன் முன்னே வந்ததாகப் பொய் சொல்ல மாட்டான்.

### சுவடிகள்

பிள்ளைகள் தங்கள் சுவடிகளை மிகவும் நன்றாக வைத்திருப்பார்கள். இளம்பிள்ளை களுக்கு உபாத்தியாயர் ஓலையை வாரி ஒழுங்

காக நறுக்கித் துளையிட்டுக் கயிறு கோத்துத் தருவார். ஒரு துளையிடுவதும் இரண்டு துளையிடுவதும் உண்டு. மற்றப் பிள்ளைகள் தாங்களே செய்து கொள்ளுவார்கள். பனையேடு, சீதாள பத்திரம் முதலியவற்றில் எழுதுவது வழக்கம். அந்தக் காலத்துச் சுவடிகள் பல நூறு வருஷங்களாகியும் அழியாமலிருந்தன. சுவடிகளின் மேலேடுகளில் பலவகையான சித்திரங்கள் எழுதுவார்கள். மேலே சட்டமாகப் பனைமட்டையின் காம்பை நறுக்கிக் கோப்பார்கள்; மரச் சட்டங்களையும் அமைப்பார்கள்; செப்புத் தகட்டாலும் சட்டஞ் செய்து கோப்பார்கள். அந்தச் சட்டங்களின்மேல் வர்ணமையினற் பல வகையான சித்திரங்கள் எழுதுவதுண்டு. இரட்டைத் துளையுள்ள ஏடுகளில் ஒரு துளையில் செப்புக் கம்பி அல்லது மூங்கிற் குச்சியைச் செருகிக் கட்டுவார்கள். அதற்கு நாராசம் என்று பெயர்.

சுவடிகளிற் சில விசித்திரமான உருவங்கள் உண்டு. உருண்டைக் கழிகள் போலச் சில சுவடிகள் இருக்கும். சிவலிங்கத்தைப் போன்ற சில சுவடிகளையும் நான் பார்த்திருக்கிறேன்.

சுவடியைக் கோக்கும் கயிற்றின் ஒரு தலைப்பில் தடையாக, பனையோலையை ஈர்க்கோடு கிளிமூக்குப்போலக் கத்தரித்து அமைப்பார்கள். அதற்குக் கிளிமூக்கென்பது பெயர்.

சுவடிகளைக் கயிற்றால் கட்டுவதற்கே ஒரு முறையுண்டு. சரியாகக் கட்டுகிறார்களாவென்று பரீக்ஷிப்பதற்காக ஆசிரியர் மாணாக்கர்களிடம் சுவடிகளைப் பிரித்துக் கொடுத்து மறுபடி கட்டச் சொல்வதுண்டு.

இப்போது அச்சுப் புத்தகங்களின் அளவில் எவ்வளவு வேறுபாடுகள் உண்டோ அவ்வளவு பனையோலைச் சுவடிகளிலும் உண்டு.

### சுவடிகளைப் பாதுகாத்தல்

பழக்கத்திலுள்ள சுவடிகளை அடிக்கடி கவனிப்பதோடு, தாங்கள் படித்த எல்லாச் சுவடிகளையும் முற்காலத்தோர் சரஸ்வதி பூஜையன்று எடுத்து நன்றாகக் கட்டி ஒழுங்குபடுத்துவர். பல வகையான தொழில்களில் ஈடு பட்டவர்களும் வருஷத்திற்கு ஒரு நாளேனும் தம்முடைய வீட்டிலுள்ள புஸ்தகங்களை எடுத்து ஒழுங்காகக் கட்டிப் பாதுகாத்து வந்தார்கள். நாம் நம்முடைய புஸ்தகங்களை அடிக்கடி பைண்டு செய்கிறோமல்லவா? அதைப்போல அவர்கள் ஏடுகளுக்குப் புதுச்சட்டம் கயிறு முதலியன போடுவார்கள். மிகப் பழையதாய்விட்டால் புதிதாகப் *பிரதி பண்ணி வைப்பார்கள்; புதிதாக மையிடுவார்கள். இதனால் ஒவ்வொரு வீட்டிலுமுள்ள புத்தகங்கள் பழுதுபடாமல்

* சில பழைய நூல்களில் பாடபேதங்கள் இருப்பதற்கு இதுவே முக்கிய காரணம்.

நல்ல நிலையிலேயே இருந்து வந்தன. அப்படிப் பிரதிபண்ணிய பின்னர்ப் பழைய ஏடுகள் சிதிலமாக இருந்தால், அவற்றை நெய்யிலே தோய்த்து விதிப்படி ஹோமம் செய்துவிடுவார்கள்; பதினெட்டாம் பெருக்கில் (ஆடிமீ௴ கஅ-ம் தேதியில்) ஆற்றில் விட்டுவிடுவார்கள். பிரதி பண்ணி வைத்துக்கொண்ட பிறகே பழைய ஏடுகளைப் பரிகரித்துவிடும் இந்த வழக்கம் மாறி, நம்முடைய துரதிர்ஷ்டவசத்தால் எல்லாச்சுவடிகளையும் பரிகரித்து விடும் நிலை வந்துவிட்டது.

## எழுத்தாணிகள்

ஓலையில் எழுதுவதற்குரிய எழுத்தாணியில் பல பேதங்கள் உண்டு. எழுத்தாணியை ஊசியென்றும் கூறுவதுண்டு. மடக்கெழுத்தாணி, வாரெழுத்தாணி, குண்டெழுத்தாணி என்பன எழுத்தாணியின் வகைகள். ஒரு பக்கம் வாருவதற்குக் கத்தியும் மறுபக்கம் எழுதுவதற்கு எழுத்தாணியும் அமைந்ததைப் பார்த்தே பேனாக்கத்தியென்ற பெயர் வந்ததென்று தோற்றுகின்றது. ஒரு பக்கத்தில் இரண்டு கத்தியும் ஒரு பக்கம் இரண்டு எழுத்தாணியும் உள்ள மடக்கெழுத்தாணிகளும் இருந்தன.

## ஏடெழுதும் வழக்கம்

ஒரு பக்கத்தில் மிக நுண்ணிய எழுத்துக்களாக இருபது முப்பது வரி வரையில் எழுதுவதற்குரிய மெல்லிய எழுத்தாணிகள்

இருந்தன. எழுதுபவர்கள் எழுத்தாணியை வலக்கையிற் பிடித்துக்கொண்டு இடக்கையால் ஏட்டைப் பிடித்திருப்பார்கள். எழுதும் பொழுது இடக்கைப் பெருவிரல் நகத்தில் சிறிதளவு பள்ளஞ்செய்து அந்த இடத்தில் எழுத்தாணியைச் சார்த்திக்கொண்டு எழுதுவார்கள். நாம் இக்காலத்தில் காகிதத்தில் எழுதுவதைப் போன்ற வேகத்தோடே ஏட்டில் எழுதுவதுண்டு. ஏட்டில் எழுதும் வழக்கத்தை இக்காலத்தில் பள்ளிக்கூடங்களில் காணமுடியாது. ஆனல் சில ஆலயங்களிலும், சில தனவணிகர்கள் கடைகளிலும் இன்னும் இருந்து வருகிறது. பழைய காலத்தில் கிரயம், தானம், பாகப்பிரிவு, ஒற்றி, உடன்படிக்கை முதலிய பலவகையான பத்திரங்களும் பலவகைக் கணக்குகளும் பனையேடுகளிலேயே எழுதப்பெற்று வந்தன.

மாணக்கர்களுக்கு எழுதும் பழக்கம் நன்ருக உண்டாகவேண்டுமென்று ஆசிரியர்கள் ஒவ்வொருநாளும் அவர்களைத் தனித்தனியே ஏடுகளில் தாம் மேலே எழுதி அதைப்போல் எழுதிவரச் சொல்வார்கள். இதற்குச் சட்டமென்று பெயர்.

### தூக்குப் பலகை

சுவடிகளை வைப்பதற்கும் எடுத்துச் செல்வதற்கும் உபயோகப்படும் கருவிக்குத் தூக்கு என்று பெயர். தூக்குத்தூக்கி என்ற நாடகத்தில் வரும் அரசகுமாரன் சுவடித் தூக்குகளைத்

தூக்கியதால் அப்பெயர் பெற்றனன். அதனை அசை யென்றும் சொல்வதுண்டு; தமிழ் விடுதூதின் ஆசிரியர் அத்தூக்குப் பலகையைத் தமிழ்க்குழந்தையின் தொட்டிலென்று வருணிக்கின்றார்;

"பள்ளிக்கூ டத்தசையாம் பற்பலதொட் டிற்கிடத்தித்
தள்ளிச் சிறார்கூடித் தாலாட்டி"

என்பதைக் காண்க.

## ஆசிரிய வழிபாடு

அதிகாலையில் மாணாக்கர்கள் எழுந்து பல்லுக் கொம்புகளுடன் ஆற்றுக்குச் சென்று பல் துலக்கிவிட்டு, மணலை எடுத்துக் கொண்டு துதி சொல்லிய வண்ணம் பள்ளிக்கூடத்துக்கு வந்து ஆசிரியரை வழிபட்டுப் பாடம் பயிலும் பழைய முறைகள் இக்காலத்தில் யாவருக்கும் விசித்திரமாகத் தோற்றும். ஐம்பெருங்குரவர்களுள் ஒருவராக உபாத்தியாயர் கருதப்பெற்றுவந்தார். அவருக்குவேண்டிய காரியங்களை மாணாக்கர்கள் செய்து வந்தனர்.

## காணிக்கை

ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பையனும் உபாத்தியாயருக்குத் தன்னுடைய குடும்பத்தின் நிலைக்கு ஏற்றபடி ஏதேனும் ஒரு பொருளைக் கொணர்ந்து தருவான்; சிலர் காய்கறி கொடுப்பார்கள்; சிலர் பால் கொடுப்பார்கள். ஒன்றும் இயலாதவர்கள் ஒரு விறகு கட்டையையேனும் கொணர்ந்து அளிப்பார்

கள். அவர்கள் அளிக்கும் பொருள்கள் தம்முள் வேறுபட்ட மதிப்புடையனவாக இருப்பினும் ஆசிரியருக்கு எல்லோரிடத்திலும் ஒரே மாதிரி அன்பே இருக்கும். கால் ரூபாயைப் போன்றதொரு தொகைதான் அவர்கள் மாணக்கரிடமிருந்து பெறும் பேருதியம். ஆயினும் அவர்களுடைய வாழ்விற் குறைவொன்றும் இராது. விசேடநாட்களிற் பலவகையான பொருள்கள் அவர்களுக்குக் கிடைக்கும்.

ஊரிலுள்ளவர்கள் உபாத்தியாயர் கூலியைத் தாமதமின்றிக் கொடுத்துவிடுவார்கள்;

"வாத்தியார் கூலியை வைத்திருக்க வேண்டாம்"

என்பது உலகநீதி;

"ஓதிவைத்தவர் கூலி கொடாதவர் ... எழுநர குழல்வாரே"

என்று திருப்புகழ் கூறுகின்றது. இவற்றால் ஆசிரியர்கள் தம்முடைய ஜீவனதாரத்தைப் பற்றித் தாமே கவலையுற்றுத் தேடி அலையும்படி ஊரினர் வைக்கவில்லை யென்பதையும், அவர்களுடைய குடும்ப க்ஷேமத்தைக் கவனிப்பதை முதற்கடமையாகக் கொண்டனரென்பதையும் உணரலாம்.

### விடுமுறை நாட்கள்

பிள்ளைகளுக்குப் பௌர்ணமி, அமாவாசை, அஷ்டமி, பிரதமையாகிய திதிகளிலும், விசேஷமான பண்டிகைகளிலும், ஊரில் நடைபெறும் முக்கியமான உத்ஸவதினங்களிலும் விடுமுறை உண்டு. அக்காலங்களில் பிள்ளைகள் ஒன்று

சேர்ந்து சந்தோஷமாகப் பொழுதைக் கழிப் பார்கள். விடுமுறைத் தினங்களை வரவு நாட்க ளென்பர். உவாவென்பதன் திரிபே அது. பௌர்ணமியும் அமாவாசையும் உவாவெனப் படும். அவ்விரண்டு நாட்களும் விடுமுறையாத லின் மற்ற விடுமுறை நாட்களுக்கும் அப் பெயரே வழங்கப்பட்டது. நவராத்திரிப் பண்டி கையில் தினந்தோறும் கோலாட்டம் முதலியன நடைபெறும். அக்காலத்தில் உபாத்தியாயர் களுக்கு ஊரினர் பொருள் உதவி செய்வார்கள். இக்காலத்திலும் சில கிராமங்களிலுள்ள பள் ளிக்கூட உபாத்தியாயர்களுக்கு நவராத்திரி யில் தக்கவருவாய் கிடைக்கும்.

தண்டனைகள்

பள்ளிக்கூடத்தில் பிள்ளைகள் அடையும் தண்டனைகள் பல. பிற்காலத்தில் குறைந்த அறிவுடையவர்கள் உபாத்தியாயராக வந்த போது, கோதண்ட மிடுதல், அண்ணாந்தாள் பூட்டுதல், விலங்கிடுதல், கட்டைகள் மாட்டுதல் முதலிய கொடுந்தண்டனைகள் உண்டாயின. பிரம்பால் அடிக்கும் வழக்கமும் ஏற்பட்டது. அத்தகைய உபாத்தியாயர்கள், 'கோலாடக் குரங்காடும்' என்ற பழமொழியைத் தங்களுக் குச் சாதகமாகச் சொல்வது வழக்கம். மிகச் சிறந்த மதிப்புடைய ஆசிரியத் தொழிலைக் குரங்காட்டுக் தொழிலுக்கு ஒப்பாகக் கூறிப் பெருமையடையும் அவர்களுக்கும் பழைய

ஆசிரியர்களுக்கும் மிக்க வேறுபாடு உண்டு.

### சுமக்கும் தண்டனை

சரியாகப் பாடங்களை ஒப்பித்த ஒருவனை ஒப்பிக்கத் தவறியவன் சுமப்பது ஒருவகைத் தண்டனை. இது பழைய காலத்தில் இருந்து வந்ததென்று தோற்றுகின்றது. மதுரையில் சோமசுந்தரப் பெருமான் இயற்றியருளிய திருவிளையாடல்களுள் இசைவாது வென்ற திருவிளையாடல் என்பது ஒன்று. அதில் வீணை வாசிக்கும் பெண்கள் இருவர் ஒருவரோடொருவர் வாதம் புரிந்தனரென்றும், சிவபக்தையாகிய ஒருத்தி வென்றாளென்றும், அங்ஙனம் வென்றவளைத் தோற்றவள் சுமந்தாளென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

> "மற்பொலி திண்டோட் டென்னன்
> வன்பிழை பொறுத்தி வென்ற
> கற்புவீ றுடையாய் தோற்றாள்
> கழுத்திடை வளைத்தே றென்ன
> விற்பொலி நுதலாள் கேட்டு
> மெய்த்தவ னருளை வாழ்த்திப்
> பொற்புறு கழுத்தி லேறி
> இருந்தனள் பொலிவுண் டாக"

என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறும். இதனால் கல்வியில் வென்றார் தோற்றாரால் சுமக்கப்படும் தண்டனை பழைய காலமுதல் இருந்துவந்ததை அறியலாம்.

### அன்பினால் அடக்குதல்

முற்காலத்தில் கொடிய தண்டனைகள்

இல்லை. ஆசிரியர்கள் மாணாக்கர்களை அன்பினால் வழிப்படுத்தி வந்தார்கள். அவர்கள்பால் இருந்த மரியாதை மாணாக்கர்களுக்குப் பயத்தை உண்டாக்கியது. பிழைகளை மறந்தும் புரியாத நிலையில் அவர்கள் இருந்தனர்.

உதயணன் என்னும் அரசன் யாழ் வாசித்து ஒரு மத யானையை அடக்கினான். அவன் அதன் மேல் ஏறிக்கொண்டு அங்குச முதலியவற்றை அந்தயானையே எடுத்துத் தரும்படி ஏவி நடத்தினான். அந்த யானை அவனுக்கு அடங்கியதைச் சொல்லும்போது பெருங்கதை யென்னும் பழைய நூலின் ஆசிரியர்,

"ஆணை யாசாற் கடியுறை செய்யும்
மாணி போல மதக்களிறு படிய"

என்று வர்ணிக்கின்றார். அங்குசம் முதலிய பல வலிய ஆயுதங்களுக்கும் அடங்காமல் திரிந்த அந்த மத யானை இனிய யாழோசைக்குப் பணிந்ததை, வேறு யாரிடத்திலும் பணியாதொழுகும் மாணாக்கன் ஆசிரியனுடைய அன்புரைக்குப் பணிந்து நடக்கும் வழக்கத்தோடு ஒப்பிடுவது எவ்வளவு பொருத்தமாக இருக்கின்றது!

ஆசானுடன் பழகும் மாணாக்கனை, நெருப்பை மிக அணுகாமலும் மிக விலகாமலும் குளிர்காயும் ஒருவனோடு பெரியோர் ஒப்புக்கூறுகின்றனர்.

### வாதம் புரிதல்

கல்வியில் வாதம் செய்தல் நம் நாட்டுப்

பள்ளிக்கூடங்களில் இருந்தது. வடமொழி யாளர் இதனை வாக்கியார்த்த மென்பர். மிகச் சிறந்த நூற்பயிற்சியுடையவர்கள் அரசவை களில் வாது புரிந்து தம் கல்வித் திறமையை நிலை நாட்டுவர். அதன்பொருட்டு அவர்கள் கொடிகட்டி யிருப்பரென்று மதுரைக் காஞ்சி முதலிய தமிழ்நூல்களால் அறிகிறோம். இந்த வாதம்புரியும் பழக்கம் பாடசாலைகளிலிருந்தே வளர்ச்சியுற்று வந்தது. பள்ளிக்கூடத்தில் மாணாக்கன் நூல்பயிலும் இயல்பை விளக்க வந்த பழைய சூத்திரமொன்று பலவற்றைச் சொல்லி விட்டு,

"வினாதல் வினாயவை விடுத்தல் என்றிவை
கடனாக் கொளினே மடநனி இகக்கும்"

என்று முடிக்கின்றது. ஆட்சேப சமாதானங் கள் சொல்லிப் பழகிய பழக்கங்களே முதிர்ந்த நிலையில் வாதங்களாக வளர்ச்சியுறுகின்றன.

## சாந்துணையும் கற்றல்

பல நூல்களையும் பள்ளிக்கூடத்தில் பயின்றதோடு நில்லாமல் வாழ்நாள் முழுதும் நம் நாட்டார் படித்துவந்தார்கள்.

"என் ஒருவன் சாந்துணையும் கல்லாத வாறு!"

என்ற குறளினால், திருவள்ளுவர் ஒருவன் இறக்குமளவும் படிக்கவேண்டு மென்பதை விதிக்கின்றார். பள்ளிக்கூடத்தில் ஏற்பட்ட அடிப்படையான பழக்கங்களே நாளடைவில்

விருத்தியாகி வாழ்க்கையைப் பயனுடைய தாக்கின.

பள்ளிக்கூடத்திலிருந்து கற்கும் காலங் கடந்த பின்னர்ப் பழைய காலத்தவர்கள் பின்பும் எங்கெங்கே கலைகளைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் இருந்தார்களோ, அங்கங்கே சென்று அவர்களிடம் தாம் முன்பு கல்லாதவற்றைக் கற்று வந்தார்கள். என்னுடைய தமிழாசிரியராகிய ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் அங்ஙனம் கற்றுத் தேர்ந்தவர்களே. தென்றல் பல மலர்களிலுள்ள வாசனைகளைத் தோய்ந்து வந்ததற்கு அங்கங்கே கலைகள் தேடும் வித்தியார்த்தியைப் பரஞ்சோதி முனிவர் உவமை கூறுகின்றார்:

"பொங்கரில் நுழைந்து வாவி புகுந்துபங் கயந்து ழாவிப்
பைங்கடி மயிலை முல்லை மல்லிகைப் பந்தர் தாவிக்
கொங்கலர் மணங்கூட் டுண்டு குளிர்ந்துமெல் லென்றுதென்றல்
அங்கங்கே கலைகள்தேரும் அறிவன்போல் இயங்குமன்றே"

என்பது அச்செய்யுள்.

ஓதற்பிரிவு

இல்லறம் நடத்துங் காலத்திற்கூட, வேற்று நாட்டுக்குச் சென்று அங்கங்கே உள்ளாருக்குத் தம்முடைய கல்வியைக் கற்பித்தும், வாதம் புரிந்து வென்றும், தாம் முன்பு அறியாதவற்றைக் கற்றும் வந்தார்கள். தொல்காப்பியமென்னும் பழைய இலக்கண நூலிலும் பிறவற்றிலும் இங்ஙனம் பிரியுங் காலம் ஓதற் பிரி

வென்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதற்கு மூன்று வருஷம் கால எல்லையென்று அந் நூல்கள் விதிக்கின்றன.

இவ்வாறே தமிழ்நாட்டிற்கும் நவத்வீபம் முதலிய இடங்களிலிருந்து வந்து படித்துச் சென்ற பண்டிதர்கள் பலர். தஞ்சாவூரில் இருந்த ஆகம சாஸ்திர பண்டிதராகிய சர்வசிவ பண்டிதரென்பவரிடத்தில் பல அன்னியதேசத்து மாணாக்கர்கள் வந்து கற்றுச் சென்றார்களென்னும் செய்தியொன்று, முதல் இராஜ ராஜ சோழன் காலத்தில், தஞ்சையிற் பொறிக்கப் பட்ட சாஸனம் ஒன்றால் தெரிகின்றது. அவருடைய வீடு அக்காலத்தில் ஆகம காலேஜாக விளங்கியதென்று சொல்வது மிகையாகா தல்லவா? திருவாவடுதுறை மடம், தருமபுரம் மடம் முதலியன பல வருஷகாலம் தமிழ்க்கல்லூரியாகவும், வடமொழிக் கல்லூரியாகவும் விளங்கி வந்தன.

இப்படியே பாலர்களுக்குரிய பள்ளிக் கூடங்கள்முதல் பழுத்த கிழவர்கள் இருந்து கற்கும் பள்ளிக்கூடங்கள் வரையிற் பல பாடசாலைகள் தமிழ்நாட்டில் இருந்து வந்தன. தமிழ்ச் சங்கமென்று சொல்லப்படுவனவும் ஒருவகை ஆராய்ச்சிப் பள்ளிக்கூடங்களே அல்லவா?

பின்னுரை

காலத்தின் வேகம் அந்தப் பழைய காலத்துப் பள்ளிக்கூடங்களை மாற்றியமைத்துவிட்டா

லும், அவற்றால் உண்டான நற்பயன்களையும், அவற்றிற் படித்த பேரறிஞர்கள் நமக்கு ஈட்டி வைத்துள்ள நூற் செல்வத்தையும் நினைக்கும் போது, நம்மையறியாமல் நமக்கு ஒரு பெருமிதம் உண்டாகின்றது; அத்தகைய காலம் மீண்டும் வரக்கூடாதா என்ற ஏக்கம் தோன்றுகின்றது. அக்காலத்துமுறைகளை மீளாவிடினும், அப் பள்ளிக்கூடங்களின் அடிப்படையான உண்மைகளையேனும் நாம் அறிந்துகொண்டு வாழ முயலுவோமாக!

---

## *6. ஆடல் பாடல்

மக்களுக்கு இன்ப மூட்டும் கலைகளிற் சிறந்தவை ஆடல் பாடலென்பன. கல்வியறிவினாற் சிறந்தவர்கள் நூலாராய்ச்சியினால் அறிந்து கொள்ளும் அரிய நீதிகளைக் கல்வி நிரம்பாதவர்களும் காட்சி மாத்திரத்தாற் கண்டு உணரும் வண்ணம் செய்வது ஆடலாகும். ஆடலைக் கூத்தென்றும் நாடகமென்றும் வழங்குவர். பாடலோ பாம்பு, பசு முதலிய விலங்கினங்களையும் வசமாக்கும் தன்மையுடையது.

### பழைய நூல்கள்

ஆடலும் பாடலுமாகிய இவ்விரண்டும் தமிழ்நாட்டாருடைய சரித்திரத்தில் மிக்க தலை

*'ஆடல் பாடல்' என்ற பத்திரிகையின் முதல்வருஷ அனுபந்தத்தில் வெளிவந்தது.

மையை அடைந்து வந்திருக்கின்றன. தமிழ் மொழியை ஆராய்ந்து வளப்படுத்திய பெரி யோர்கள் தமிழ் இலக்கிய இலக்கண நூல்களை யும், பாடலை (இசையை)ப் பற்றிய நூல்களாகிய இசை நூல்களையும், ஆடலைப் பற்றிய நூல்க ளாகிய நாடக நூல்களையும்ஆராய்ந்தும் இயற்றி யும் வந்தனர். பண்டைக் காலத்தில் தமிழ்ச் சங்கத்தில் இருந்த நல்லிசைப் புலவர்கள் இயல், இசை, நாடகம் என்னும் மூன்றையும் ஒரே மதிப்புடையனவாக எண்ணிப் போற்றி வந்த னர். சங்க நூல்களால் தெரியவரும் புலவர்கள் பலர் ஆடல்பாடல்களிற் சிறந்த அறிவுடையவர் களாக இருந்தார்கள்.

## இசைவல்லோர்

நெடும்பல்லியத்தனூர் என்பது ஒரு பழைய புலவருடைய பெயர். அவர் பல வாத்தியங் களில் தேர்ந்த புலமையுடையவரா யிருந்தா ரென்று தோற்றுகின்றது. பரிபாடலென் னும் பழைய சங்க நூலில் உள்ள ஒவ்வொரு பாட்டும் சங்கீத அமைப்பை உடையது. அப் பாட்டுக்களுக்கு அக்காலத்திலிருந்த புலவர்கள் தனித்தனியே ராகங்களை அமைத்திருக்கிறார் கள். அப்படி அமைத்த புலவர்கள் யாவரும் இசைத் தமிழாகிய பாடலில் வல்லவரென்று தெரிகிறது.

## சங்கங்கள்

சங்கீதத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்வதற்

கென்று தனியே சங்கங்கள் இருந்தன வென்றும் சொல்லுவர்.

"அன்றி ஏழிசைச் சூழல் புக்கோ"

என்ற திருக்கோவையாரிலுள்ள செய்யுட் பகுதியும்,

"ஏழிசைச் சூழ லிருந்தானும்"

என்னும் நளவெண்பாப் பகுதியும் இக் கருத்துக்கு ஆதாரமாக இருக்கின்றன.

சங்கீதத்தைப் பற்றிய ஆராய்ச்சி மிகச் சிறப்பாகத் தமிழ் நாட்டில் இருந்ததற்கு அடையாளமாகப் பல பழைய சங்கீத நூல்கள் தமிழில் இருந்தனவென்று பழைய உரையாசிரியர்கள் எழுதி யிருக்கின்றனர். தமிழ் நாட்டில் மூன்று சங்கங்கள் ஒன்றன்பின் ஒன்ருக இருந்தன. அவற்றிலிருந்த புலவர்கள் மூன்று தமிழையும் ஆராய்ந்து வந்தார்கள். இந்த மூன்றுக்கும் சேர்த்து ஒரு பெரிய இலக்கண நூல் அகத்திய முனிவரால் இயற்றப்பட்டது. அதற்கு அகத்தியம் என்று பெயர். அகத்தியத்தை யல்லாமல் இசைத்தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் உரிய நூல்கள் பல இருந்தன.

## நாடகத் தமிழ்

இசைத் தமிழில் வல்ல புலவர்களைப் போலவே நாடகத் தமிழில் வல்ல புலவர்களும் இருந்தார்கள். முதுகூத்தனூர், மதுரைத் தமிழக் கூத்தனூரென்னும் பெயரையுடைய புலவர்கள் கூத்தாகிய நாடகத்தில் வல்லவர்களென்று

தோற்றுகின்றது. மணிமேகலை யென்னும் பழைய தமிழ்நூலில்,

"நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்"

என்று ஒரு வாக்கியம் காணப்படுகிறது; 'நாடகங்களுக்குரிய காவியங்களாகிய நல்ல நூல்களை நுணுகி ஆராய்வோர்' என்பது இதன் பொருள். இதனால் நாடகநூல்கள் நன்கு ஆராய்ச்சி செய்யப்பட்டு வந்தனவென்று தெரிகின்றதல்லவா?

இசைவகை

சங்கீதத்தில் சிறப்பாக இரண்டு பகுதிகள் உண்டு. வாயாற் பாடுவது ஒருவகை; யாழ் முதலிய கருவிகளை வாசித்தல் ஒருவகை. இவை இரண்டுக்கும் பல பொது இயல்புகள் உண்டு. வாத்தியம், நாடகம், சங்கீதம் இம்மூன்றையும் ஒரு கொத்தாக வழங்குவர்; நிருத்த கீத வாத்தியமென்பர் வடமொழியாளர்; தமிழில் கொட்டாட்டுப் பாட்டென்று கூறுதல் மரபு;

"கொட்டாட்டுப் பாட்டாகி நின்றானை",
"கொட்டாட்டோடு பாட்டோலி யோவாத்துறையூர்"

என்பன தேவாரங்கள்.

பழைய நூல்களிற்கண்ட செய்திகள்

சிலப்பதிகாரம் என்னும் பழைய தமிழ் நூலிலும் அதற்குரிய உரைகளிலும் ஆடலையும் பாடலையும் பற்றிய பல செய்திகள் சொல்லப்பட்டுள்ளன. தமிழ் நாட்டினருக் கென்றே தனியாக அமைந்த பல வகையான முறைகள் இவ்விரண்டிலும் உண்டு.

காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்தவர்கள் ஆடலாலும் பாடலாலும் இன்புற்றனர் என்பதை,

"பாடலோர்த்தும் நாடகம் நயந்தும்"

என்னும் பட்டினப்பாலையடி தெரிவிக்கின்றது.

பாடல் இரண்டு வகையாக இருப்பதைப் போலவே ஆடலையும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம்; கூத்தென்றும் நாடகமென்றும் அவை கூறப்படும்; கூத்தை நிருத்தமென்பர் வடமொழியாளர்; அது பாவத்துக்கேற்ற அபிநயங்களைச் செய்து காட்டுவதாம். இந்தக் கலையைத் தமிழ் நாட்டில் தனித்தனியே சிலர் வளர்த்து வந்தனர். கூத்தர், விறலியர், கணிகையர் முதலியோர் கூத்தில் வல்லவராக இருந்தனர்.

நாடகமென்பது கதை தழுவி வருங் கூத்து. இந்த வகையிலும் சிறந்த பலர் பண்டைத் தமிழ் நாட்டில் இருந்தனர். நாடகமாடும் இடமும், திரைகளும், நாடகமாடுவோர் முதலியவர்களுக்குரிய இலக்கணங்களும், இன்ன இன்ன மனோபாவத்தை இன்ன இன்ன வகையாகப் புலப்படுத்த வேண்டுமென்னும் வரையறையும் மிகச் செவ்வையாகத் தமிழ் நூல்களிற் கூறப்பட்டுள்ளன.

"நன்பவணத் தண்ணற வுண்ணளி
போன்றேளிர் நாடகமே"

என்ற திருச்சிற்றம்பலக் கோவையாரின் உரை

யில் 'கண்டார்க்கு இன்பஞ் செய்தலின் நாடக மென்றூர்' என்பர் பேராசிரியர்.

கணிகையர்கள் நாடகக் கலையில் வல்லவர் களாக இருந்தனர். அவர்களுக்கு ஆடல், பாடல், அழகு என்னும் இம் மூன்றும் இன்றி யமையாதன.

> "ஆடலும் பாடலும் அழகும் என்றிக்
> கூறிய மூன்றின் ஒன்றுகுறைப டாமல்"

இருந்தனளென்று மாதவியென்னும் கணிகை யைப் பற்றிச் சிலப்பதிகாரம் கூறும்.

ஆடலும் பாடலும் நன்கமைந்த கணிகை யர்கள் அறுபத்துநான்கு வகைக் கலைகளில் வல்லவர்களாக இருந்தனர். அவ்வளவு விரிந்த அறிவு இருந்தால்தான் மாந்தர்களின் உள்ள உணர்ச்சிகளை நன்கறிந்து அவற்றிற்கேற்ற அபிநயங்களைச் செய்து காட்டிப் பார்ப்போர் பாலும் அவற்றிற்கேற்ற மெய்ப்பாடுகளை உண் டாக்கும் ஆற்றல் அமையுமென்பது பண்டைப் புலவர் கருத்துப்போலும்.

பாடலில்லாத ஆடல் பயன்படாதென் பதை, "விளியாதான் கூத்தாட்டுக் காண் டலும்" என்னும் திரிகடுகச் செய்யுள் உணர் த்துகின்றது.

ஆடல் பாடல்களாகிய இவ்விரண்டையும் பழந் தமிழ்ப் புலவர்கள் ஆராய்ந்தநோடு அநு பவித்தும் வந்திருக்கின்றனர். திருவள்ளுவர்,

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று"

என்று ஆடலைப்பற்றிய ஒரு செய்தியை அமைக்கின்றார். 'ஒருவனுக்குப் பெருஞ்செல்வம் வருவது நாடகக்கொட்டகையில் ஒரு சமயத்தில் பெருங்கூட்டம் சேர்வது போன்றது; அந்தச் செல்வம் போய்விடுவதோ, அந்தக் கொட்டகையில் நாடகம் முடிந்தவுடன் எப்படி ஒரே சமயத்தில் யாவரும் போய்விடுகிறார்களோ அதைப் போன்றது' என்பது இதன் கருத்து. நாடகத்தைப் பார்ப்பதற்கு மக்கள் கூட்டமாகக் கூடும் இந்தச் செய்தியை உவமையாகத் திருவள்ளுவர் அமைத்தது போலவே பாடற் செய்தியொன்றை வேறோரிடத்தில் உவமையாக எடுத்தாளுகின்றார்.

"பண்ணென்னும் பாடற் கியைபின்றேல் கண்ணென்னும்
கண்ணோட்ட மில்லாத கண்"

என்பது அச்செய்யுள். 'பாடற்றொழிலோடு பொருந்தாவிட்டால் பண்ணினால் பிரயோசனம் என்ன? ஒன்றுமில்லை. அதுபோலவே கண் இருந்தும் கண்ணோட்டம் இல்லாவிட்டால் பிரயோசனம் என்ன?' என்பது இதன் கருத்து. பண் பாட்டோடு சேர்ந்து பொருந்தி வழங்கப்பட்டால் யாவரும் கேட்டு இன்பத்தை அடைதற்குக் காரணமாகும்.

பழம்புலவர்கள் ஆடலையும் பாடலையும் கண்டும் கேட்டும் இன்புற்றனர். இயற்கையிலேயே

ஆடல் பாடல்களை உணர்ந்தனர். சோலைகளையும், காட்டையும் வருணிக்கையில் அவர்கள் இயற்கையிலே நிகழும் ஆடல்பாடல்களைப் பற்றிச் சிறப்பிப்பார்கள். பழைய தமிழ்நூல் வரிசையாகிய எட்டுத் தொகையுள் ஒன்முன அகநானூறு என்னும் நூலில் இத்தகைய ஆடல் பாடற் காட்சி யொன்று வருணிக்கப்பட்டிருக்கின்றது. வருணித்த புலவர் கபிலர் என்பவர்.

கபிலர் பாரியென்னும் பெருவள்ளலோடு பறம்பென்னும் மலையில் நெடுநாள் வாழ்ந்து அம்மலையின் அழகைக் கண்டு மகிழ்ந்தவர். மலைகளையும் மலைப்பக்கத்தில் நிகழும் நிகழ்ச்சிகளையும் வருணிப்பதில் அவர் மிக வல்லவர். அந்த மலைப் பக்கத்தில் நிகழ்ந்த காட்சி ஒன்றை அவர் செய்யுளால் சித்திரித்துக் காட்டுகின்றார்:

"ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கிற்
கோடை அவ்வளி குழலிசை யாகப்
பாடின் னருவிப் பனிநீ ரின்னிசைத்
தோடமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை யிகுக்குங் கடுங்குரற் றூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டியாழ் ஆக
இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவள ரடுக்கத் தியலி யாடுமயில்
நனவுப்புகு விறலியிற் றோன்று நாடன்"

என்பது அப்பாட்டு.

இதில் ஆடலும் பாடலும் இயற்கையிலே அமைந்த அழகு விளக்கப்பட்டிருக்கிறது

மலைமேலுள்ள மூங்கில்களை வண்டுகள் துளைத்திருக்கும். அந்தத் துளையின் வழியாகச் செல்லும் காற்றுப் புல்லாங்குழலின் ஸ்தானத்தை வகிக்கிறது; இனிய ஓசையை யுடைய அருவியின் மந்தமான ஒலி மிருதங்க ஓசையைச் செய்கிறது; கூட்டமாக உள்ள கலைமான்கள் தாழச் செய்கின்ற சப்தம் பெருவங்கியத்தின் இசையை ஒத்திருக்கின்றது; மலைப் பூஞ்சாரலிலுள்ள வண்டு யாழைப்போல ரீங்காரம் செய்கின்றது. புல்லாங்குழல், மிருதங்கம், பெருவங்கியம், யாழ் என்னும் இவ்வளவு வாத்தியங்களும் ஒலிக்க ஓர் அழகிய மயில் மெல்ல நடந்து ஆடுகின்றது. அந்த மயிலாகிய நாட்டிய மகளின் ஆடலையும் மற்றவற்றின் பாடலையும் கண்டும் கேட்டும் வியப்பதற்குக் குரங்குகள் சபை கூடியிருக்கின்றன. இந்தச் செய்திகளே மேற்கூறிய செய்யுளில் அமைந்துள்ளன. இந்த வருணனையிற் பாடகர் இல்லாக்குறையை நீக்கிச் சீத்தலைச் சாத்தனார் ஒரு நாடகத்தைப் புனைந்துரைப்பதைப் பின்வரும் மணிமேகலை யடிகளிற் காணலாம் :

"கோம்பர்த் தும்பி குழலிசை காட்டப்
பொங்கர் வண்டினம் நல்யாழ் செய்ய
வரிக்குயில் பாட மாமயி லாடும்
விரைப்பூம் பந்தர்."

வண்டினுள் உயர்ந்த சாதியாகிய தும்பி குழலும், வண்டு யாழுமாகிய பக்க வாத்தியங்

களை வாசிக்கக் குயில் பாட மயில் ஆடும் இந்தக் காட்சியில் ஆடலும் பாடலும் எவ்வளவு நன்றாக அமைந்திருக்கின்றன!

இப்படியே பல புலவர்கள் தாம் இயற்றிய நூல்களில் அழகாகச் சொல்லியிருக்கிறார்கள். அவற்றால் ஆடலும் பாடலும் அப் புலவர்களுடைய மனத்தைக் கவர்ந்தன என்பது அறியப்படும். அழகிய காட்சிகளை ஆடலாகவும் பாடலாகவும் அனுபவித்த அவர்களுக்கு அக் காட்சிகள் இன்பத்தை விளைவித்தன. ஞானியர்களும் சமுத்திரத்தின் ஓசை முதலியவற்றைப் பிரணவ சங்கீதமாகவும் பிரபஞ்ச வாழ்க்கையை நாடகமாகவும் அனுபவிக்கின்றார்களல்லவா?

---

## 7. * "அப்படிச் சொல்லலாமா?"

**பா**லவனத்தம் ஜமீன்தாராக இருந்தவரும், தமிழன்பு மிக்கவரும், இப்போது மதுரையிலுள்ள தமிழ்ச்சங்கத்தின் ஸ்தாபகருமாகிய ஸ்ரீமான் பொ. பாண்டித் துரைசாமித் தேவரவர்கள் ஏறக்குறைய நாற்பது வருஷங்களுக்கு முன் ஒருமுறை தம் பரிவாரங்களுடன் கும்பகோணத்திற்கு வந்திருந்தார்கள். அவருடைய அன்பரும் சேது சம்ஸ்தானத்துச் சங்கீத வித்துவானுமாகிய பூச்சி ஐயங்காரென்று வழங்கும் ஸ்ரீநிவாச ஐயங்காரும் அப்போது அவ

* கலைமகள்.

ருடன் வந்திருந்தார். ஐயங்கார் அக்காலத்தில் சிறுபிராயத்தினர். பட்டணம் சுப்பிரமணிய ஐயரிடத்திலும் மகா வைத்தியநாதையரிடத்திலும் அவர் இசைப்பயிற்சி பெற்றவர். அவர் முன்னுக்கு வந்து புகழுடைய வேண்டுமென்ற விருப்பம் பாண்டித்துரைசாமித் தேவருக்கு மிகுதியாக இருந்தது. அதனால் கும்பகோணத்திலிருந்து திரும்புகையில் அங்கிருந்த அன்பர்களிடம், "இவரைப் பிரகாசப்படுத்த வேண்டும்" என்று சொல்லிவிட்டு அவர் இராமநாதபுரம் சென்றார். ஸ்ரீநிவாசையங்கார் மட்டும் கும்பகோணத்தில் தங்கினர்.

அக்காலத்தில் கும்பகோணம் காலேஜில் ஆசிரியராக இருந்த ஸ்ரீ சாது சேஷையர் முதலிய பல கனவான்கள் சேர்ந்து ஸ்ரீநிவாசையங்காருடைய சங்கீதக் கச்சேரி ஒன்றை நடத்த ஏற்பாடு செய்தனர். கச்சேரி அந்நகரத்துள்ள 'போர்ட்டர் டவுன் ஹாலில்' நடைபெற்றது. நகரத்திலிருந்த கனவான்களும், உத்தியோகஸ்தர்களும், சங்கீத வித்துவான்களும், வேறு பலரும் வந்திருந்தார்கள். கூட்டம் மிகுதியாக இருந்தது; அம் மண்டபம் முழுவதும் எள்ளிட இடமில்லை.

ஸ்ரீநிவாசையங்கார் மிகவும் அருமையாக அன்று பாடினர். திருக்கோடிகாவல் கிருஷ்ணையர் முதலிய வித்துவான்கள் அந்தக் கச்சேரியில் பிடில் முதலியன வாசித்துச் சிறப்பித்தனர்.

சங்கீத ரஸிகர்கள் பலர் நிறைந்த அந்தப்பெரிய நகரத்துக்கேற்றபடி ஸ்ரீநிவாச ஐயங்காருடைய பாட்டு அமைந்திருந்தது. அவருக்கு அன்று ஒரு தனி ஊக்கம் உண்டாயிற்று. கச்சேரிக்கு வந்திருந்த யாவரும் ஐயங்காருடைய கானுமிர் தக் கடலில் மூழ்கித் தம்மையே மறந்திருந்தனர். பலர் தங்கள் வீடுகளில் நடைபெறும் விசேஷங் களுக்கு அவரை வருவித்துப் பாடச் செய்ய வேண்டுமென்று அப்போது தீர்மானித்தனர்.

கச்சேரி முடிவடைந்த பிறகு அந்த வித்து வானைப் பாராட்டிச் சிலவார்த்தைகள் சொல்ல வேண்டுமென்று சாது சேஷையர் என்னிடம் சொன்னார். அப்போது ஸ்ரீநிவாசையங்காரைப் பற்றிப் பின்வருமாறு பேசினேன்:—

"ஆறு சுவைகளும் நிரம்பிய விருந் துணவை உண்டுவிட்டு அந்த உணவைப்பற்றி ஒரு பிரசங்கம் செய்யவேண்டு மென்றால் அது முடியுமா? அதுபோல ஸ்ரீநிவாசையங்கா ரளித்த சங்கீத விருந்தை நுகர்ந்து எல்லாவற் றையும் மறந்திருக்கும் இந்த நிலையில் பேசு வதற்கு எப்படி முடியும்? என்னைப் போலவே எல்லோரும் இருக்கிறீர்களென்பது எனக்குத் தெரியும். சங்கீதத்திற் பெயர்பெற்ற சோழநாட் டிற் பரம்பரையாகச் சங்கீத வித்துவான்கள் வாழ்ந்துவரும் இந்த நகரத்தில், பாண்டி நாட்டி லிருந்து ஒரு வித்துவான் வந்து எல்லோரையும் மயக்கி விட்டாரென்பதை நினைக்கையில்

எனக்கு ஆச்சரியம் மேலிடுகின்றது. இந்தச் சிறு பிராயத்திலேயே இவ்வளவு திறமையோடு விளங்கும் இவர் இன்னும் சிலகாலத்தில் நம்முடைய நாட்டிலுள்ள யாவருடைய உள்ளத்தையும் கவரும் ஆற்றலுடையவ ராவாரென்பதில் சந்தேகமில்லை. இந்த நகரத்தில் முன்பு த்ஸௌகம் ஸ்ரீநிவாசையங்காரென்று ஒரு பழைய சங்கீதவித்துவான் இருந்தார். அவர் தஞ்சாவூரிலிருந்த சிவாஜி மகாராஜாவால் ஆதரிக்கப் பெற்றவர். இந்நகரில் சக்கரபாணிப் பெருமாள் ஸந்நிதியில் அவ்வரசர் கட்டளைப்படி இருந்து பாடி வாழ்ந்து வந்தார். அவரை யாவரும் த்ஸௌகம் சீனுவையங்காரென்றே வழங்குவார்கள். இந்த நகரத்தில் வேறொரு ஸ்ரீநிவாசையங்கார் வந்து எல்லோருக்கும் சங்கீதத் தேனைப் புகட்டிப் புகழ்பெறப் போகிறாரென்பதை நினைந்து அவருடைய இயற்பெயராகிய ஸ்ரீநிவாசையங்காரென்பது சீனுவையங்காரென்று முன்பே குறைந்துவிட்டது போலும்" என்று பேசிப் பாராட்டினேன்; அப்பொழுது புதிதாக இயற்றிய பாடலொன்றையும் சொன்னேன். பிறகு ஸ்ரீநிவாசையங்கார் தக்க சம்மானம் பெற்று ஊர்போய்ச் சேர்ந்தார்.

கும்பகோணத்தில் அக்காலத்தில் பக்தபுரி அக்கிரகாரத்தில் கோபாலையரென்ற ஒரு தமிழ் வக்கீல் இருந்தார். அவர் தஞ்சைச்

சம்ஸ்தானத்தில் சங்கீத வித்துவானக இருந்து புகழ்பெற்ற பல்லவி கோபாலையருடைய பேரர். தம்முடைய பாட்டனர் பெற்ற சர்வமானியங்களை வைத்துக்கொண்டு அவர் சுகமாக வாழ்ந்து வந்தார். அவருக்குச் சங்கீதத்திலும் நல்ல பழக்கம் உண்டு. பல பழைய வித்துவான்கள் இயற்றிய கீர்த்தனங்களும் மற்ற உருப்படிகளும் அவருக்கு ஆயிரக்கணக்காகப் பாடம். பல்லவி கோபாலையருடைய சாகித்தியங்களையும், த்யௌகம் சீனுவையங்காருடைய கீர்த்தனங்களையும் அவர் அடிக்கடி பாடிக்கொண்டேயிருப்பார். கும்பகோணத்துக்கு வரும் சங்கீத வித்துவான்களெல்லோரும் அவர் வீட்டிற்குச் சென்று அவரோடு சிலநேரம் பேசியிருந்து விட்டுப் போவது வழக்கம்; அவரிடமிருந்து சில கீர்த்தனங்களைக் கற்றுக்கொண்டும், தமக்குத் தெரிந்த கீர்த்தனங்களிற் பிழைகள் இருந்தால் அவற்றைத் திருத்திக்கொண்டும் போவார்கள்.

பூச்சி ஐயங்கார் கும்பகோணத்துக்கு வந்த காலத்தில் முற்கூறிய கோபாலையருக்குப் பிராயம் ஏறக்குறைய எழுபதுக்குமேல் இருக்கும். ஐயங்கார் அவரைப் போய்ப் பார்க்கவில்லை; அவரும் கச்சேரிக்கு வரவில்லை.

பூச்சி ஐயங்காரது கச்சேரி நடந்த மறுநாள் யாரோ ஒருவர் கோபாலையரிடம் சென்று, 'த்யௌகம் சீனுவையங்கார் பெயர் இவருடைய

பெருமையை நோக்கிக் குறைந்துவிட்டது' என்று நான் பேசியதைச் சொல்லிவிட்டனர். தம்மிடம் ஐயங்கார் வாராமையால் இயல்பாக அவருக்கு இருந்த கோபத்தீ பின்னும் மூண்டெழுந்தது. "அப்படியா சமாசாரம்! விட்டேனு பார் அந்தப் பிள்ளையாண்டானை!" என்று சொல்லிக் கைத்தடியை எடுத்துக் கொண்டு உடனே புறப்பட்டார். அவருடைய உடலில் முதுமையினால் இருந்த நடுக்கம் அப்பொழுதுண்டான கோபத்தாற் பின்னும் அதிகமாயிற்று; கை நடுங்கக் கால் தள்ளாடக் கோபம் தம்மைச் செலுத்த வீதிவழியே வந்தார்; அங்கவஸ்திரம் விழுந்து கீழே புரண்டது. வரும்போது, "காலம் கலிகாலமாய் விட்டது. வாய்க்கு வந்ததெல்லாம் பேசிவிடுவதா?" என்று சொல்லிக்கொண்டே நடந்தார். அவருடைய வேகத்தையும் கோப நிலையையும் கண்ட சிலர் அவரைப் பின் தொடர்ந்தனர். 'யாரையோ தம் கைத்தடியால் அடித்துவிட்டு மறுகாரியம் பார்க்கப் போகிறார் இவர்' என்று யாவரும் எண்ணினர்.

பக்தபுரி அக்கிரகாரத்துக்கு அடுத்ததாகிய ஸகாஜி நாயகர் தெருவின் இரண்டாவது வீட்டில் நான் வசித்துவந்தேன். கோபாலையர் என் வீட்டை நோக்கி வந்தார். அப்பொழுது காலையில் மணி ஒன்பது இருக்கும். நான் காலேஜுக்குப்போக வேண்டியவனாகையால் வழக்கப்

படி வீட்டின் பின்புறத்திலுள்ள கிணற்றடிக்குச் சென்று ஸ்நானம் செய்துகொண்டிருந்தேன். கோபாலையர் என் வீட்டில் நுழைந்தார். உள்ளே என் சிறிய தந்தையார் இருந்தார். கோபாலையருக்கு அப்பொழுது கண் பார்வை குறைந்திருந்தது. ஆகையால் என் சிறிய தந்தையாரருகில் வந்து அவரை மேலும் கீழும் பார்த்து இன்னாரென்று தெரிந்துகொண்டு மிக்க ஆத்திரத்தோடு, "உங்கள் பிள்ளையாண்டான் இருக்கிறானா?" என்று இரைந்து கேட்டார். அவர் கேட்ட குரல் என் காதில் விழுந்தது. அவர் என் பேச்சினாற் கோபங்கொண்டு வந்திருக்கிறாரென்பதை நான் நன்றாக உணர்ந்துகொண்டேன்; நனைந்த ஆடையுடனே உள்ளே ஓடிவந்து கோபாலையரிடம், "க்ஷமிக்க வேண்டும்! க்ஷமிக்க வேண்டும்!!" என்று பணிவாகச் சொன்னேன்.

"க்ஷமிக்கவா? உங்களுடைய தகப்பனார் இருந்தால் நீங்கள் பேசினதைக் கேட்டுச் சகிப்பாரா? **நீங்கள் அப்படிச் சொல்லலாமா?** த்ஸௌகம் சீனுவையங்கார் பெருமை உங்களுக்கு என்ன தெரியும்? அவர் இருந்தால் இப்பொழுது உங்களை என்ன செய்திருப்பார் தெரியுமா? ஒரு சிறுபையனை இவ்வளவு தூரம் உயர்த்திப் பேசலாமா? அந்த ஸிம்ஹமெங்கே! இந்தப் பூச்சி எங்கே!" என்பவற்றைப்போன்ற பல கேள்விகளைச் சரசரவென்று ஆத்திரத்தோடு

அவர் என்னைக் கேட்டுக்கொண்டே போனார். நான் என்ன சொல்வேன்!

"பொறுத்துக்கொள்ளவேண்டும்; பொறுத்துக்கொள்ளவேண்டும்" என்று கூறி நமஸ்காரம் செய்தேன்.

"நீங்கள் செய்தது எவ்வளவு பெரிய தவறு தெரியுமா?" என்று கேட்டார் கோபாலையர்.

"க்ஷமிக்கவேண்டும்; என்னவோ சொல்லிவிட்டேன். ஒரு வித்தையில் நூதனமாக முன்னுக்கு வருபவர்களை அப்படிப் பேசித்தானே பிரகாசப்படுத்தவேண்டும்? ஒன்றுக்குப் பத்தாகச் சொல்லியே உத்ஸாகத்தை உண்டாக்கவேண்டும்; அதனால் அப்படிச் சொன்னேன். வேறுவிதமாகத் தாங்கள் எண்ணிக்கொள்ளக் கூடாது" என்றேன்.

"எண்ணிக்கொள்வதா? நீங்கள் அப்படிப் பேசினதற்கு வேறு என்ன அர்த்தம்? கீழே உட்காருங்கள்; அந்த மகானாகிய த்ஸௌகம் சீனுவையங்கார் கீர்த்தனங்களைக் கேளுங்கள்" என்று சொல்லி அந்தக் கிழவர் உட்கார்ந்தார்; நானும் ஈரவேஷ்டியோடே உட்கார்ந்தேன். உடனே அவர் த்ஸௌகம் சீனுவையங்கார் இயற்றிய சில வர்ணங்களைப் பாடிக்காட்டினார்; அவை வெவ்வேறு ராகங்களில் அமைந்திருந்தன. அவர் வேறு சில கீர்த்தனங்களையும் பாடினார். நடுங்கிய குரலாக இருந்தும் அவற்றைப் பாடும்பொழுது கையை ஆட்டுவதும்

தலையை அசைப்பதுமாகிய அவர் செயல்கள் அவருடைய உத்ஸாகத்தின் அளவைப் புலப் படுத்தின. மேல் ஸ்தாயியில் பாடத் தொடங்கும் போது அது பிடிபடாமையினால் தம் கையை உயர்த்தி உயர்த்திக் காட்டிக் காட்டி அவர் அபிநயம் செய்தபோது அவர் அடைந்த இன் பத்தை, உண்மையில் தம் சாரீர பலத்தினால் அந்த ஸ்தாயியில் பாடுபவர்கள் கூட அடைந் திருக்கமாட்டார்கள். முதிர்ந்த பிராயத்தில் அவர் அவ்வளவு பாடியது எனக்கு அளவற்ற வியப்பை உண்டாக்கியது. த்ஸௌகம் சீனு வையங்கார்பால் அவருக்கிருந்த பேரன்பும், அவருக்குக் குறைவு நேர்ந்ததைப் போக்க வேண்டுமென்ற எண்ணமும் அவரிடம் புதிய சக்தியை உண்டாக்கின.

"எப்படி இருக்கின்றன, பார்த்தீர்களா ? அவருடைய பெருமையை நீங்கள் உண்மையில் தெரிந்துகொண்டிருந்தால் அப்படிச் சொல்லத் துணிந்திருக்க மாட்டீர்கள். இப்பொழுதாவது த்ஸௌகம் சீனுவையங்காருடைய சக்தியைத் தெரிந்துகொண்டீர்களா?" என்று கோபாலையர் கேட்டார்.

அப்போது நான், "தெரிந்துகொள்ளாமல் என்ன? முன்பும் தெரிந்துகொண்டுதான் இருக் கிறேன். இப்பொழுது பின்னும் நன்றாகத் தெரிந்துகொண்டேன். அவரெங்கே! இவ ரெங்கே! உபசாரத்துக்காக நான் சொன்னதை

ஒரு பொருளாகத் தாங்கள் எண்ணக்கூடாது. பெரியவர்களெல்லாம் ஒரு வஸ்துவைப் பெருமைப் படுத்தவேண்டுமென்றால் இப்படிப் பாராட்டிச் சொல்வது வழக்கம். மாளிகைகள் மேருவைக் காட்டிலும் சிறந்தவை என்று சொல்வார்கள்; அதனால் மேருவுக்குப் பெருமை குறைந்து போகுமா? மேருவை எடுத்துச் சொல்வதனாலேயே அதன் பெருமை பின்னும் விளங்கும். அதுபோல இதுவும் த்ஸௌகம் சீனுவையங்காரை நான் குறைவாகக் கூறியதாகாது; இப்படிக் கூறியதால் பின்னும் அவருடைய பெருமையே விளங்கும்'' என்று சொன்னேன்.

''அதெல்லாம் உங்கள் தமிழ்ப் புஸ்தகங்களில் வைத்துக்கொள்ளுங்கள்; சபையிலே பேசுவதென்றால் அப்படி யோசியாமல் சொல்லி விடலாமா? தப்பு தப்புத்தான்'' என்று தீர்ப்புக் கூறினர் கோபாலையர்.

அதற்குமேல் நான் என்ன சொல்ல முடியும்? ஒருவாறு சமாதானங் கூறி அனுப்பினேன். பழைய வித்துவானிடத்தில் அந்தக் கிழவருக்கு இருந்த அன்பும், அவ்வித்துவானுடைய பெருமையைக் காப்பாற்றுவதில் அவருடைய சக்திக்கு மேற்பட்டு விளங்கிய பற்றும், அப்பெருமைக்குக் குறைவு நேருங் காலத்தில் உண்டான மானமும் இந்நிகழ்ச்சியால் நன்றாக வெளியாயின.

## 8. பொன்காத்த கிழவி

*தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள ஐயம்பேட்டைக்கு அருகில் காவிரியாற்றின் தெற்கே குடமுருட்டியாற்றுக்கு வடகரையில் உள்ளிக்கடை யென்ற சிற்றூர் ஒன்று உண்டு. அதில் உள்ள அக்கிரகாரத்தில் முற்காலத்தில் பெரும்பான்மை அஷ்ட ஸகஸ்ர (எண்ணாயிர) வகுப்பினராகிய பிராமணர்களும் சிறுபான்மை வேறுவகைப் பிராமணர்களும் வாழ்ந்து வந்தார்கள்.

பல வருஷங்களுக்குமுன் அந்த அஷ்ட ஸகஸ்ர வகுப்பினருள்ளே பெருஞ்செல்வர்களுடைய குடும்பம் ஒன்று இருந்தது; அக்குடும்பத்தினருக்கு மிகுதியான நிலங்களும் பெருந்தொகையாகிய செல்வமும் இருந்தன; அவர்களிடமிருந்த பணத்தைப் பிற்காலத்தில் சகோதரர்கள் பங்கிட்டுக்கொண்டபோது மரக்காலால் அளந்து பிரித்துக்கொண்டார்களென்று சொல்லுவார்கள். ஆதியில் அந்தச் சகோதரர்கள் எல்லோரும் சேர்ந்து ஒரே குடும்பமாக வாழ்ந்து வந்தார்கள்.

அவர்கள் தம்முடைய பணத்தைப் பெரிய குடங்களிற் போட்டு வைப்பது வழக்கம். அவற்றை நிலத்திற் புதைத்தும் வைப்பார்கள். ஒரு குடத்துக்கு இவ்வளவு ரூபாய் என்ற கணக்கு உண்டு.

---

* ஆனந்தவிகடன் தீபாவளி மலர், 1936.

ஒரு சமயம் உள்ளிக்கடைக்குச் சிலமைல் தூரத்தில் உள்ள ஓர் ஊரில் வசித்துவந்தவரும் முற்கூறிய குடும்பத்தினருக்கு நெருங்கிய பந்துவுமாகிய ஒரு கனவான் வீட்டில் ஒரு கல்யாணம் சிறப்பாக நடைபெற்றது. ஏழை பணக்காரரென்ற வேறுபாடின்றி விசேஷ காலங்களில் பந்துக்களை அழைப்பதும், அவர்களுடைய வீட்டிற்குப் பந்துக்களெல்லோரும் சென்று தம்மாலான உதவிகளைச் செய்வதும் அக்காலத்து வழக்கங்கள். ஆதலின் உள்ளிக் கடையிலிருந்து அக்குடும்பத்திலுள்ளவர்கள் கல்யாணம் நடைபெறும் ஊருக்குச் சென்றுவிட்டனர். வீட்டிற்குக் காவலாக ஒரு கிழவியையும் அவளுக்குத் துணையாக வேலைக்காரர் சிலரையும் வைத்துவிட்டுச் சில தினங்களில் திரும்பி வருவதாகச் சொல்லி அவர்கள் போனார்கள்.

கல்யாணத்தின் நாலாவது நாள் இரவு மிகவும் சிறப்பாக ஊர்வலத்துக்கு வேண்டிய ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்தக் காட்சியைக்கண்டு களிக்கவேண்டுமென்றே சுற்றுப்புறத்திலுள்ள கிராமங்கள் பலவற்றிலிருந்து ஜனங்கள் வந்து கூடினார்கள். உள்ளிக்கடையில் கிழவியுடனிருந்தவர்கள் அன்றிரவு மட்டும் போய் ஊர்வலத்தைப் பார்த்துவிட்டு வருவதாக அவளிடம் உத்தரவுபெற்றுப் போய்விட்டார்கள். அதனால், கிழவி அன்றிரவு தனியே இருக்க நேர்ந்தது.

அக்குடும்பத்தில் அளவற்ற பணம் உண்டென்பதை அறிந்த சில திருடர்கள் எப்படியேனும் அவ்வீட்டிற் புகுந்து கொள்ளை யடிக்க வேண்டுமென்று பல நாளாக எண்ணி யிருந்தார்கள் ; எப்பொழுதும் பலர் கூடி யிருக்கும் அவ்வீட்டிற் புகுவது அபாயகரமான தென்பதை அறிந்தவர்களாதலின் தக்க சமயத்தை எதிர்பார்த்திருந்தார்கள்.

அயலூரில் நடைபெறும் கல்யாணத்தின் பொருட்டு எல்லோரும் வீட்டை விட்டு வெளியூருக்குச் சென்றிருப்பது அத்திருடர்களுக்கு எவ்வகையாலோ தெரிந்துவிட்டது. ஆதலின், 'இதுவே நம் எண்ணம் கைகூடுதற்கு நல்ல சமயம்' என்றெண்ணி அன்றிரவு அவ் வீட்டிற்குச் சென்று கொள்ளையடிக்க ஏற்பாடு செய்தார்கள்.

பத்துத் திருடர்கள் ஒன்று சேர்ந்து அன்றைத் தினம் பாதி இரவில் உள்ளிக்கடைக்கு வந்தனர். ஏணியைச் சார்த்தி வீட்டிற்குள்ளே முற்றத்தின்வழியே இறங்கினார்கள். யாரேனும் சிலர் அங்கே இருத்தல் கூடுமென்பது அவர்கள் எண்ணம். விளக்கை ஏற்றிப் பார்த்தார்கள். அவர்கள் கண்ணில் ஒருவரும் படவில்லை. அப்பால் ஓரிடத்தில் கிழவிமட்டும் படுத்திருப்பதைக் கண்டார்கள்.

கிழவியோ அன்றிரவு ஒரு நிமிஷமும் தூங்கவில்லை. திருடர்கள் வருவதை அவள்

அறிந்துகொண்டு கூச்சலிடாமல் தூங்குகிற வளைப் போலவே சிறிதும் படபடப்பின்றிப் படுத்திருந்தாள். திருடர்கள் அவளை அணுகி எழுப்பினார்கள். அவள் திடீரென்று திடுக்கிட்டு எழுபவள்போல எழுந்து, "நீங்கள் யார்? தெரியவில்லையே!" என்றாள்.

திருடர்கள்:—உன்னைத் தவிர இங்கே இன்னும் யார் யார் இருக்கிறார்கள்? அதை முதலில் சொல்லிவிடு. கூச்சல் போட்டாயோ இப்படியே உன் கழுத்தைத் திருகிக்கொன்று விடுவோம். இந்த வீட்டிலுள்ள பணத்தைத் திருடிக்கொண்டு போவதற்காகவே நாங்கள் வந்திருக்கிறோம்.

கிழவி:—அப்படியா! சந்தோஷம்! அப்படித் தான் செய்ய வேணும்! அப்படித்தான் செய்ய வேணும்! நல்ல யோசனை செய்தீர்கள்!

கிழவி இப்படிச் சொல்லிக்கொண்டே சிரித்தாள்.

திருடர்கள் :— என்ன பாட்டி? எங்களைப் பரிகாசம் செய்கிறாயே!

கிழவி:—இல்லை, இல்லை. எதற்காக உங்களை நான் பரிகாசம் செய்கிறேன்? இந்த வீட்டுப் பிள்ளைகள் பண்ணும் அக்கிரமங்கள் என்னால் பொறுக்கமுடியவில்லை. நான் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறேன். வேளைக்குச் சோறு போடுவதில்லை; கட்டுவதற்குப் புடைவை வாங்கித் தருவதில்லை; ஏதாவது வேண்டுமென்று கேட்டால் என்னைக் கோபித்துக்

கொள்ளுகிருர்கள்; சில சமயங்களில் அடித்தும் விடுகிருர்கள். இதனுல் ஒரு நாளைக்கு நூறு தடவை என் பிராணன் போய்ப் போய் வருகிறது. எப்படியோ நாளைக் கடத்திக்கொண்டு வருகிறேன். இதைக் காட்டிலும் உங்கள் கையால் மரணம் சம்பவித்தால் அதுவே எனக்கு நல்லது. யாருக்காக நான் இனி இருக்க வேண்டும்? இந்தப் பாவிகள் என்னைப் படுத்தி வைக்கும் பாட்டுக்கு இந்தப் பணத்தை எந்த மகாராஜனவது வந்து வாரிக்கொண்டு போக மாட்டான என்று என் வயிறெரிய ஒவ்வொரு நாளும் பிரார்த்தித்துக்கொண்டு இருந்தேன். நல்ல வேளையாக இன்று நீங்கள் வந்து சேர்ந்தீர்கள்!

திருடர்கள் இதைக் கேட்டு மிக்க ஆச்சரியம் அடைந்தார்கள். அவர்களுள் சிலருக்கு மனத்திற் சிறிது இரக்கமும் உண்டாயிற்று.

திருடர்கள் :—இங்கே இன்னும் வேறு யார் இருக்கிருர்கள்?

கிழவி:—நான்மட்டும் இருக்கிறேன். இதிலேயே பார்த்துக் கொள்ளுங்கள். 'ஏதடா, கிழவி தனியே இருக்கிருளே; அவளுக்கு யாராவது துணையாக இருக்க வேண்டாமா?' என்று கூட அவர்கள் நினைக்கவே யில்லை. அவர்கள்மட்டும் கல்யாண விருந்து சாப்பிடுவதற்குப் போய்விட்டார்கள். எனக்கோ இங்கே கண்ணும் தெரியவில்லை ; காதும் கேட்கவில்லை;

காலோ தள்ளாடுகிறது. இந்த நிலையில் நானாகச் சமைத்துக் கொண்டு எப்படிச் சாப்பிடுவது? இந்த நாலு நாளாய் ஆகாரமேயில்லை. வயிற்றைப் பிடித்துக்கொண்டு தெய்வமே யென்று கிடக்கிறேன். நிமிஷத்துக்கு நிமிஷம் சாபம் இட்டுக்கொண்டும் இருக்கிறேன். அந்தச் சாபத்தின் பலனாகத்தான் பகவான் உங்களை அனுப்பியிருக்கிறார். வேணும்; நன்றாக வேணும்; இங்கே ஒரு துரும்பைக்கூட நீங்கள் விட்டு வைக்காமல் எடுத்துக்கொண்டு போங்கள். அப்பால் அவர்கள் சோற்றுக்குந் தண்ணீருக்கும் என்னைப் போலத் திண்டாட வேணும்; அதைநான் கண்ணாலே பார்க்கவேணும்.

திருடர்கள்:—அவர்கள் பணத்தை எங்கே வைத்திருக்கிறார்கள் தெரியுமா?

கிழவி:—தெரியாமல் என்ன? நன்றாகத் தெரியும். என் புருஷர் சம்பாதித்த சொத்துத்தானே இவ்வளவும்? நான்தான் இத்தனை பணத்தையும் ஆண்டுகொண்டிருந்தேன். இப்பொழுது நண்டல் வண்டல்களெல்லாம் அதிகாரத்துக்கு வந்துவிட்டன. ஏனென்று கேட்பார் இல்லாமல் நான் நிற்கிறேன்.

இந்த வார்த்தைகளைச் சொல்லும்போது கிழவி தேம்பித் தேம்பி அழலானாள்.

திருடர்கள்:—அழாதே, பாட்டி! அழாதே! பணம் எங்கே இருக்கிறது? சொல்.

கிழவி :—பணம் அதோ அந்த அறையில் இருக்கிறது. அதன் சாவியும் என்னிடத்திலேதான் இருக்கிறது. வாருங்கள், காட்டுகிறேன்.

கிழவி இவ்வாறு சொல்லிவிட்டு ஓர் அறையைத் திறந்து திருடர்களை உள்ளே அழைத்துச் சென்றாள். அவர்கள் யாவரும் ஒருங்கே அவ்வறைக்குள் நுழைந்தார்கள். அவர்களுள் ஒருவனை யொருவன் நம்பவில்லை. தனக்குத் தெரியாமல் வேறொருவன் அதிகமாகப் பணத்தை யெடுத்து ஒளித்துவைத்துக் கொள்ளக் கூடுமென்று ஒவ்வொருவனும் எண்ணினன்.

கிழவி நடக்கும்போதே கீழே விழுந்துவிடுவாளோ என்று திருடர்கள் எண்ணினார்கள். அறைக்குள்ளே சென்று, "இங்கே தான் கீழே புதைத்திருக்கிறார்கள். இங்குள்ள பானைகளில் சில சொத்து இருக்கும்" என்றாள் கிழவி. தரையைத் தோண்டுவதற்குத் திருடர்களிடம் கருவியொன்றும் இல்லை. "கடப்பாரை இல்லையே" என்றார்கள் திருடர்கள். "இதோ நான் கொண்டு வந்து தருகிறேன்" என்று சொல்லிக் கிழவி மெல்லச் சுவரைப் பிடித்துக்கொண்டு வெளியே வந்தாள். கதவைப் பிடித்துக்கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்தாள். கதவின் சங்கிலியைப் பிடித்து நிலைக்கு வெளியில் கால் வைத்தாளோ இல்லையோ, அவளுக்கிருந்த தளர்ச்சி மாயமாய்ப் பறந்தோடி விட்டது. சடக்கென்று

கதவை இழுக்துச் சங்கிலியை மாட்டிப் பூட்டி விட்டாள்.

அப்பால் வீட்டிற்கு வெளியே ஓடி வந்து தெருவில் நின்று கூச்சல் போடத் தொடங்கி னள். ஒருவர்பின் ஒருவராக அக்கிரகாரத்தி லுள்ளவர்களும் அடிச்சேரியிலுள்ள குடியான வர்களும் வந்து கூடிவிட்டார்கள். எல்லோரும் உள்ளே புகுந்து கதவைத் திறந்து திருடர்களைச் சூழ்ந்துகொண்டனர். ஊரினருடைய பெருங் கூட்டத்துக்கு நடுவில் அத்திருடர்கள் என்ன செய்ய முடியும்? அவர்கள் யாவரையும் ஊரார் பிடித்துக் கட்டி ஐயம்பேட்டையில் இருந்த போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோனார் கள். விசாரணை நடை பெற்றது. திருடர்கள் தண்டனை அடைந்தனர்.

கிழவி திருடர்களைப் பிடிப்பதற்குச் செய்த சாதுரியத்தை அவள் கூறக் கேட்ட யாவரும் வியந்தனர். அக்காலத்தில் தஞ்சாவூரில் இருந்த கலெக்டர் இதைக் கேட்டு வியப்புற்று மிக வும் பாராட்டி அவளுக்கு ஒரு பொற்பதக்கம் அனுப்பினார்.

[இச் செய்தியைப் பலர் ஆச்சரியத்தோடு சொல் வதை என் இளமைக் காலத்தில் கேட்டிருக்கிறேன்.]

---

Printed at the Guardian Press, Ltd., 158-B, Broadway Madras.

## வேறு வசன நூல்கள்

புத்தசரித்திரம், பௌத்ததருமம், பௌத்த சங்கம் : ரூ. அ. பை.

புத்த தர்ம சங்கமென்னும் மும்மணிகளைப் பற்றிப் பல நூல்களிலுள்ள விஷயங்களைத் தொகுத்து எழுதப்பட்ட புத்தகம். மணிமேகலை முதலிய தமிழ் நூல்களிலுள்ள செய்யுட்கள் இடையிடையே அமைந்துள்ளன. ... 0 12 0

மணிமேகலைக் கதைச்சுருக்கம்:

ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகிய மணிமேகலையின் கதை எளிய நடையில் எழுதப்பட்டுள்ளது. ... 0 10 0

உதயணன் சரித்திரச் சுருக்கம் :

பழந்தமிழ்க் காப்பியமாகிய பெருங்கதையின் வசனச் சுருக்கம். அந்நூலிற் குறையாகவுள்ள பகுதிகளுக்கு வேறு நூல்களிற் கண்ட செய்திகளை ஆதாரமாகக் கொண்டு கதைத் தொடர்பு விடாமல் எழுதப்பட்டது. ... 1 0 0

4. திருவாவடுதுறை யாதீனத்து மகா வித்துவான் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம்-முதற்பாகம் ...

5. ஷை ஷை இரண்டாம் பாகம் ...

6. நான் கண்டதும் கேட்டதும் :
12 சிறுவரலாறுகள் அடங்கியது ...

7. புதியதும் பழையதும் :
20 சிறு வரலாறுகள் அடங்கியது ...

8. திருவள்ளுவரும் திருக்குறளும்
திருக்குறளைப்பற்றி அகச்சான்றுகளாலும் புறச்சான்றுகளாலும் அறியப்படும் செய்திகளைக்கொண்டு செய்த பிரசங்கம்; சிறிய ஆராய்ச்சி நூலாகக் கருதப் படுவது.

கிடைக்குமிடம்:—

தியாகராஜ விலாசம்
67, பிள்ளையார் கோயில் தெரு,
திருவேட்டீசுவரன் பேட்டை,
திருவல்லிக்கேணி, சென்னை.